# கல்கி

நினைவு மலர்









டிசம்பர்
4.1955

KALKI

4 அணா



வசந்தி வீட்டிலேயே
தங்குகிறாள்
சந்தையில்

சீதா! வசந்தி எங்கே?

வசந்தியின் வீட்டிற்குப் போய் பார்க்கிறேன்

வசந்தி! வீட்டிலே என்ன செய்து கொண்டிருக்கிறாய்?

நான் சந்தைக்கு எப்படிப் போக முடியும் சீதா? என் துணிகளெல்லாம் கிழிந்திருக்கிறது!

ஹும்—நான் அதைப்பற்றி தான் பேசவேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தேன்.

நீ துணிகளை துவைக்கிறபோது அவைகளை அடித்துத் துவைக்கிறாயா, வசந்தி?

ஆமாம். இல்லாவிட்டால் எப்படி அவைகளைச் சுத்தமாகச் செய்ய முடியும்.

ஸன்லைட் சோப்பை உபயோகப்படுத்து—நான் செய்கிறபடி. அப்பொழுது அடித்துத் துவைக்க வேண்டியதில்லை. அடித்துத் துவைத்தால் துணிகளிலுள்ள நூலிழைகள் தேய்ந்து அவைகள் சீக்கிரம் கிழிந்துவிடும்.
(கிழிந்த நூலிழைகள் பெரிதாக்கிக் காண்பிக்கப்பட்டது.)

பார்த்தாயா எவ்வளவு சுத்தமாக என் துணிகளை ஸன்லைட் சோப் வெளுத்திருக்கிறது!

இன்றே நான் ஸன்லைட் சோப்பை வாங்குகிறேன்!

ஸன்லைட் சோப்பின் ஏராளமான நுரை துணிகளை அடித்துத் துவைக்காமலேயே வெண்மையாகவும், பிரகாசமாகவும் செய்கிறது. இப்பொழுது என் துணிகள் நீடித்திருக்கின்றன. இதனால் ஸன்லைட் பணத்தை மிச்சப்படுத்துகிறது.

SUNLIGHT
SOAP



ஸன்லைட் சோப் துணிகளை நீடித்திருக்கச் செய்கிறது
இந்தியாவில் தயாரித்தது

S. 236-50 TM




# ஜெமினி ஸ்டுடியோஸ்

இன்பமளிக்க இனிய
படங்களைத் தயாரிப்பவர்கள்




ஸிம்ஸன் & கோ லிட்.
மதராஸ் - 2

கிளைகள்: பெங்களூர், • திருச்சி, • உதகை • ஹைதராபாத்

விரைவில் எதிர்பாருங்கள் !

விஜயாவின்

# குணசுந்தரி

தமிழ்

டைரக்ஷன்: K. காமேஸ்வர ராவ் B.A.

தயாரிப்பு:

நாகிரெட்டி • சக்ரபாணி





# சதரன் ரோட்வேஸ் லிட்.

(டி. வி. எஸ். ஸ்தாபனம்)

கால அட்டவணைப்படி
இயங்கும்
**பஸ்**





இந்தியாவிலேயே
தலைசிறந்து
பணியாற்றி விளங்கும்
"கால அட்டவணை"

## லாரி

எமது ஒன்றே

*

வருடந்தோறும்
1½ கோடி மைல்கள்
குறிப்பிட்ட நேரத்தில்
செல்வது எமது சிறப்பு

# சதரன் ரோட்வேஸ்

லிமிடெட்

(ரஸ்தா போக்குவரத்து எமது பணி)

மதுரை

# பொருளடக்கம்


| | | |
|---|---|---|
| ரசிகமணி டி. கே. சி. | (முகப்புப் படம்) | |
| சரித்திர புருஷர் | (தலையங்கம்) | 9 |
| ருஷ்யத் தலைவர்களின் வாக்குறுதி | ... | 10 |
| என்ன சேதி | ... | 12 |
| அமோக வரவேற்பு (கார்ட்டூன்) | சாமா | 11 |
| இந்திய சோவியத் நட்பு வாழ்க! | ... | 14 |
| ரஷ்யத் தலைவர்கள் (போட்டோ) | ... | 15 |
| காந்தி கலை மன்றத் திறப்பு விழா | (படங்கள்) | 16 |
| நேப்பாள மன்னர் | ... | 18 |
| ஆற்றின் மோகம் | சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் | 21 |
| கண்ணீரின் கதை | சோமு | 22 |
| சிவன் கீர்த்தனைகள் | செம்மங்குடி சீனிவாச ஐயர் | 27 |
| "கௌரிக் கண்மணி!" (போட்டோ) | ... | 29 |
| டி. கே. சி. யின் கடிதங்கள் | ... | 30 |
| அருமைத் தம்பி | ரா. வேங்கடராமய்யர் | அ32 |
| ரகுபதி ராகவ | ராஜாஜி | இ32 |
| பால்ய ஸ்நேகிதர் | சுவாமி ருத்ரானந்தா | ச32 |
| மாயமாய் வந்தான் | கல்கி | 34 |
| துறவி (முதற் பரிசுக் கதை) | சுகி | 36 |
| கல்கி பேசுகிறார் | ... | 48 |
| சித்திரத்தில் மலர்ந்த சிந்தனை | மணியம் | 49 |
| பொன்னி தந்த செல்வர் 1 | மணியம் | 50 |
| என் ராஜினாமா | கல்கி | 55 |
| சீக்கியர்களும் இந்துக்களும் | பகீரதன் | 58 |
| புஷ்பக் காட்சி | ... | 67 |
| அமரதாரா | ஆனந்தி | 71 |
| பர்மா ரமணி (பாப்பா மலர்) | அழ. வள்ளியப்பா | 83 |
| சிவகாமியின் சபதம் (படங்கள்) | மணியம் | 85 |
| பொன்னி தந்த செல்வர் 2 | மணியம் | 86 |
| மயில்விழிமான் | மணியம் | 88 |
| கடிதம் | டி. எஸ். கே. | 91 |
| பொன் உள்ளம் | கிருஷ்ணா | 97 |
| மனமாற்றம் | சி. பி. சுப்பிரமணியம் | 102 |
| ஆற்றங்கரையினிலே | ரா. பி. சேதுப்பிள்ளை | 107 |
| ரவி சந்திரிகா | சோமு | 111 |


"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.

கல்கி நினைவு மலர்

டிசம்பர். 4. 1955

மணியம்





# எச்சரிக்கை

ரஸ்தாவில் எவ்வித அபாயமும் நேரிடலாம்.
மற்றவர்களால் நஷ்டம் ஏற்படலாம்.
மேலும் சட்டப்படி இன்ஷூர் செய்தாக வேண்டும்.

எமது பணி



தி மதராஸ் மோட்டார் இன்ஷூரன்ஸ்
கம்பெனி லிட்.,
( டி. வி. எஸ். ஸ்தாபனம் )
சென்னை.

TV82-76 TM

மலர் 15
இதழ் 18

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்

மன்மத ஆண்டு
கார்த்திகை 18

# சரித்திர புருஷர்

ஒரு நாட்டின் சரித்திரப் போக்கு அந்த நாட்டுக்கு வேண்டிய மேதைகளை உருவாக்குகிறது என்றும், ஒரு நாட்டின் மேதைகள் அந்த நாட்டின் சரித்திரப் போக்கை உருவாக்குகிறார்கள் என்றும் இரண்டு விதமாகச் சொல்வதுண்டு. இப்படிப் பட்ட மேதைகளையே சரித்திர புருஷர்கள் என்று உலகம் கொண்டாடுகிறது.

சாதாரணமாக ஒரு நாட்டின் அரசியல் அமைப்பை நிர்ணயிக்கும் தலைவர்களையே அவர்களுடைய ஜீவிய காலத்தில் சரித்திரப் பெரியார்கள் என்று மக்கள் உணர்ந்து பாராட்டுகிறார்கள். இதற்கு அடுத்தபடியாக விஞ்ஞானப் புரட்சிகளையும், புதிய சாதனைகளையும் கண்டு பிடிக்கிற விஞ்ஞானிகளைச் சரித்திர புருஷர்கள் என்று கொண்டாடுகிறார்கள். கலைஞர்களையும், இலக்கிய மேதைகளையும் சரித்திர புருஷர்கள் என்று உணர்ந்து போற்றுவதற்கு மக்களுக்குக் கொஞ்ச நாள் பிடிக்கிறது. ஆனால், பேராசிரியர் கிருஷ்ணமூர்த்தி சம்பந்தப்பட்டவரை அவருடைய ஜீவியத்திலேயே அவர் ஒரு மேதை என்பதைத் தமிழ் மக்கள் நன்றாக உணர்ந்து பாராட்டினார்கள். இதற்குக் காரணம் அவருடைய மேதை ஒரே சமயத்தில் பல அம்சங்களிலும்—இலக்கியம், கலை, அரசியல், பத்திரிகைத் தொழில் முதலிய எல்லாத் துறைகளிலும்—ஈடுபட்டு ஒப்பற்ற பிரகாசத்துடன் ஒளி வீசியதுதான்.

கடந்த முப்பது ஆண்டுகளில் பேராசிரியர் கல்கி ஈடுபடாத முக்கிய அரசியல் இயக்கமோ, இலக்கியப் புரட்சியோ அல்லது கலை உத்தாரணமோ தமிழ் நாட்டில் இல்லை என்று உறுதியோடு சொல்லலாம். தமிழ் நாட்டின் சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவங்கள் எல்லாம் கல்கியின் பெருந் துணையை நாடின. அதேபோல கல்கி அவர்களின் பேனாவும் சரித்திரப் பிரசித்தி பெற்ற சம்பவங்களை நாடிற்று. சூழ்நிலை அவரை உருவாக்கிற்று. அவர் சூழ்நிலையை உருவாக்கினார். இதுவே இந்தச் சரித்திர புருஷரின் தனிச் சிறப்புப் பொருந்திய வாழ்க்கை விசேஷம்.

பாரதியார் ஆரம்பித்த தமிழ் மறுமலர்ச்சியை அற்புதமான முறையில் வளர்த்துப் பாதுகாத்து, தமிழ்ப் பயிர் கப்பும் கிளைகளும் வீசி உல்லாசத்தோடு படரும்படி செய்த பெருமை கல்கி அவர்களைச் சாரும். ராஜாஜி வகுத்த அரசியல் நெறி, டி. கே. சி. வகுத்த இலக்கியப் பாதை, தமிழ் நாட்டு மக்களின் உள்ளத்திலே ஏற்பட்ட விழிப்பிலிருந்து பிறந்த நூதனக் கலையாக்கங்கள்—இத்தனைக்கும் கல்கி செய்த சேவை தமிழ் நாட்டின் சரித்திரத்தில் நிரந்தரமாக நிற்கும். அவர் ஒரு தனி மனிதர். ஆனால் அவருடைய பேனா ஒரு பெரிய ஸ்தாபனம்.

கூர்மையான மதிநுட்பம், எந்தப் புதிய விஷயத்தையும் சீக்கிரமாகக் கிரகித்துக் கொள்ளும் திறன், அபூர்வமான தெளிவு, எளிய இனிய தமிழ்நடை, சுருக்கென்று உள்ளத்திலே பாயும் நகைச்சுவை, எல்லாவற்றிற்கும் மேலாகத் தமிழ் மொழியினிடத்திலும், தமிழ் மக்களிடத்திலும், தமிழ்க்குலத்தின் எதிர்கால முன்னேற்றத்திலும் ஈடு இணையற்ற பக்தி—இத்தனையும் ஒருங்கே சேர்ந்த உன்னதக் கலைஞர் கல்கி. அவருடைய கட்டுரைகள், கதைகள், நவீனங்கள், இலக்கிய மதிப்புரைகள், கலை விமர்சனங்கள், பிரயாண வரலாறுகள்—எல்லாவற்றிலும் இந்தத் தனிப் பண்புகள் அனைத்தும் பூரணப் பொலிவுடன் பிரதிபலிப்பதைக் காணலாம். நாட்டுக்கு எது எது எவ்வெப்பொழுது தேவையோ அதை அந்தந்தக் காலத்தில் நாடித் தேர்ந்து தனது உடைமையாக்கித் தமது எழுத்திலே கையாளக்கூடிய ஆற்றல் அவருக்கு அபாரமாக இருந்தது. எனவே, அரசியல், இலக்கியம், கலை ஆகிய மூன்று பெருந் துறைகளோடு,

பத்திரிகைத் துறையிலும் வேறு யாரும் செய்யாத அளவுக்கு அத்தனை பெரிய சேவையை ஒரு தனி மனிதராக நின்றே அவரால் செய்ய முடிந்தது.

தமிழ்ப் பத்திரிகை உலகில் கல்கி அவர்கள் காலடி எடுத்து வைத்தபோது, நம்முடைய பத்திரிகைகள் ஆரம்ப தசையில் இருந்தன. முன் உதாரணம் என்று எதிரே வைத்துக் கொண்டு பின் தொடருவதற்கு வேண்டிய வழிகளோ சாதனைகளோ அவருக்கு இல்லை. இந்தச் சூழ்நிலையில் பல சோதனைகள் தானே செய்து, புதிய புதிய வழிகளைத் தானே கண்டு பிடித்து, மக்களுக்கு எப்படி எழுதினால், எதை எந்த விதத்தில் சொன்னால் மனத்துக்குப் பிடிக்கிறது என்பதையெல்லாம் ஆராய்ந்து நூதன மார்க்கங்களை வகுத்தார் கல்கி. இன்று எந்தத் தமிழ்ப் பத்திரிகையைப் புரட்டிப் பார்த்தாலும், கல்கி கண்ட வழியின் ஏதாவது ஒரு அம்சத்தை நிச்சயம் அதில் காணலாம்.

அந்தப் பேராசிரியர் மறைந்து இந்த டிசம்பர் ஐந்தாம் தேதிக்கு ஒரு வருஷம் கடந்து விட்டது. அவர் உருவாக்கிய ஸ்தாபனம், அவர் ஆரம்பித்த இந்தப் பத்திரிகை அவருடைய இலட்சியங்களையும், அவருடைய எண்ணங்களையும் பிரதிபலித்து வளர்வதற்கு அவரே என்றென்றும் வழிகாட்டியாக நிற்பார் என்றும், அவருடைய பெயரைத் தாங்கி நிற்கும் அவருடைய நினைவுச் சின்னமான இந்தப் பத்திரிகை மேலும் மேலும் முன்னேறுவதற்குத் தமிழ்க்குலம் துணை நிற்கும் என்றும் உறுதியாக நம்புகிறோம். மறைந்த பேராசிரியருக்கு நமது மனமார்ந்த அஞ்சலியை இந்த நினைவு மலர்க் காணிக்கையிலே செலுத்திக் கொள்ளுகிறோம்.

# ருஷ்யத் தலைவர்களின் வாக்குறுதி

**பா**ரத நாட்டுக்கு விஜயம் செய்து பல முக்கிய நகரங்களையும் பார்வையிட்ட ருஷ்யப் பிரதமர் புல்கானின், ருஷ்யா கம்யூனிஸ்ட் கட்சிக் காரியதரிசி ஸ்ரீ குருஷ்சேவ் இருவருக்கும் இந்திய மக்கள் ராஜோபசாரம் செய்து தங்கள் அன்பையும் மதிப்பையும் வெளியிட்டனர். வெளிநாட்டுத் தலைவர்கள் எவருக்கும் இந்திய மக்கள் இதற்கு முன் இத்தகைய மகத்தான வரவேற்பு அளித்ததில்லை. ருஷ்யத் தலைவர்களுக்குப் பாரத நாட்டில் நிகழ்ந்த வரவேற்பு வைபவங்களைக் கண்டு அவர்கள் மாத்திரமல்ல, ருஷ்யா மாத்திரமல்ல, உலகமே பிரமித்து விட்டது.

புது டில்லி, பம்பாய், புனா, பெங்களூர், சென்னை, கோயமுத்தூர் முதலிய பல நகரங்களிலும் லட்சக்கணக்கில் ஆடவர்களும், பெண்களும், குழந்தைகளும் புஷ்பமாரி பெய்து ருஷ்யத் தலைவர்களை வரவேற்றார்கள்.

அவ்வித வரவேற்புகளுக்குக் காரணம் வெறும் சம்பிரதாயமோ, ஆடம்பரமோ அல்ல. சுதந்திர இந்தியாவுக்கு ஒரு மாபெரும் வல்லரசின் தலைவர்கள் வருவது இதுதான் முதல் தடவை என்பதும் முக்கிய காரணம் அல்ல. ஆனால், மகத்தான ஆயுத வலிமை பொருந்திய ருஷ்ய வல்லரசின் தலைவர்கள் சுதந்திர பாரதத்தினிடமும் பாரத மக்களிடமும் தங்களுடைய நல்லெண்ணத்தையும் நட்பையும் நிரூபித்துக் காட்டுவதற்காக வந்தார்கள். உலக சமாதானமே தங்களுடைய லட்சியம் என்பதை இந்தியாவில் பல மேடைகளிலும் உலகம் அறியப் பிரகடனம் செய்தார்கள். இந்தியாவின் பஞ்சசீலக் கொள்கையில் தங்களுக்குப் பூரண உடன்பாடு உண்டு என்பதைத் தெரிவித்தார்கள்.

குறிப்பாக, ஸ்ரீ குருஷ்சேவ் பெங்களூரில் நிகழ்த்திய உரையில், ருஷ்யாவின் அரசியல் கொள்கையை எவ்வித சந்தேகத்துக்கும் இடமின்றித் திட்ட வட்டமாக அறிவித்தார்.

"சர்வதேச நெருக்கடியைத் தீர்த்து உலக நாட்டு மக்களிடையே நெருங்கிய நட்பை உண்டாக்குவதே ருஷ்யாவின் விருப்பம். மானிட வர்க்கம் உய்வதற்கும் உன்னத வாழ்க்கை நடத்துவதற்கும் அதுதான் வழி. யுத்த தளவாட உற்பத்தியைப் பெருக்குவதிலும் ஒரு நாட்டினரை மற்றொரு நாட்டினர் அழிக்க முற்படுவதிலும் போட்டி போடுவதைக் காட்டிலும், மானிடவர்க்கம் சுபிட்சமாக வாழ வகை தேடுவதில் போட்டியிடுவதே சிறந்தது" என்று கூறியிருக்கிறார்.

**ஸ்ரீ** குருஷ்சேவ் மற்றொரு முக்கிய விஷயத்தையும் உலகம் அறியத் தெளிவாகக் குறிப்பிட்டார். எல்லா அணு ஆயுதங்களையும் நாசம் செய்துவிட வேண்டும் என்ற ருஷ்ய சர்க்காரின் கொள்கையை அவர் வலியுறுத்திக் கூறியதுடன், சமீபத்தில் ருஷ்யாவில் வெடித்துப் பரிசீலனை செய்யப்பட்ட பயங்கர ராட்சஸ ஹைட்ரஜன் குண்டைப் பற்றியும் குறிப்பிட்டார். மேற்படி குண்டை ருஷ்யா முதலில் உபயோகிக்காது என்று உறுதிமொழி கூறினார்.

ஸ்ரீ குருஷ்சேவ் ஹைட்ரஜன் குண்டைப் பற்றிக் கூறிய அதே சமயத்தில், டில்லி சர்வகலாசாலைப் பட்டமளிப்பு விழாவில் ராஜாஜி அதே விஷயத்தை விவரித்தார். உலக மக்களையே பீதியில் ஆழ்த்தியுள்ள, மானிட வர்க்கத்தின் எதிர்காலம் என்ன என்ற கேள்வியை எழுப்பியுள்ள இவ்விஷயத்தைக் காட்டிலும் இன்று உலகில் வேறு முக்கியமான பிரச்னை எதுவும் இல்லை அல்லவா!

பிறர் என்ன செய்கிறார்கள் என்று எதிர்பாராமல் ஒவ்வொரு நாடும் தாமாக நல்ல காரியங்களைச் செய்வதுதான் உயரிய வழி என்பதை ராஜாஜி சுட்டிக் காட்டியுள்ளார். அத்தகைய கொள்கையை இன்று ருஷ்யா அனுஷ்டித்து வருகிறது என்று கூறி ருஷ்யாவின் எதிர்பாராத மனமாற்றத்தை மிகவும் பாராட்டியிருக்கிறார்.

ஆயுதங்களாலும் அணுகுண்டுகளாலும் மானிட வர்க்கத்துக்கு அழிவைத் தவிர நன்மையில்லை என்று இந்தியாவில் ருஷ்யத் தலைவர்கள் கூறியிருப்பதால், அந்த வார்த்தையில் நம்பிக்கை வைத்து அமெரிக்கா பிறரை எதிர்பாராமல் அணுகுண்டுகளையும் ஹைட்ரஜன் குண்டுகளையும் கைவிட்டுவிட முற்படுமாயின் உலக சரித்திரத்திலேயே ஒரு புதிய சகாப்தம் ஏற்படும் என்பது உறுதி.

அமோக வரவேற்பு !

குதிரையும் குண்டுசட்டியும் !



# என்ன சேதி?

## பன்னிரண்டு மணி வேலை நிறுத்தம்

சென்ற வாரம் ஒருநாள் சென்னைமா நகரிலே திடீரென்று ஒரு வேலை நிறுத்தம் ஆரம்பமாயிற்று. அற்ப சொற்பமான வேலை நிறுத்தம் அல்ல. பதினாலாயிரத்துக்கு மேற்பட்ட தொழிலாளர்கள் சம்பந்தப்பட்ட பெரும் வேலை நிறுத்தம். எனினும் திடீரென்று ஆரம்பமான அவ் வேலை நிறுத்தம் பன்னிரண்டு மணி நேரத்துக்கு மேல் நீடிக்கவில்லை; திடீரென்று முடிவடைந்து விட்டது!

சென்னை பி அண்ட் சி மில்ஸ் தொழிலாளர்கள், சம்பளம், கிராக்கிப்படி, போனஸ் போன்ற விஷயங்களை யொட்டித் தங்களுக்கும் மில் நிர்வாகிகளுக்கும் நடந்த பேச்சு வார்த்தைகள் முறிந்து விட்டதால் வேலை நிறுத்தம் ஆரம்பித்தனர். நல்லவேளையாக உற்ற சமயத்தில் இரு சாராரும் கூடி தங்கள் தகராறை விசாரிக்க மத்தியஸ்த சபை நியமிப்பதென்ற யோசனைக்கு இணங்கியதால் வேலை நிறுத்தம் நின்றது.

தொழிலாளர்களின் குறைகளைத் தீர்க்க வேண்டியது அத்தியாவசியம் என்பதை ஒப்புக் கொள்ளாதவர் இருக்க முடியாது. எனினும், தொழிலாளர்கள் தங்கள் குறைகள் தீருவதற்குச் சமரச முறைகளை யெல்லாம் கைக்கொண்டு பார்க்க வேண்டுமேயன்றி, வேலை நிறுத்தம் செய்வதால் அவர்களுக்கோ, நிர்வாகிகளுக்கோ, சர்க்காருக்கோ, பொது மக்களுக்கோ நன்மை ஏற்படுவதற்கில்லை. அவ்விதம் எல்லாருக்கும் கஷ்ட நஷ்டத்தைக் கொடுக்கக் கூடிய பயங்கர ஆயுதத்தின் பிரயோகத்தைச் சுதந்திர இந்தியாவில் உள்ள தொழிலாளர்கள் தவிர்க்க முற்பட வேண்டும். எனவே, பி அண்ட் சி மில்ஸ் தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் ஆரம்பித்த சில மணி நேரத்துக்குள்ளேயே அதைக் கைவிட்டு மத்தியஸ்த யோசனைக்கு இசைந்ததைப் பாராட்டுகிறோம். எல்லாருக்கும் பயன் தருகிற முறையில் மத்தியஸ்த சபையின் முடிவும் அமையும் என்று எதிர்பார்க்கிறோம்.

## புது ஏற்பாடும் மக்கள் கடமையும்

ராஜ்ய எல்லை சம்பந்தமான புது ஏற்பாட்டைக் கண்டித்துப் பம்பாயிலும் விந்தியப் பிரதேசத்திலும் நிகழ்ந்துள்ள கலகங்களைக் கண்டு வருந்தாதவர்கள் இருக்க முடியாது. அந்தக் கலகங்களால் கோடிக் கணக்கில் பொருள் நஷ்டம் ஏற்பட்டதுடன், உயிர்ச் சேதமும் உண்டானது வருந்தத்தக்க நிகழ்ச்சி. பொது ஜனப் பிரதிநிதிகளான மந்திரிகளுங்கூட அவமதிக்கப் பட்டார்கள். விந்தியப் பிரதேச சட்டசபையில் சிலர் புகுந்து மந்திரிகளைத் தாக்கவும் முற்பட்டார்கள். புது ஏற்பாடு சம்பந்தமாக ஒவ்வொரு ராஜ்யத்திலும் மனக் குறையும் ஆட்சேபணைகளும் இருந்து வருகின்றன. எனினும் அவற்றை மக்களும் பிரதிநிதிகளும் அவசரப்படாமல் சமரசமாகவும் சாத்வீகமாகவும் தீர்த்துக் கொள்ள முற்பட வேண்டுமேயன்றி, பலாத்காரத்தில் இறங்குவது தங்கள் கண்களைத் தாங்களே குத்திக் கொள்வதாக முடியும்.

## சினிமாக் கலையில் பரிசு

ஒரு காலத்தில் சங்கீதம், நாட்டியம், சித்திரம் முதலிய நுண்ணிய கலைகள் ஜமீன்தார்கள், ராஜாக்கள் இவர்களின் ஆதரவில் வளர்ந்து வந்தன. ஆனால் இப்பொழுதோ பொதுஜன ஆதரவு பெறலாயின. சாதாரணப் பொது மக்கள் ஆயிரக் கணக்கான பேர் நம் சங்கீதக் கச்சேரிகளுக்குப் போவதிலிருந்தே இவ் விஷயம் தெளிவாகப் புலனாகும். ஆனாலும் இம் முறையிலும் சில குறைகள் இருக்கின்றன.

இந்தக் குறைகளைச் சீர்திருத்துவதற்காகவே சர்க்கார் சங்கீத நாடக அகாடமி ஏற்படுத்தியிருக்கிறார்கள். அகாடமியார் சமீபத்தில் நாடகம், நடனம், சங்கீதம் முதலிய துறைகளில் உயர்தரமான பாணியைப் பின்பற்றுபவர்களுக்குப் பரிசுகள் வழங்கியது நேயர்களுக்குத் தெரியும். அதேபோல் சினிமாக் கலைத் துறையிலிருப்பவர்களுக்கும் இரண்டு பரிசுகள் வழங்குவதெனத் தீர்மானித்திருக்கிறார்கள்.

நல்ல படம் எடுத்த முதலாளி அல்லது டைரக்டருக்கு ஒரு பரிசு வழங்குவதென்றும், மற்றொரு பரிசு நல்ல படத்தில் நடித்த சிறந்த நடிகை அல்லது நடிகருக்கு வழங்குவதென்றும் தீர்மானித்திருக்கிறார்கள்.

சினிமாத் துறையில் சிரத்தையுள்ள சங்கங்கள், ஸ்தாபனங்கள், விமர்சகர்கள், மற்றுமுள்ள தனி ரசிகர்கள் யாவரையும் மேற்கண்ட இரு பரிசுகள் யாருக்கு வழங்கலாம் என்பதைத் தக்க காரண காரியங்களோடு விளக்கித் தங்களுக்கு எழுதும்படி கேட்டுக் கொள்ளுகிறார்கள். இச்சிபாரிசுகள், 1956 ஜனவரி 31-ம் தேதிக்குள் "காரியதரிசி, சங்கீத நாடக அகாடமி, 70 ரீகல் பில்டிங், புது தில்லி" என்ற விலாசத்துக்கு எழுதியனுப்ப வேண்டும். சினிமாக் கலையில் சிரத்தையுள்ள அனைவரும் அகாடமியாரின் இப் பணியில் உதவுவார்கள் என்று நம்புகிறோம்.

## அன்னதானம்

கும்பகோணத்தில் மகம் உற்சவம் மாமாங்கம் திருவிழா என்றால் அங்கே சிவன் சமாராதனைக் கொட்டகையை முக்கியமாகக் குறிப்பிட வேண்டும். ஆயிரக் கணக்கானவர்கள் ஒரே பந்தியில் உட்காரும்படியான பிரும்மாண்டமான கொட்டகை அமைந்திருக்கும். அதில் நூற்றுக் கணக்கான சமையற்காரர்களும் பரிசாரகர்களும் ஓடி ஓடி வேலை செய்து கொண்டிருப்பார்கள். வண்டி வண்டியாக அரிசி மூட்டைகளும் காய்கறி சாமான்களும் வந்து இறங்கிக் கொண்டிருக்கும்.

கையில் காலணாக் காசில்லாத அன்னதான சிவன் லட்சக்கணக்கானவர்களுக்கு இவ்வாறு உணவு அளித்துக் கொண்டிருப்பார். சாப்பாடு என்றால் சாதாரண சாப்பாடா? சோழ நாட்டின் கைதேர்ந்த சமையற்காரர்களைக் கொண்டு செய்த அறுசுவையுடன் கூடிய உண்டி!

இவ்விதம் அன்னதான சிவன் மாமாங்கத்தின் போது செய்த அன்னதானக் கைங்கரியத்தை இப்பொழுது அன்னதான சிவன் சங்கத்தார் செய்யப் போகிறார்கள். மாமாங்கத்துக்கு வரும் யாத்ரீகர்களுக்கு உணவு அளிக்கத் திட்டமிட்டிருக்கிறார்கள். மூன்று லட்சம் பேருக்கு அன்னதானம் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்து வருகிறார்கள். சுகாதார வசதியுடன் கூடிய நவீன விஞ்ஞானக் கருவிகளைக் கொண்டு உணவு தயார் செய்வதற்கு ஏற்பாடு செய்கிறார்கள்.

அந்தப் புண்ணிய கைங்கரியத்துக்கு உதவி புரியும்படி தமிழ்ப் பெரு மக்களைக் கேட்டுக் கொள்கிறோம். பொருள் உதவி செய்யலாம். அரிசி, பருப்பு முதலிய அன்னதானத்துக்கு வேண்டிய சாமான்கள் எதை வேண்டுமானாலும் அனுப்பலாம். இந்த உத்தமத் திருப்பணிக்குப் பொருள் உதவி செய்வதின் மூலம் இரண்டு பலன்களைப் பெற முடியும். லட்சக்கணக்கான மக்களுக்கு அன்னமளித்த புண்ணியத்தையும், மாமாங்க புண்ணிய தினத்தின் பலனையும் அடையலாம். இந்தப் பெரும் பணிக்கு அனுப்பும் பொருள் உதவிக்கு வருமான வரி விலக்கு அளித்திருக்கிறார்கள். செல்வந்தர்கள் தாராளமாகக் கொடுக்கலாம்.

பொருள் உதவி அனுப்ப வேண்டிய விலாசம்: காரியதரிசி, அன்னதான சிவன் சங்கம், 19, ஸ்டிரிங்கர் தெரு, சென்னை-1.

அரிசி, பருப்பு, நெய், நல்லெண்ணெய் முதலிய சாமான்களை அனுப்ப விரும்புவோர்: "நிர்வாகி, அன்னதான சிவன் அனாதை மாணவர் இல்லம், அம்மா சத்திரம், திருநாகேஸ்வரம்" என்ற விலாசத்துக்கு அனுப்பி வைக்கக் கோருகிறோம்.

## புது மேயர்

சென்னையின் புது மேயருக்கு நல்வரவு கூறுகிறோம். சென்ற நாற்பதாண்டுகளாகச் சீரும் சிறப்புடன் சென்னையில் 'ராமகிருஷ்ண லஞ்ச ஹோம்' என்ற ஹோட்டலை நடத்தி வரும் திரு வி. ஆர். ராமநாதய்யர் பல ஆண்டுகள் சென்னை கார்ப்பொரேஷன் கவுன்ஸிலராக இருந்தும், மற்றும் பொது ஸ்தாபனங்களில் முக்கிய அங்கம் வகித்தும் சென்னை நகரவாசிகளின் தேவைகள் என்ன என்பதை நன்கு அறிந்திருக்கிறார். உள்நாட்டு அனுபவம் மட்டுமின்றி நம் நாட்டுக்குக் கிழக்கிலும் மேற்கிலும் நீண்ட நெடுந் தூரங்களுக்குப் பிரயாணம் செய்து அமெரிக்கா, ஐரோப்பா, மலேயா, ஜாவா முதலிய நாடுகளில் எப்படி ஸ்தல ஸ்தாபனங்கள் நிர்வகிக்கப்படுகின்றன என்பதையும் அறிந்து வந்திருக்கிறார். அவருடைய சிறந்த தர்ம சிந்தைக்கு அருமையான அத்தாட்சியாக அவருடைய சொந்த ஊர் வடக்கன்சேரியில் ஆஸ்பத்திரி ஏற்படுத்தியிருக்கிறார். பொது ஜனத்தொண்டுக்கு என்று ஒரு கட்டடம் ஒதுக்கி யிருக்கிறார். இப்படிப்பட்டவர் சென்னை மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார் என்ற செய்தி சென்னை வாசிகளுக்குப் பெரிதும் மகிழ்ச்சி யளிக்கிறது. இவருடைய பதவிக் காலத்தில் சென்னை நகரம் மேலும் பலன்கள் பெற்று அழகு நகரமாகத் துலங்கும் என்று எதிர்பார்ப்போம்.



# இந்திய சோவியத் நட்பு வாழ்க!

உலகத்து இலட்சிய மகா புருஷர்களின் பரம்பரையைச் சேர்ந்தவர்கள் இருவர், சோவியத் நாட்டின் புகழ் பெற்ற தலைவர்கள், புல்கானினும் குருஷ்சேவும் நம்முடைய நாட்டுக்கு வந்திருக்கிறார்கள். சென்ற ஒரு வார காலமாக இந்தியாவில் சுற்றுப் பிரயாணம் செய்து வருகிறார்கள்.

இந்த வீர புருஷர்கள் நவம்பர் மீ 29உ காலை பன்னிரண்டு மணிக்கு மீனம்பாக்கம் விமானகூடம் வந்து சேர்ந்தார்கள். அவர்கள் விமான நிலையத்திலிருந்து கிண்டி ராஜ பவனத்துக்குத் திறந்த காரில் செல்லுவார்கள் என்று ஏற்கனவே அறிவிக்கப் பட்டிருந்தது. மீனம்பாக்கத்திலிருந்து ராஜ பவனம் வரையில் மக்கள் காலையிலிருந்தே சாலையின் இருபுறமும் நிற்கத் தொடங்கினார்கள்.

முதலில் அங்கொன்றும் இங்கொன்றுமாக நின்றார்கள். பிறகு நெருங்கி நின்றார்கள். கடைசியில் சாலையின் இருபுறமும் மீனம்பாக்கத்திலிருந்து ராஜபவனம் வரையில் மனிதச் சுவர்களின் அகலம் அதிகரிக்க ஆரம்பித்து விட்டது. புருஷர்களும், ஸ்திரீகளும், வயோதிகர்களும், பாலர்களும், எல்லா இனத்தவரும், பலதரப்பட்ட அந்தஸ்துகளை உடையவர்களும் ஒன்றாகத் திரண்டு வந்து தோளோடு தோள் சேர்த்து நின்றார்கள். மரங்களின் மீதும் வீட்டுக் கூரைகளின் மீதும் ஏறி நின்றார்கள். மக்களின் எண்ணிக்கை லட்சக் கணக்கில் இருக்கும்.

மோட்டார் வண்டியில் மலர்ந்த முகத்துடன் வந்த புல்கானினையும், குருஷ்சேவையும் மக்கள் மனம் குளிரப் பார்த்தார்கள்; மகிழ்ந்தார்கள். ஜெய கோஷம் இட்டார்கள். "புல்கானின்–குருஷ்சேவ் அவர்களே வருக! வருக!" என்று வாய் விட்டுக் கூறி வரவேற்றார்கள். "இந்திய–சோவியத் நட்பு வாழ்க!" "உலக சமாதானம் நீடூழி வாழ்க!" என்று தமிழிலும் ரஷ்ய மொழியிலும் எழுதிய அட்டைகளைத் தூக்கிப் பிடித்து வரவேற்றார்கள். எல்லா இடங்களிலும் இந்திய மூவர்ணக்கொடியும், சோவியத் செங்கொடியும் ஒன்று சேர்ந்து பட்டொளி வீசிப் பறந்துகொண்டிருந்தன.

மக்களின் ஆர்வம் இத்துடன் நின்று விடுவதாக இல்லை. புல்கானினும் குருஷ்சேவும் எங்கெல்லாம் சென்றார்களோ அங்கெல்லாம் மக்கள் திரண்டு போய்க் காத்துக் கொண்டிருந்தார்கள். சோவியத் தலைவர்களை ஆசையோடு பார்த்து மகிழ்ந்தார்கள்.

பெரம்பூர் ரயில் பெட்டி கட்டும் தொழிற்சாலையைச் சுற்றி மக்கள் பதினாயிரக் கணக்கில் நெருங்கி நின்றார்கள். மவுண்ட்ரோடில் பெருங் கூட்டம், பூந்தமல்லி ரோடில் ஏராளமான கூட்டம். நகரசபை ஸ்டேடியத்தில் கூட்டத்தைச் சொல்லி முடியாது.

சென்னை மக்கள் பாரதத்தின் பிரதம மந்திரி பண்டித ஜவாஹர்லால் நேரு அவர்களைத் தங்கள் நாட்டில் வரவேற்று உபசரித்த சோவியத் தலைவர்களை வரவேற்கச் சென்னை நகரையே அலங்கரித்திருந்தார்கள். சோவியத் தலைவர்கள் சென்ற இடமெல்லாம் தோரணங்கள், வளைவுகள். நகரசபைக் கட்டடம் தீபாலங்காரங்களுடன் ஜொலித்தது. சென்னை சென்ட்ரல் ஸ்டேஷன் ஜகஜ்ஜோதியாக மின்சார பல்புகளால் அலங்கரிக்கப்பட்டிருந்தது. இந்த அலங்கார அணிகள் எல்லாம் போதாது என்று சோவியத் தலைவர்களை வரவேற்க அன்று மாலை ஐலண்டு மைதானத்தில் கூடியிருந்த கூட்டத்தைப் பார்த்திருக்க வேண்டும். நாலு புறமும் திரும்பிய இடங்கள் எல்லாம் மக்கள் கூட்டம்தான். ஏழு, எட்டு லட்சத்துக்குக் குறையாது.

புது உலகை அமைத்த சிற்பிகளிடம், பொது உடைமை நாட்டின் தலைவர்களிடம் கொண்டிருந்த அன்பை அன்றையதினம் சென்னை நகரத்து மக்கள் நிதரிசனமாகக் காட்டி விட்டார்கள். மக்களின் இதயக் கடல் பொங்கி வழிந்தது. அன்பு வெள்ளம் புரண்டு ஓடியது.

இந்த அன்பு வெள்ளத்துக்குத் தாங்கள் சரியான பாத்திரம்தான் என்பதை குருஷ்சேவும், புல்கானினும் காண்பித்து விட்டனர். ஒளி படைத்த பிரகாசமான தங்கள் கண்களால் மக்கள் கூட்டங்களை உற்று உற்றுப் பார்த்தார்கள். ருஷ்ய முறையிலும், இந்திய முறையிலும் அடிக்கடி கை தூக்கியும், கை கூப்பியும் வணங்கினார்கள். சென்னை மக்களின் அன்பினால் அவர்கள் பரவசமடைந்தார்கள்.

ஐலண்டு மைதானத்தில் சென்னை நகரசபை தமிழ் மக்களின் சார்பாகத் தமிழில் வாசித்தளித்த வரவேற்பு உபசாரத்தை மனம் உவந்து ஏற்றுக் கொண்டார்கள். தமிழ் மக்கள் தங்கள் மொழிக்கு அளித்த மரியாதையை உணர்ந்து பாராட்டியது போலிருந்தது அவர்கள் மலர்ந்த முகங்கள். தமிழின் இனிமை அவர்களை ஆட்கொண்டது போலிருந்தது அவர்கள் உற்சாகம் நிறைந்த பேச்சு.

அவர்கள் பேசிய பேச்சு இனிமையாக இருந்தது. பசுமரத்தாணிபோல் மனத்தில் பதிந்தது. அவர்கள் பேச்சு உள்ளத்திலேயிருந்து உணர்ச்சியுடன் வெளிவந்த உண்மையான வார்த்தைகளாக இருந்ததால் கேட்பவர்களின் மனத்தில் பெருமிதம் ஏற்பட்டது.

அவர்கள் இந்தியப் பண்பாட்டைப் பாராட்டினார்கள். சமாதான விருப்பம் நிறைந்த இந்திய மக்களின் உயர்ந்த குணத்தைப் போற்றிப் புகழ்ந்தார்கள். "பெற்ற சுதந்திரத்தைப் பேணிப் பாதுகாக்க வேண்டும். இதை எங்கள் அனுபவத்திலிருந்து சொல்கிறோம்" என்று ஆதரவோடு கூறினார்கள்.

இந்திய நாட்டின் களங்கமான கோவாப் பிரச்னையைப் பற்றியும் சொன்னார்கள். "காலனி ஆட்சி ஒழிந்தே போகும்" என்று சபதம் கூறினார்கள். இந்தியாவுக்கு எப்பொழுதும் உற்ற துணைவர்களாக இருந்து எல்லாவிதமான உதவிகளையும் செய்ய சோவியத் மக்கள் தயாராகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று அழுத்தம் திருத்தமாகச் சொல்லித் தங்கள் அன்பைக் காண்பித்தார்கள்.

சோவியத் நாட்டு மக்களின் பிரதிநிதிகளாகத் தமிழ் நாட்டுக்கு விஜயம் செய்தவர்கள் புல்கானினும் குருஷ்சேவும். அவர்களுக்கு அளிக்கவேண்டிய மரியாதைகளைப் பரிபூரணமாகச் செய்த சென்னை மக்களை நாமும் பரிபூரணமாகப் பாராட்டுகிறோம்.

---

* புல்கானின் – குருஷ்சேவ் இந்திய விஜயம் படங்கள் அடுத்த இதழில் வெளியாகும்.







நவம்பர் 28ந் தேதி சென்னை நகருக்கு விஜயம் செய்து தமிழ்ப்பெரு மக்களை
மகிழ்ச்சிக்கடலில் ஆழ்த்திய ரஷ்யத் தலைவர்கள் புல்கானினும், குருஷ்சேவும்





## காந்தி கலை மன்றத் திறப்பு விழா

நவம்பர் 16-ந் தேதி ராஜபாளையம் கோலாகலமாகக் காட்சி தந்தது. ஜனாதிபதி ராஜன் பாபு, ராஷ்டிரபதி தேபர், கவர்னர் ஸ்ரீ பிரகாசா, மந்திரிகள், நீதிபதிகள் இவ்வளவு பேரும் ராஜபாளையத்துக்கு விஜயம் செய்து தமிழ்நாட்டின் சிறப்பையே உயர்த்தினார்கள். இதற்குக் காரணமாயிருந்தவர் ஒரிஸ்ஸா கவர்னர் திரு பி. எஸ். குமாரசாமி ராஜா அவர்கள்தான். தமது அரண்மனை போன்ற மாளிகையைத் தேசத்துக்கு அர்ப்பணம் செய்ததுடன், அந்த மாளிகையைப் பெரியதாகக் கட்டி அதில்












பெரியதொரு நூல் நிலையத்தையும், கலை மன்றத்தையும் அமைத்திருக்கிறார். இந்தக் கலை மன்றத்தை ஜனாதிபதி ராஜன்பாபுவைக் கொண்டு திறந்து வைத்த காட்சிகள் சிலவற்றை இந்த இரு பக்கங்களில் காணலாம். எதிர்ப் பக்கம் : பொதுக் கூட்ட மேடையிலிருந்த ராஷ்டிரபதி தேபர் மக்களுக்கு வணக்கம் செலுத்துகிறார். திரு பி. எஸ். குமாரசாமி ராஜாவின் நன்கொடையான காங்கிரஸ் பொன் விழா ஞாபகார்த்தத் திடலின் முகப்பு. ராஜன் பாபு திறந்துவைத்த காந்தி மகான் சிலை. திரு பி. எஸ். குமாரசாமி ராஜா ஜனாதிபதியை வரவேற்றுப் பேசுகிறார். இந்தப் பக்கத்தில்: குமாரசாமி ராஜா தேசத்துக்கு அளித்த காந்தி கலை மன்றக் கட்டடம். நூல் நிலையத்தை ராஜன் பாபு பார்வையிடுகிறார். நூல் நிலைய அறையிலும் காந்தி மகான் சிலை இருக்கிறது. ராஜபாளையம் நகர சபை ஜனாதிபதிக்கு அளித்த வரவேற்பு. பொதுக் கூட்டத்தில் பெண்கள் இருந்த பகுதியின் தோற்றம்.



## நேப்பாள மன்னர்

நேப்பாளம் இந்தியாவின் வட எல்லையில் இமயமலைச் சாரலிலுள்ள சுதந்திர நாடு. பிரிட்டிஷ் ஆட்சிக் காலத்திலிருந்தே நேப்பாளம் சுதந்திர நாடாக இருந்து வருகிறது. நேப்பாளம் காட்மண்டுவிலுள்ள பசுபதீசுவரர் கோயில் சைவப் பெருமக்களுக்குப் புனித க்ஷேத்திரம். தமிழகத்திலுள்ள சைவ பக்தர்கள் அணியும் ருத்ராக்ஷ மாலைகள் நேப்பாளத்திலிருந்து வருவது என்று கூறினும், ஆயிரக் கணக்கான ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தமிழ் நாட்டுக்கும் நேப்பாள ராஜ்யத்துக்கும் எவ்வளவு நெருங்கிய தொடர்பு இருந்து வந்திருக்கிறது என்பதை அறியலாம். அத்தகைய சுதந்திர நேப்பாள நாட்டின் மன்னர் ஸ்ரீ மகா ராஜாதிராஜ மகேந்திர வீர விக்ரமசாதேவ் அவர்களுக்கும் மகாராணி ரத்ன ராஜ்யலட்சுமிதேவி அவர்களுக்கும் சென்ற வாரம் சென்னை மக்கள் குதூகலமான வரவேற்பு அளித்து மகிழ்ந்தார்கள். சென்னை கவர்னர் மாளிகையில் ராஜ தம்பதிகளுக்கு விருந்துபசாரம் செய்ததையும், சென்னை நகரசபை வரவேற்பு உபசாரப் பத்திரம் வாசித்தளித்ததையும் இங்கே படத்தில் காணலாம்.






சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்

"ஐயோ என் முடிவு நெருங்கி விட்டது!" என்று ஒரு பாட்டியைப் போல் ஒரு ஆறு துக்கம் அடைந்து அழுதது. பெரிய ஆறு.

"எவ்வளவு ஆனந்தமாக வளர்ந்தேன். மலையிலிருந்து இறங்கி ஓடியும் துள்ளியும் நூற்றுக் கணக்கான மைல்களாக நீண்டு வளர்ந்தேன். இப்போது முடியும் காலம் வந்து விட்டதே" என்று கண்ணீர் விட்டது. ஆற்றுக்குக் கண்ணீர் எதேஷ்டமல்லவா? கடற்கரையண்டை இப்படி அழுதது. கடலில் விழ்ந்தால் தன் வாழ்க்கை முடிந்தது என்று எண்ணிற்று.

• • •

இந்த நிமிஷம் இருந்த ஆறு அடுத்த நிமிஷத்தில் இல்லை. மூழ்கிக் குளிக்கிறோம். நாம் ஜலத்தில் இறங்கிய போது இருந்த ஜலம் அடுத்த நிமிஷத்தில் இல்லை. புது ஜலம் வருகிறது. அதுவும் ஓடிப் போய் விடுகிறது. மறுபடியும் வேறு ஜலம். இப்படியே இந்தக் கணமிருந்த நீர் அடுத்த கணத்தில் இல்லை. ஆயினும் அதை ஒரு நிலை பொருளைப் போல் கருதி அதற்குப் பெயரும் கொடுக்கிறோம். மேலே ஆகாயத்தினிருந்து விழும் மழைத் துளிகளைப் போலவே ஆறும். மழைக்கு நாம் பெயர் வைக்கிறதில்லை. அது விழுந்து மறைவது நமக்கு நன்றாகத் தெரிகிறது. ஆறும் அவ்விதமே. இந்தக் கணம் இங்கே இருந்த நீர்த் துளிகள் அடுத்த கணம் இங்கே இல்லை. ஆனால் ஆற்றங்கரையும் மணலும் மரமும் பார்த்து ஆறும் ஒரு நிலையான பொருள் என்று கருதுகிறோம். கடற்கரையண்டை வந்து சேர்ந்த ஆறும் அப்படியே எண்ணிற்று. "ஐயோ! இனி என் உயிர் முடிந்தது" என்று துக்கப்பட்டது.

• • •

நம்முடைய வாழ்க்கையும் உடலும் ஆறுகளைப் போலவே நேற்று இருந்தது இன்று இல்லை. இன்று இருந்தது நாளை இல்லை. ஆயினும் நிலையான பொருளாக நம் உடலைக் கருதி வருகிறோம். இது பெரிய விஷயம். அழுது கொண்டிருந்த ஆற்றைக் கவனிப்போம்.

ஆறு கடலில் விழுந்து விட்டது. அதன் தனி உயிர் முடிந்து போயிற்று. கடலில் நீருடன் நீராகக் கலந்து விட்டது. நீர்த் துளிகள் நாசமாகவில்லை. மாயம்தான் தீர்ந்தது. நான் ஒரு தனிப் பொருள் என்று ஓடும் ஆறு எண்ணியது. ஒரு மோகம். அகம்பாவம்.

ஓடி வரும் ஒவ்வொரு துளியும் கடலில் விழுந்து நீருடன் நீராகக் கலந்து போகிறது, சாகவில்லை. ஆற்றின் உருவம்தான் மறைந்தது. நீர் நீருடன் கலந்து விட்டது. தான் எங்கிருந்து முதலில் வந்ததோ அங்கே மறுபடியும் போய்ச் சேர்ந்து விட்டது. மறுபடி பகவான் சூரியனுடைய அன்புக் கைகள் — பல்லாயிரம் கைகள் — அகன்று அணைத்து, நீரை மேலே தூக்கிச் சென்று அங்கிருந்து அதன் வயிறு பெருத்ததும் போ என்று கீழே மறுபடியும் அனுப்புவான்.

"ஆறே! அழ வேண்டாம்!" என்று சொல்லி நாமும் அறிவு அடைவோமாக. யமனைக் கண்டு பயப்பட வேண்டியதில்லை. துக்கப்பட வேண்டியதில்லை. அண்டம் முழுதும் பரவி நிற்கும் பெருங் கடலாகும் கடவுள். அதனுள் போய்ச் சேருவதற்கு ஏன் பயப்படவேண்டும். ஏன் துக்கப்பட வேண்டும்.

# கண்ணீரின் கதை

ஓடிக் கொண்டிருந்த ரயில் வண்டியில் கண்கள் இரண்டையும் மூடியவாறு பத்மா சனம் மாதிரிச் சம்மணம் போட்டு அமர்ந்து கொண்டிருந்தார் அவர்.

"என்ன யோசனை செய்கிறீர்கள்?" என்று கேட்டார், ஓய்வு பெற்ற ஸர்க்கிள் இன்ஸ்பெக்டர் முத்தையாப் பிள்ளை.

"நேற்று டி. கே. சி. அந்தக் குறளுக்கு அர்த்தம் சொன்னார்களே, அதையே நினைத் துக் கொண்டிருக்கிறேன். என்ன அதிசய மான பொருள், அவர்கள் சொன்னது!" என்றார் அவர்.

இப்படிச் சொன்னவர் வேறுயாருமில்லை. கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள்தான்.

இருபது ஆண்டுகளுக்கு முன்பு நடந்தது அது! ஊர்க்காடு நண்பர்கள் ஸ்ரீ சேது ராயர், ஸ்ரீ ராமசாமி ஆகிய இருவருடைய அழைப்புக்கு இணங்கப் பாபநாசம் கல் யாண தீர்த்தத்துக்குச் சென்று கொண்டிருந் தார் கல்கி. 'பேச்சுத் துணைக்கு' என்று சொல்லி என்னையும் உடன் அழைத்துச் சென்றார். அப்பொழுது நான் கல்லூரி மாணவன்.

"தம்பி! நீதான் எப்பொழுதும் டி. கே. சி. யின் வட்டத் தொட்டியில் இருப்பவன் ஆயிற்றே. அந்தக் குறளுக்கு மற்றவர்கள் சொல்லுகிற பொருளையும் கேட்டிருப் பாயே!" என்றார் கிருஷ்ணமூர்த்தி.

"அறத்திற்கே அன்புசார்(பு) என்பர் அறியார்:
மறத்திற்கும் அஃதே துணை"

என்ற குறளுக்கு, டி. கே. சி. சொன்ன அர்த்தம் புதுமையானது. "தர்மச் செயல் களைச் செய்கிறவர்கள்தான் அன்பு காரண மாகச் செய்கிறார்கள் என்று சொல்வது முட்டாள்தனம். அதர்மச் செயல்களைச் செய்வதற்குமே அன்புதான் காரணமாக அமைகிறது!" என்பது டி. கே. சியின் பொருள். "அதர்மம் நடக்க ஒட்டாமல் செய்வதற்கும் அன்புதான் காரணம்!" என்பது மற்றவர்கள் சொல்கிற பொருள்.

பரிமேலழகருடைய பொருளைப் பற்றிய சர்ச்சை எழுந்தது. கல்கி சொன்னார்: "தம்பீ! டி. கே. சி. சொன்ன அர்த்தம் தான் எனக்குப் பிடித்திருக்கிறது. இதை வைத்து ஒரு நாவலே எழுதி விடலாம் என்று தோன்றுகிறது. அத்தனை அற்புத மாக இருக்கிறது!"

இதன் பிறகு ஸர்க்கிள் முத்தையாப் பிள்ளை என்னோடு வேறு ஏதேதோ சொந்த விஷயங்களைப் பற்றிப் பேசிக் கொண்டிருந் தார். கல்கியோ கண்களை மூடியவாறு அதே பத்மாசனத்தில் பலத்த யோசனை யில் ஆழ்ந்திருந்தார். எங்களுடைய பேச்சு ஜம்புலிங்கம் என்ற புகழ் பெற்ற திருடனைப் பற்றிச் சென்றது. என்னுடைய பந்துவான ஒரு பண்ணையார் வீட்டில் ஒரு நாள் இரவு ஜம்புலிங்கம் சென்று, அந்தப் பண்ணையாருடைய துப்பாக்கியை மட்டும் வாங்கிக் கொண்டு போய் விட்டதை யும், அதன் பிறகு ஜம்புலிங்கம் பிடிபட்ட கதையையும் பற்றிப் பேச ஆரம்பித்தோம். இதுவரை கண்களை மூடிக் கொண்டிருந்த கல்கி இப்பொழுது எங்கள் பேச்சில் கலந்து கொண்டார்.

"அந்த ஜம்புலிங்கத்தைப் பிடித்தீர்கள் என்று தானே, உங்களுக்கு ஸர்க்காரில் விருதுகள் கொடுத்தார்கள?" என்று ஸர்க் கிள் முத்தையாப் பிள்ளையிடம் கேட்டார் கல்கி.

"ஆமாம். அது ஒரு பெரிய கதை!" என்று சொல்லி முத்தையாப் பிள்ளை நிமிர்ந்து உட்கார்ந்து கொண்டார்.

## சோமு

ரயில் வேகமாக ஓடிக் கொண்டிருந்தது. முத் தையாப் பிள்ளையைக் கல்கி நன்றாக உற்சாகப் படுத்தி விட்டு விட்டார். அவருடைய பேச்சும் ரயிலைப் போல வேகமாக ஓடியது. 'ஜம்புலிங்கம்' என்ற அந்தத் திருடன் திருட்டுத் தொழில் செய்தாலும் எத்தனை நல்லவன் என்றும், ஏழைக ளிடம் அவனுக்கு எத்தனை அன்பு இருந் தது என்றும், கடைசியில் ஒரு பெண் ணிடம் அவன் வைத்த அன்பினால் எப்படி அவன் பிடிபட நேர்ந்தது என்றும் முத் தையாப் பிள்ளை சொல்லி, அவனைப் பிடித்ததற்கு வெகுமதியாகத் தமது மார் பிலே வாங்கிய துப்பாக்கிக் குண்டின் தழும்பையும் காட்டினார்.

பாபநாசம் 'ஆனந்த விலாஸ்' பங்களா வில் நாங்கள் தங்கியிருந்தோம். தாமிர வர்ணி நதி வளைந்து நெளிந்து கும்மாளி போட்டுக் கொண்டு அந்தப் பங்களாவை அணைத்துச் செல்லும் இருப்பத்தில், பாறை களுக்கு மேல் நாங்கள் ஆனந்தமாக உட் கார்ந்து கொண்டோம். அன்று மாலை சுமார் இரண்டு மணி நேரம் அங்கேயே எங்களை அழைத்துப் போன நண்பர் களின் உபசரிப்பில் இருந்தோம். கல்கி யின் மனத்தில் 'கள்வனின் காதலி' பூரண மாக உருவாகிற்று.

சென்ற ஆண்டில் ரேடியோவுக்கு என்று டி. கே. எஸ். சகோதரர்களைக் கொண்டு இந்த நாடகத்தை நடத்துவதற்கான ஏற்பாடுகளைச் செய்வதற்காக, அகில இந்திய ரேடியோவின் சார்பில் நான் கல்கி அவர்களைச் சந்தித்த போது, நாடகத்தின் ஆரம்பத்தில் ஒரு சிறு முன்னுரை கல்கியே கொடுத்தால் நன்றாக இருக்கும் என்று சொன்னேன். "இந்தக் கதை தோன்றிய விதத்தை அப்படியே சொல்லி விடுகிறேனே. நீயும் அப்போது என்னோடு இருந்தாய் என்பதைச் சொன்னால் ரேடியோக்கருவி ஒலிபரப்பாமல் நின்று விடுமோ? உத்தியோகஸ்தர்களின் பெயரை அறிவிக்க அந்த மைக்ரோபோனுக்கு ஆட்சேபணை இராதே?" என்று சிரித்துக் கொண்டே கேட்டார். சுமார் பதினைந்து வருஷ காலம் திருச்சி ரேடியோவில் திரை மறைவிலேயே நான் ஒதுங்கி இருந்து விட்டேன் என்று, என்னிடம் அவருக்கு இருந்த அன்பு காரணமாகக் கல்கி இந்த மாதிரி அடிக்கடி சொல்வதுண்டு. எனவே, இதற்குப் பதில் சொல்லாமல், நானும் என்னோடு வந்த ரேடியோ நண்பரும் சிரித்தோம்.



கல்கி முன்னுரை வழங்க இசைந்தார். ஆனால் அவருடைய உடல் நிலை அதற்கு இசைய மறுத்து விட்டது. நாடகம் நடைபெற்ற அன்றைக்கு, வீட்டை விட்டு வெளியே வரமுடியாமல் படுக்கையில் இருந்தே ஒலிபரப்பைக் கேட்டார். கேட்டு மகிழ்ந்தார். அத்தோடு இல்லை. சொன்னார்: "முன் காலத்தில் நாடக மேடைகளில் 'ஒன்ஸ்மோர் அங்கீகரிக்கப்பட மாட்டாது' என்று போடுவார்கள். அப்படி ஒன்றும் உங்கள் ரேடியோவில் கிடையாதே? கிடையாது என்றால், இந்தக் கள்வனின் காதலிக்கு ஒரு ஒன்ஸ்மோர் கொடுங்கள். நானே வந்து நிச்சயம் அந்த முன்னுரையைச் சொல்லி விடுகிறேன். ஏனென்றால் டி. கே. சி. சொன்ன அந்தக் குறள் அர்த்தம் என்னை எவ்வளவு தூரம் கவர்ந்தது என்பது எல்லாருக்கும் தெரிய வேண்டும்!" என்றார்.



'ஒன்ஸ்மோர்' போட்டு, கல்கி அவர்களின் முன்னுரையை நாம் எல்லாம் கேட்பதற்கு இடம் வைக்காமல், அந்தப் பேராசிரியர் இது நடந்த ஒரு மாதத்தில் இந்த உலகத்திலிருந்தே மறைந்துவிட்டார்.

அவர் மறைவதற்குச் சில நாட்களுக்கு முன்பு, அவர் உடல் நிலை கவலைக்கு இடமாக இருந்தபோது, ஒரு நாள் அவரிடம் நண்பர் ஒருவர் ஜாதகம் பார்க்கும்படி சொன்னாராம். இதைப்பற்றி என்னிடம் அவர் பிரஸ்தாபித்து விட்டுச் சொன்னார்:

"தம்பி! இந்த ஜாதகம் பார்க்கிற பைத்தியம் மட்டும் எனக்குக் கட்டோடு பிடிக்காது. ஏன் தெரியுமோ? காலில் நகம் முளைத்த நாளிலிருந்து நாம் எத்தனையோ கஷ்டப்பட்டு, எத்தனையோ இடத்தில் அடிபட்டு, மிதி பட்டு, குட்டுக்கள் வாங்கி முன்னுக்கு வருகிறோம். என் வரையில் நான் ஒவ்வொரு படி முன்னேறியதும் என்னுடைய சொந்த உழைப்பினால்தான். ஆனால் ஜோசியரிடம் போய்க் கேட்டால் என்ன சொல்லுவார் தெரியுமோ? என்னுடைய முன்னேற்றத்துக்குக் காரணம் என்னுடைய திறமை, என்னுடைய உழைப்பு என்று ஒப்புக் கொள்வாரா? மாட்டார். ஏதோ ஒரு செவ்வாய், ஒரு சுக்கிரன், ஒரு சூரியன்தான் காரணம் என்று சொல்லுவார். இதை எப்படிக் கேட்டுக் கொண்டு சகிப்பது! ஒப்புக் கொள்வது என்பதோ முடியவே முடியாத காரியம்!"

இப்படி வேடிக்கையாக அவர் சொல்லித் தப்பித்துக் கொண்டாலும், கல்கி சொன்ன விஷயத்தில் அவருடைய திடமான ஒரு அபிப்பிராயம் வெளியாகிறது. அதாவது 'உழைப்பினால் உயர்ந்தவன்' என்று தன்னைச் சொல்லிக் கொள்வதிலேதான் அவருக்குத் திருப்தி. பிறரும் தன்னை அப்படிச் சொல்வதையே அவர் விரும்பினார். 'கருவிலே திரு', 'பிறப்பிலேயே அமைந்த பேறு' என்றெல்லாம் யாராவது அவரிடம் வந்து "கொம்பு சீவி"னால் அவர் குறும்புத்தனமாகச் சிரிப்பார். ஏதாவது பளிச்சென்று பதிலும் சொல்லுவார். தம்முடைய பால்யத்தில் தாம் பட்ட அநுபவங்களையும், பின்னர் கூட்டுறவினாலும், விடா முயற்சியினாலும் எப்படித் தம்மையும் தமது எழுத்துத் திறமையையும் வளர்த்துக் கொண்டார் என்பதையும் பல சந்தர்ப்பங்களில் அவர் உத்சாகத்தோடு என்னிடம் சொல்லியிருக்கிறார்.

ஒரு சமயம் பிரபல தமிழ் எழுத்தாளர் ஒருவர் கீழ்க்கண்டவாறு எழுதியிருந்தார்: "கல்கி முன்போல் இப்பொழுது ஹாஸ்யமாக எழுதுவதில்லை. அவருடைய ஹாஸ்யத் திறமையெல்லாம் போய் விட்டது. இப்பொழுது தொடர்கதை எழுதுவது ஒன்று தான் அவரால் முடிகிறது!"

இதைப் பற்றிச் சென்ற ஆண்டில் ஒரு நாள் என்னோடு பேசிக் கொண்டிருந்தார். 'ஸ்ரீ — இப்படிச் சொன்னதைப் பார்த்தாயா? அவர் சொல்வது ரொம்ப உண்மை. நான் முன்னைப் போல இப்பொழுது 'கீச்சுக் கீச்சு'க் காட்டுவதில்லை. ஏனென்

னால் அதற்கு அவசியம் இல்லை. நான் தமிழில் எழுத ஆரம்பித்த காலத்தில் எந்த விஷயத்தையும் கொஞ்சம் பலமாகத் தம்பட்டம் அடித்துக் கொண்டு ஆச்சரியக் குறிகள் போட்டு எழுத ஆரம்பித்தால் தான் ஜனங்கள் படித்தார்கள். இப்பொழுது அப்படியில்லை. ஜனங்களுடைய படிப்பு அதிகரித்திருக்கிறது. நுட்பமான விஷயங்களையும் ஆழ்ந்து படிக்கிறார்கள். கீச்சுக் கீச்சுக்கு அவசியம் இல்லை. அத்தோடு இப்பொழுது ஜனங்கள் தொடர் கதைகளையே அதிகமாக விரும்புகிறார்கள். அதனால் இப்பொழுது தொடர் கதைகள் எழுதுவதிலேயே அதிகமாக ஈடுபட்டிருக்கிறேன். இதில் ஸ்ரீ—க்கு என்ன ஆட்சேபணை? அவர் வேண்டுமானால் ஜனங்களுக்குப் பிடிக்காத விஷயங்களை எழுதிக் கொண்டிருக்கட்டும். நான் ஜனங்களுக்குப் பிடிக்கிற விஷயங்களைத்தான் எழுதுவேன்!"



இவ்வாறு சொன்னார் கல்கி. இது நூற்றுக்கு நூறு உண்மையான வார்த்தை. ஆரம்ப காலத்தில் அவர் எழுதிய கட்டுரைகளோடு, பின்னர் அவர் எழுதிய எழுத்துக்களை ஒப்பிட்டுப் பார்த்தால் இந்த உண்மை தெளிவாகப் புலப்படும். ஆனால் ஸ்ரீ—யோ கல்கி குறிப்பிட்ட அந்தத் "தம்பட்டத்தை"யே இன்னும் கட்டிக் கொண்டு அழவேண்டும் என்றார். இது கல்கிக்குப் பிடிப்பதில்லை. அவர் கணந்தோறும் வளரும் எழுத்தாளர். புதிது புதிதாக விஷயங்களைக் கற்றுக் கொண்டு நாளுக்கு நாள் ஜனங்களோடு தாமும் வளர்ந்து, அவர்களையும் வளரச் செய்தவர். இதுவே அவருடைய விசேஷச் சிறப்பு.

கல்கிக்கு இயற்கையிலேயே அமைந்திருந்த ஆற்றல் மேலும் மேலும் வளர்வதற்குக் காரணமாக இருந்தவை அவருடைய தொடர்புகளே. இந்தத் தொடர்புகளின் மூலம் தம்முடைய வல்லமையை அற்புதமான முறையிலே விருத்தி செய்து கொண்டார். திரு வி. க. வின் தொடர்பினால் திருத்தமான தமிழும், ராஜாஜியின் தொடர்பினால் எந்த விஷயத்தையும் அலசி ஆராய்ந்து தெளிவாக எடுத்துக் கூறும் ஆற்றலும், டி.கே.சி.யின் தொடர்பினால் இதயப் பண்பாடோடு எதையும் பார்த்து அநுபவித்துச் சொல்லும் உல்லாசமான இலக்கிய நடையும், பூக்களிலிருந்து தேனை எடுக்கும் தேனீயாக நின்று சேகரித்துத் திரட்டி, இயற்கையிலே தமக்கு இருந்த திறமையை மிக நன்றாக வளர்த்துக் கொண்டார் கல்கி. அவருடைய எழுத்தை-கடந்த முப்பது ஆண்டுகளாக அவர் எழுதிவந்த எழுத்தை--ஆராய்ச்சிக் கண்ணோடு பார்த்து வகைப்படுத்தினால் இந்த உண்மையை நன்றாகப் புரிந்து கொள்ளலாம். ஜாதகத்திலும் நவக்ரகங்களிலும் நம்பிக்கையும் பொறுப்பும் வைக்க மனம் ஒப்பாத இந்தப்பேராசிரியர், கடைசி மட்டும் ராஜாஜி, டி.கே.சி என்ற அந்த இரண்டு கிரகங்களும் எப்படித் தமது ஜாதகத்திலே புகுந்து விளையாடின என்பதைப் பூரணமாக உணர்ந்தவர்.

"நான் என்ன எழுதினாலும் அதைப் பாராட்டி என்னை உற்சாகப்படுத்தியவர் டி.கே.சி. நான் என்ன எழுதினாலும் அதில் உள்ள குற்றத்தைச் சொல்லி என்னைத் திருத்தியவர் ராஜாஜி. இந்த இருவருக்கும் நான் கடன்பட்டிருப்பது போல் வேறு யாருக்கும் கடன் பட்ட இல்லை" என்று ஒருசமயம் குறிப்பிட்டார்.

என் வரையில் என்னை மிக மிகக் கவர்ந்தவை கல்கியினுடைய சிறுகதைகளும், அவருடைய சங்கீத விமர்சனங்களும்! எத்தனையோ சந்தர்ப்பங்களில் கதைகள் எழுதுவதற்கு முன்பு, 'இப்படி எழுதலாம் என்று இருக்கிறேன்' என்று என்னிடம் கதையைச் சொல்லுவார். மாட்டு வண்டியில் ஒரு சமயம் நாங்கள் ஒன்றாகப் பிரயாணம் செய்தபோது சிவகாமியின் சபதம் முழுதையும் என்னிடம் வாய் மொழியாகச் சொன்னார்.

திருநெல்வேலிக்கு வரும்போதெல்லாம், சுலோசன முதலியார் பாலத்தருகே உள்ள ஒரு பெஞ்சில் உட்கார்ந்து இரவு நீண்ட நேரம் பேசிக் கொண்டிருப்பார். வீடு திரும்பியதும் டி. கே. சி. 'பனியில் நடக்கலாமா' என்று கோபித்துக் கொள்ளுகிற அளவுக்கு, ஒரு நாள் மேலப் பாளையம் வரை நாங்கள் இருவரும் நடந்தே சென்று விட்டோம். 'கடிதமும் கண்ணீரும்' என்ற கதையை எழுதுவதற்கு இரண்டு வாரங்களுக்கு முன்பு அது. அந்தக் கதையின் முடிவிலே உள்ள 'திகைப்பு' இருக்கிறதே, அதைக் கடைசி வரையில் வாசகர்களுக்குச் சொல்லாமல் சம்பவத்தை எப்படிக் கொண்டு போவது, எப்படி ஆரம்பிப்பது என்று பல யோசனைகளைச் சொல்லிக் கொண்டே வந்தவர், பாலத்தின் அருகிலே சட்டென்று நின்றார். ஒரு குழந்தையைப் போல "தம்பி, பேஷாப் போச்சு! இப்படி ஆரம்பித்து விடுகிறேன்!" என்று, கதையை இப்பொழுது எழுதியிருக்கிற உருவத்தில் உற்சாகத்தோடு சொன்னார். இந்தச் சம்பவம் இன்றைக்கும் என் மனத்தில் பசுமையாக நிற்கிறது. 'கடிதமும் கண்ணீரும்' என்ற கதையைப் படிக்கும் போதெல்லாம் எனக்குச் சுலோசன முதலியார் பாலமும், அதன் அருகிலே திரும்பிச் செல்லும் மேலப் பாளையம் சாலையுந்தான் கண் முன்னே நிற்கின்றன. உடனே என்னிடமுள்ள கடிதக் கட்டுகளை எடுத்து, கல்கி அந்தக் கதையை வெளியிட்டதும் சென்னையிலிருந்து எனக்கு எழுதிய அருமையான ஒரு கடிதத்தை எடுத்துப் பார்க்கிறேன். கண்ணீர் வருகிறது என்று சொன்னால், உண்மையான வார்த்தை.

# சிவன் கீர்த்தனைகள்

ஸ்வர அமைப்பு: செம்மங்குடி சீனிவாச ஐயர்

**கீர்த்தனம் 12** ராகம் பௌளி மிச்ரசாபு தாளம்

## பல்லவி

கருணை நிதியே தாயே
கடைக்கண் பார்த்தருள் வாயே (கருணை)

## அனுபல்லவி

அருணோதயம் கண்டால்
அகலும் பனி இருள் போல்
அன்னையுந் தனரு ளிருந்தால்
அகன்றிடுமே புன்பவ நோய்என் பரம (கருணை)

## சரணம்

உனை மறந்து என் வாழ்நாளில்
ஒரு கணமுமிருந்தறி யேனே
அனைமறந் தினஞ்சிக வுண்டோ
அவ்வணை முனைநம்பினேன் நானே
மனம் நிறைந்த அன்பரையான
மயிலை வந்த கல்பகம் நீயே
எனது பிழை பொறுத்தரு ளாயேல்
இனிஏது துணை மேதினியில் மாதுமையே (கருணை)

பௌளி ராகம் 15-வது மேளமாகிற மாயா மாளவ கௌளையில் பிறந்த உபாங்க ராகம். சுத்தரிஷபம், அந்தரகாந்தாரம், பஞ்சமம், சுத்ததைவதம், காகலி நிஷாதம். இதன்

ஆரோஹணம்: ஸ ரி க ப த ஸ்
அவரோஹணம்: ஸ் நி த ப க ரி ஸ

## பல்லவி

1 , , , க கா | பா ; | ; கா || ப தா பா , | ப க த ப | ப தா ப ||
க ரு ணை நி தி - யே தா - - - யே - -
, , , க பா | த ஸ் நி த | த பா , || ப க த பா , | ப க த ப | க ப க ரி ||
க டை க்கண் - - பார்த் - த - - ருள் வா - - - யே - - -
2 ரி ஸ ரி க ப ரி | க பா , | ; ப க || ப தா தபபா , | ப க த ப | ப தா ப ||
- - - க ரு - ணை - நி - தி - யே - - தா - - - யே - -
, , , க பா | தாரிஸ்நிதா , | த பா க || ப த தஸ் ப த ப | க ப த ஸ் | தப கபகா ||
க டை க்க ண் - - - பா - - ர்த்த - - - ருள் - - வா - - - - - யே -
3 ரி ஸ ரி க ப ரி | க பா , | ; ப க || ப தா தபபா , | ; ; | ; ; ||
- - - க ரு - ணை - நி - தி - யே - -

## அனுபல்லவி

, , , ப தா | பா ; | ப க த ப || தா ; ; | ஸ்ா ; | ஸ்ா ; ||
அ ரு ணோ - - த - யம் கண் டால்
, , , ப தா | ஸ்ா ; | ; ரி || ஸ்ா , ஸ்ா , | ஸ் நி தா | தா பா ||
அ க லும் ப னி இ ருள் - - போ ல் -
, , , ப தா | ப த நி த | ப க த ப || தா ; ; | ஸ்ா ; | ஸ்ா ; ||
அ ரு ணோ - - - - - த - யம் கண் டால்
, , , ப தா | ஸ்ா , ரி கா | ரி ரி || ஸ்ரிக் ரிஸ்ஸ்ா , | ஸ் நி பா | தா ; ||
அ க லும் - - - ப னி - - இ - - ருள் - - போல்
பா த ஸ்ா ஸ் | த ரி ஸ் நி | த தா க || த ப க ரி கா | பக பாதஸ் | தா த ப ||
அன்னை யு ந்த ன ரு ளி ரு - ந்தா ல கன்- றி டு மே பு-ன்ப வ - நோய்என்-
ட க ரி க ப ரி | க பா | ; ; || ; ; ; | ; ; | ; ; ||
ப ர ம க ரு - ணை - நி தியே - - - - - - - -

## சரணம்

1 க ரி க பா ப | பா ப க | த ப தா || க ப த ஸ் த ப | காதப கரி | கா கா ||
உ னை ம றந்து என்வாழ்- நா - ளில் ஒ ரு க ண மு மி ருந் - - த றி யே னே
ஸ ரி க க ரி க | த ப க ப | கரி , ஸா || ஸ த ஸ ரி கரி | க த ப க | பா பா ||
அனை ம ற -ந் தி ன - ஞ்சிக வு-ண்டோ அவ்-வணை முனை நம்-பினேன் நா னே
1 காபரி க பா ப | பா ப க | த ப தா || க ப த ஸ் நித | ப க த ப | க ரி கா ||
உ னை - மறந்து என்வாழ்- நா - ளில் ஒரு கண மு மி ருந் - த றி யே - னே
ஸ ரி க க ரி க | த ப க ப | க ரி , ஸா || ஸ த ஸ ரி . க ரி | க த ப க | பா பா ||
அ னை ம றந் தி ன- ஞ் சிக வு-ண்டோ அ-வ்வணை முனை நம்-பினேன் நா னே
க ப த பா ப | த த ப க | த ப தா || க ப த கா க | தா ப த | ஸ்ா ஸ்ா ||
மனம் நிறைந்த அன்-பரை யா - ன மயிலை வந்த கல்பகம் நீ யே
ப த ஸ் ரி க் ரி | கா ப்க் ரி | ஸ்ா ஸ்ா || பத க்ரி ஸ் ஸ் | ஸ் ஸ்ா நி | தப தப ||
எனதுபிழைபொ றுத்த -ரு ளா யே ல் இனி ஏ - து து ணை மே தி னியில்மா-
ப க ரி கபரி | க பா , | டை || டை | டை | டை ||
துமையே கரு - ணை நி தியேதாயே. ,, ,,


"கௌரிக் கண்மணி!"
''கௌரிக் கண்மணி''
''கௌரிக் கண்மணி''
என்று கூப்பிடுவதில் கல்கி அவர்களுக்கு ஒரு ஆனந்தம். அவளுடன் விளையாடுவது ஒரு இனிய பொழுது போக்கு. அவ்விதம் கல்கி அவர்களின் உள்ளத்தைக் கவர்ந்த அருமைப் பேத்தி கௌரியின் பல முக பாவங்களை இந்தப் பக்கத்தில் காணலாம்.
மணியம்-

# டி.கே.சி.யின் கடிதங்கள்

திருக்குற்றாலம்,
5—6—45

அருமை நண்பர் கல்கி அவர்களுக்கு,

மாயவரத்தில் 23—5—45 அன்று காலையில் எல்லாருமாகச் சந்தித்தோம். நேற்றுக் கோயில்பட்டியில் பிற்பகல் 2-20 மணிக்குப் பிரிந்தோம்.

இடையில் ஆனந்தித்த அனுபவம் கொஞ்சவஞ்சம் அல்ல: அதோடு நெஞ்சை விட்டுப் போகாத அனுபவம்.

ராஜாஜி எல்லாவற்றையும் ரொம்ப அனுபவித்தார்கள்: அனுபவித்தார்கள் என்பது எட்டயபுரத்திலிருந்து தூத்துக்குடிக்குப் போகும்போது "எல்லாவற்றிற்கும் இப்படித்தான் முடிவு உண்டென்பதை எண்ண வேண்டி யிருக்கிறது" என்று சொன்னதிலிருந்து தெரிந்தது.

சாதாரணமாய் மகாநாடு கூடிப் பிரசங்கம் செய்கிறது என்றால் கஷ்டமான காரியந்தான். ஆனால் ராஜாஜி தலைமையில் நடந்த மகாநாடோ ஒரே ரஸமயமாய் இருந்தது. எல்லாருமே உணர்ச்சியோடு பேசினார்கள். ராஜாஜி பெரிய விஷயங்களை நன்றாய் விளக்கினார்கள். எல்லாவற்றையும் விடத் தங்கள் வந்தனோபசாரம் கேட்கக் கேட்க ஆனந்தமாய் இருந்தது. சதாசிவம், சிவகாமி சபதத்தில் ஒரு பாத்திரமோ என்று சொல்லும்படி அவரைப் பற்றிச் சொன்னது அவ்வளவு ரஸமா யிருந்தது. பேச்சு முடிந்ததும் வந்தனத்துக்கு உரியவர்கள் வேறு இல்லையா என்று எண்ணத் தோன்றியது.

பொதுவாக எந்த மகாநாட்டிலும் வந்தனோபசாரம் சங்கீதக் கச்சேரியில் "மங்களம்" போன்றது தான். அதாவது சபையோரை எழுந்துவிடச் செய்கிற காரியந்தான். துண்டை உதறச் செய்கிற காரியந்தான். தங்கள் வந்தனோபசாரமோ பதிலுக்கு மாறாக எல்லாரையும் ஆனந்தத்தில் திளைக்கச் செய்தது.

உயிரோடிருக்கிறவர்களுக்கு, நல்ல காலம் பிறப்பது போல அமரநிலை அடைந்தவர்களுக்கும் நல்ல தசை திமுர் என்று ஏற்படுகிறது. பாரதிக்கு அப்படி ஏற்பட்டு விட்டது ரொம்ப சந்தோஷம்.

தங்கள்,
டி. கே. சிதம்பரநாதன்

பிற்குறிப்பு. (10—6—45)

கல்கி நேற்று மாலைதான் கிடைத்தது. அதற்காக இங்கே ஒரே அடிபிடிதான்.

'பொழுது புலர்ந்தது' ஒன்றைத்தான் படித்திருக்கிறேன். நேயர்களை எட்டயபுரத்துக்குக் கொண்டு போய்ப் பெரிய நெருக்கடிக்கு உள்ளாக்கி விடுகிறது. கட்டுரையும் வாய்ப்பான படங்களும் சேர்ந்து என்றுமில்லாத விழா, எதிர்பாராத கூட்டம், ஒரே கோலாகலம், வாழை, தோரணம், மங்களகிரியை, ராஜாவும் ராஜாஜியும் சேர்ந்து கொத்துவேலை செய்கிற காரியம் எல்லாவற்றையும் அற்புதமான பிரகாசத்தோடு கண்ணுக்கு முன் கொண்டு வருகின்றன. எட்டயபுரத்துக்கு வந்தவர்கள் ஜோர் ஜோர் என்று சொல்லுகிறார்கள். வராதவர்கள், 'அடடா! வராமல் போய் விட்டோமே' என்று சொல்லுகிறார்கள்.

ராஜாஜிக்கு ரொம்ப திருப்தி. எட்டயபுரத்துக்கு வந்தவர்கள் தானே அவர்கள்.

பிள்ளையாரை எங்கே வேண்டுமானாலும்—குளக்கரை, ஆற்றங்கரை, முக்கு முடுக்கு எங்கே வேண்டுமானாலும் வைத்துக் குழையோ பூவோ போட்டு ஆராதனை செய்து விடலாம். யாரும் குற்றம் சொல்ல மாட்டார்கள். அது போலத்தான் பாரதி அஸ்திவார விழாவுக்கு என்னை உபயோகப் படுத்தி யிருக்கிறது.

இங்ஙனம்,
டி. கே. சிதம்பரநாதன்

கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் பக்கத்தில் உட்கார்ந்திருப்பவர்தான் அவர் சகோதரர் திரு ரா. வேங்கடராமய்யர். கல்கி அவர்கள் மடியில் பேத்தி கௌரி.











எங்கள்

40 குச்சி

கோபுரம் மார்க்
சிம்கோ லைட் மார்க்
சிம்கோ சைகிள் மார்க்

60 குச்சி

வேட்டை சிங்கம் மார்க்

தீப்பெட்டிகளும்

கடற்கரை, குளிர்ப் பிரதேசங்களுக்கும்
மற்றும் மலபார் மழைக்கும் உகந்தது

○●○

சிறந்த சரக்கு உற்பத்தி!
சிறப்பான பொதுஜன ஆதரவு !!

○●○




காந்திய முறைப்படி தினம்
குடிசைத் தொழிலாகத்
தயாராகும் 3,300 குரோஸ்
தீப்பெட்டிகளும் எங்க
ளுடைய டெப்போக்களில்
செலவாகி வருகின்றன




**சிம்கோ, சிவகாசி.** S.I. போன் 63. தந்தி: SIMCO

★ ★ ★ திரு ரா. கி. அவர்களின் தமையனார் ஸ்ரீ வேங்கடராமய்யர் அவர்கள், சிறு வயதிலிருந்தே தம்பியிடம் மிக்க பிரியத்துடன் பழகி அவருடைய வாழ்க்கையில் அளவற்ற சிரத்தை கொண்டிருந்தவர். அவர் தமது அருமைச் சகோதரரைப் பற்றிக் கூறுகிறார். — ஆசிரியர்

# அருமைத் தம்பி

ரா. வேங்கடராமய்யர்

மாயூரத்துக்கு வடக்கில் ஒன்பது மைலில் எங்கள் கிராமம் புத்தமங்கலம் இருக்கிறது. மணல்மேடு என்ற கிராமத்துக்கு நான்கு பர்லாங்கு தெற்கில் இருக்கிறது.

எங்கள் தந்தையின் பெயர் ராமஸ்வாமி அய்யர். அவரை ஊரிலுள்ள பெரியோர்கள் "பொன்னு" என்று கூப்பிடுவார்கள். மணல்மேடு கிராமத்தின் கர்ணம். அவருக்கு இருபதாவது வயதில் கலியாணமாயிற்று. ஒரு பெண் பிறந்தது. அப் பிரசவத்தில் எங்கள் பெரிய தாயார் இறந்து விட்டார்.

பிறகு எங்கள் தாயார் தையல் நாயகி அம்மாள் இளையதாரமாக வாழ்க்கைப் பட்டார். நாங்கள் மொத்தம் ஐந்து பேர்,– ஆண்கள் மூன்று. பெண்கள் இரண்டு. மூத்தவன் நான்; இரண்டாவதாகக் கிருஷ்ணமூர்த்தி 1899-ம் வருஷம் பிறந்தான்.

மணல்மேடு கிராமத்தில் சாவடிக்குளம் என்று ஒரு பெரிய குளம் இருக்கிறது. குளத்தின் கீழ்க் கரையில் ஒரு அரசமரமும் பிள்ளையார் கோவிலும் உண்டு. கோவிலுக்கு வடபுறம் பத்து கஜம் தூரத்தில் மணல்மேடு கிராமத்தின் சவுக்கண்டிப் பள்ளிக்கூடம் இருந்தது. நானும் தம்பியும் புத்தமங்கலத்திலிருந்து இன்னும் நான்கைந்து குழந்தைகளும் அந்தப் பள்ளிக்கூடத்துக்குச் சென்று படித்து வருவோம். அப்போது எனக்கு வயது ஒன்பது. தம்பி கிருஷ்ணமூர்த்திக்கு வயது ஆறு.

ஒரு நாள் பிற்பகல் மூன்று மணிக்குக் குளத்தில் எதற்கோ இறங்கினான். இறங்கின இடத்தில் பெரிய மடு இருந்திருக்கிறது. தம்பி அதில் மூழ்கி விட்டான். இதைக் கரையிலிருந்து பார்த்துக் கொண்டிருந்த நான் அவனை எடுக்க இறங்கினேன். நானும் மூழ்கலானேன். ஒருதரம் பாதாளத்துக்குப் போய் மேலே ஜல மட்டத்துக்கு வந்தது இப்போதும் ஞாபகமிருக்கிறது. இரண்டு தடவைகள் உள்ளே போய் விட்டேன். தம்பியும் இரண்டு தரம் மூழ்கித்தான் இருக்க வேண்டும். இன்னும் ஓரிரு நிமிஷங்கள் தாமதமாகியிருந்தால் அவ்வளவுதான். எங்கள் கதையே வேறு மாதிரியிருந்திருக்கும். இதற்குள் துறைக்கு ஜலம் எடுக்க வந்த ஒரு பெண்மணி, "ஐயோ, கர்ணம் வீட்டுக் குழந்தைகள் இரண்டும் மடுவில் விழுந்து விட்டார்களே" என்று கத்தினாள். பட்டா மணியக்காரரும் உபாத்தியாயர் சாமிநாதய்யரும் ஓடோடி வந்து மடுவில் குதித்து எங்களைக் காப்பாற்றினார்கள். அத்துடன் எங்கள் சவுக்கண்டிப் பள்ளி வாழ்க்கை முடிந்தது.

* * *

என் தந்தையின் உதவி கொண்டு ஏற்படுத்தப்பட்ட பாண்டுரங்கன் எலிமெண்டரி பாடசாலையில் உபாத்தியாயராக இருந்த ஸ்ரீ அய்யாசாமி ஐயரால் கிருஷ்ணமூர்த்தி அடைந்த பயன் சொல்லி முடியாது.

1908-ம் வருஷம் எங்கள் தந்தை தம் நாற்பத்தி மூன்றாம் வயதில் காலமாகிவிட்டார். ஒரு வருஷம் சென்ற பின் மாயூரத்தில் நான் முதல் பாரத்திலும் தம்பி நாலாவது வகுப்பிலும் சேர்ந்து படித்தோம். அப்போது மகாதான தெரு பாண்டுரங்க மடத்தில் ஸ்ரீ சிவராம கிருஷ்ண சாஸ்திரிகள் ஹரிகதையைக் கேட்கத் தவற மாட்டோம். குடும்ப நிலை காரணமாகப் படிப்பைத் தொடர முடியாமல் ஊருக்குத் திரும்பி விட்டோம். நானும் தம்பியும் எங்கள் பழைய ஆசிரியர் அய்யாசாமி அய்யரிடமே மீண்டும் தனியாகப் படிக்கத் தொடங்கினோம்.

அய்யாசாமி அய்யர் அவர்களுடன் எங்கே ஹரிகதை நடந்தாலும், கச்சேரி நடந்தாலும் போவான். இவனும் அவர்கள் மாதிரியே ஹரிகதை செய்யத் தொடங்கினான். இரண்டு மணி நேரம் மூன்று மணி நேரம் நடக்கும். கிராமத்தார்கள் தவிர பக்கத்து ஊர்களிலிருந்தும் ஜனங்கள் வந்து கிருஷ்ணமூர்த்தியின் கதையை ஆர்வத்துடன் கேட்பார்கள். அய்யாசாமி அய்யருக்கு ஒரே உற்சாகம். பல தடவை "நீ எதற்காகப் படிக்க வேண்டும் என்கிறாய்! இந்த ஹரிகதைத் துறையில் நீ முயன்று பயின்றால் இப்போது காலட்சேபம் செய்யும் பல பாகவதர்களுக்கு நீ ஒன்றும் மட்டமாக மாட்டாய்! வருமானமும் கிடைக்கும்!" என்பார்.

இப்படிப் பன்னிரண்டு வயது முதல் பதினேழு வயது வரை படிப்பிலும், ஹரிகதையிலும், பஜனையிலும், கர்ண உத்தியோகத்தில் எனக்கு உதவி செய்வதிலும் கழிந்தது. ஆயினும், இவைகள் எதிலும் பிடிப்பு ஏற்படவில்லை. எங்கள் தாயாருக்குத் தங்கை திருச்சியிலிருந்தபடியால் அங்கு தங்கிப் பள்ளிக்கூடம் சேர்ந்து படிப்பது என்று முடிவாயிற்று. இதுகாறும் வீட்டிலேயே படித்து வந்ததால் மூன்றாவது பாரத்தில்தான் சேர முடிந்தது. அன்றிலிருந்து நேஷனல் காலேஜை விட்டு வெளியேறும் வரையில் ஒவ்வொரு வகுப்பிலும் அவன்தான் முதல்வன்.

கல்லூரிப் புத்தகசாலைக்குப் பல பத்திரிகைகள் வரும். அந்தப் புத்தகசாலையோ கல்லூரி மாணவர்களுக்கு ஏற்பட்டது. தினம் கிருஷ்ணமூர்த்தி அங்கே போய் 'மாடர்ன் ரிவியூ' முதலிய ஆங்கிலப் பத்திரிகைகளைப் படிப்பான். ஒரு நாள் கல்லூரிப் பேராசிரியர் இவன் வருவதைப் பார்த்து, "நீ எந்த வகுப்பில் படிக்கிறாய்?" என்று கேட்டார்.

"நாலாவது பாரம்" என்றான்.

"இது காலேஜ் மாணவர்களுக்குத் தான் ஏற்பட்டது. மேலும் ஹைஸ்கூல் மாணவ னுக்கு இதெல்லாம் என்ன புரியும்! எப்படி இங்கே ஹைஸ்கூல் மாணவனை அனுமதித் தார்கள்!" என்று இரைந்தாராம்.

இதற்குக் கிருஷ்ணமூர்த்தி சாவதானமாக, "அன்னிபெஸண்ட் அம்மையார், 'நியூ இண்டியா'வில் 'இந்தியர்களுக்குத் தாங்கள் சுயராஜ்யம் பெற வேண்டும்' என்ற எண்ணம் தோன்றி யிருப்பதே அவர்கள் சுயராஜ்யம் பெறத் தகுதி பெற்றவர்கள் என்பதை நிரூபிக் கிறது என்று எழுதி யிருக்கிறார். அதேபோல நான் இங்கு படிக்க வேண்டும் என்று ஆசைப் பட்டு வந்து படிப்பதிலிருந்தே அதிலுள்ள விஷயம் எனக்குப் புரியும் என்றும் இங்கு வந்து படிக்கத் தகுதி பெற்றவன் என்பதையும் நிரூபிக்கிறது" என்றான்.

மகாத்மாவின் ஒத்துழையாமை இயக்கத் தில் கலாசாலையை விட்டு மாணவர்கள் வெளி யேற வேண்டுமென்ற கட்டளைக் கிணங்க, பொதுப் பரீட்சை எழுத ஒரு வாரம் இருக்கும் போது கலாசாலையை விட்டு வெளியேறினான்.

நேஷனல் கல்லூரி பிரின்ஸிபாலிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. அதில், 'உங்கள் தம்பி கலாசாலையிலேயே முதல்வனாகவும், புத்திசாலியாகவும் இருந்து வந்தான் — ஸ்கூலை விட்டு விலகி விட்டான். உடனே வந்து புத்தி மதிகளைச் சொல்லிப் பள்ளியில் சேர்த்து விட்டுப் போகவும்' என்று எழுதி யிருந்தது.

அன்றைய தினமே தம்பி கிருஷ்ணமூர்த்தி யிடமிருந்தும், ஒரு கடிதம் வந்தது.

......நமஸ்காரம் என்று ஆரம்பித்து, நம் முடைய வாழ்நாளில் நமக்கு வழிகாட்டியா யிருந்து நம்மை நடத்திக் கொண்டு போகும் சர்வ வல்லமையுள்ள ஓர் சக்தி உளதென்பது தாங்கள் அறியாததன்றே. நமது அசா பாசங்கள் எப்படி யிருப்பினும் நாம் அச்சக்தி யின் இஷ்டப்படியே நடக்க வேண்டியவர்க ளாக இருக்கிறோம்.

தற்காலப் படிப்பிலுள்ள கெடுதிகள் எல்லாம் தாங்கள் அறியாததல்ல. இந்தப் படிப்பு அடிமைப் புத்தியை வளர்க்கிறது. உற்றார் பெற்றோர்களிடத்தில் அலட்சியம் அளிக்கிறது. இன்னும் சில — மொத்தத்தில் மனிதனை மிருக மாக்குகிறது.

ஆதலால் நமது தேசத் தலைவரின் கட்டளைக் கிணங்க நான் கலாசாலையிலிருந்து விலகி விட்டேன்.

இந்த வயதில் இவ்வளவு திடமான மனத் திடனும், தன்னம்பிக்கையுடனும், நிச்சய புத்தியுடனும் எழுதியிருக்கும் கடிதத்தைக் கொண்டு இவன் வாழ்க்கையில் எப்படியும் முன்னுக்கு வருவான், இவனைத் தடுத்தல் சரி யல்ல என்று எனக்குத் தோன்றி விட்டது.

பிறகு கொஞ்ச நாள் கதர் கடையில் இருந்தும், காங்கிரஸ் பிரசாரம் செய்தும், (முக்கியமாய் "பிரின்ஸ் ஆப் வேல்ஸ்" பகிஷ் காரம் சம்பந்தமாய்) 1921-ல் கரூரில் கைது செய்யப்பட்டு ஒரு வருட தண்டனை யடைந் ததும் பலருக்கும் தெரிந்ததே.

1922ம் வருஷக் கடைசியிலோ, 1923-ம் வருஷ ஆரம்பத்திலோ, ராயப்பேட்டை முனிவர் திரு வி. கலியாணசுந்தர முதலியார் அவர்களிடம் வந்து சேர்ந்து "நவசக்தி"யில் பணி புரிய ஆரம்பித்தான். "தமிழ்த் தேனீ இரட்டியது" என்று, நவசக்தியில் வரும் கட்டுரைகள் அந்தக் காலத்தில் மிகவும் பிரசித்தம்.

1923-ம் வருஷத்தில் நானும் என் மாமாவும் சேர்ந்து, நன்னிலம் தாலுக்கா தலையூர் ஸ்ரீ ராமஸ்வாமி அய்யரின் மூத்த பெண் ருக்மிணியைக் கிருஷ்ணமூர்த்திக்கு நிச்சயித் தோம். நல்ல நாள் பார்த்துத் தாம்பூலமும் வாங்கி விட்டோம். அந்நாளில் பெண்களை நேரில் பார்த்து நிச்சயம் செய்யும் வழக்கம் வரவில்லை. ஏதோ நிச்சயம் செய்து எழுதிய விஷயம் சென்னையிலிருந்த என் தம்பிக்குத் தெரிவித்தேன். அதற்கு இரண்டு நாட்கள் கழித்து எனக்குப் பதில் வந்தது.

"எனக்கு வயதாகவில்லையா! நான் பார்த்து நிச்சயிக்க வேண்டியது அவசியமாகப் பட வில்லையா! மரப்பாச்சிக் கல்யாணமாக நினைத்து முடிவு செய்து விட்டீர்களே! இப் படிச் செய்யலாமா! என் வாழ்நாள் பூராவும் பாதிக்கக் கூடிய ஒரு காரியத்தை இப்படி இவ்வளவு அவசரமாக நிச்சயித்து விட்டீர் களே! எனக்கு என்ன எழுதுவது என்றே தோன்றவில்லை" என்று எழுதி யிருந்தான். அந்தச் சமயம் என் மனம் என்ன பாடு பட் டிருக்கும்! என்னென்ன நினைத்திருக்கும் என் பதைச் சிந்தனை செய்ய வாசகர்களுக்கே விட்டு விடுகிறேன்.

தம்பியைச் சென்னையில் நேரில் சந்தித்துப் பேசுவது என்று புறப்பட்டேன்.

அப்போது தம்பி ராயப்பேட்டையில் குகா னந்த நிலயத்தில் தங்கி யிருந்தான். தமிழ் முனிவர் திரு வி. க. அவர்களுடன் இரவில் படுப்பது வழக்கம். நாங்கள் போய்ச் சேர்ந்த அரை மணி நேரத்துக்கெல்லாம் திரு வி. க. அவர்களும் வந்தார்கள். அவர்களிடம் தம்பி என்னை அறிமுகப்படுத்தி வைத்து நான் வந்த நிமித்தத்தைத் திரு வி. க. விடம் சொல்லவே அவ்விஷயம் மறு நாள் பேசலாம் என்று தமிழ் முனிவர் கூறினார்.

காலையில் நானும் கிருஷ்ணமூர்த்தியும் திரு வி. க. அவர்களும் உலாவச் சென்றோம். அப்போது கல்யாணம் நிச்சயம் செய்த விஷ யங்களை யெல்லாம் சொன்னேன். அவர்களும் தம்பியிடம், 'பெரியோர்கள் பார்த்து நிச்சயம் செய்வதென்பது தொன்று தொட்டு வரும் சம்பிரதாயம், அவர்கள் செய்வது நன்மை யாகத்தான் இருக்கும்' என்று கிருஷ்ண மூர்த்திக்குச் சொன்னார். தம்பி கடைசியில் "சம்மதம்" என்று எழுதச் சொன்னான். பின் னர் விவாகம் நல்ல முகூர்த்தத்தில் நடந்தது.

1926-ம் வருஷம் கிருஷ்ணமூர்த்தியின் இல்லற வாழ்க்கை ஆரம்பமாயிற்று.

அப்புறம் இரண்டு மூன்று வருஷங்கள் நவ சக்தியில் இருந்து, அதை விட்டு விலகி 1929-ல் என்று ஞாபகம், தமிழ் நாட்டின் தவப்புதல்வர் ஸ்ரீ ராஜாஜி அவர்களால் ஆரம்பிக்கப்பட்ட "விமோசனம்" பத்திரிகையில் தொண்டு செய்யத் திருச்செங்கோடு காந்தி ஆசிரமத் துக்குப் போய்ச் சேர்ந்தான்.

அந்த ஒப்பாரும் மிக்காரும் அற்ற மகானின் சேர்க்கையால் அரசியலிலும், சமூகத்திலும், அறிவிலும், ஆற்றலிலும் உன்னதமான நிலைக்கு வந்ததைத் தமிழ்நாடு நன்கு அறியும்.

# ரகுபதி ராகவ








[அகமதாபாத் நவஜீவன் காரியாலயத்தினர் பிரசுரம் செய்திருக்கும் 'சத்தியமே தெய்வம்' என்னும் காந்தி வசன மஞ்சரியிலிருந்து ராஜாஜி எடுத்து எழுதியது]

3

நான் ஆசைப்படுகிறேன்: 'பாபம் ஏதும் செய்யாமல் உண்மையை விட்டுப் பிறழாமல் எண்ணம், பேச்சு, செயல் மூன்றிலும் பழுதற்ற அஹிம்சையைக் கடைப்பிடித்து நடக்க ஆசைப்படுகிறேன். இதற்காகவே மிக அலைந்து வருகிறேன். என்னுடைய சக்தியோ அதற்குப் போதியதாக இல்லை. நான் ஆசைப்படும் நிலையே தான்., நாம் அனைவரும் நாடவேண்டிய நிலை என்பதை அறிவேன். ஆயினும் ஆசைப்படி நடந்து கொள்ள என்னால் முடியவில்லை. இந்த மலைமேல் ஏறுவது மிகக் கடினமாக இருக்கிறது. ஆயினும் ஏறும் போது உண்டாகும் வருத்தமே என் உள்ளத்துக்கு மெய்யான இன்பம் தருகிறது. ஏறும் ஒவ்வொரு அடியும் எனக்கு ஒரு புது சக்தி தருகிறது: அடுத்த அடி எடுத்து வைக்க பலம் தருகிறது.

[யங் இந்தியா 9-4-25]

நடந்து செல்ல வேண்டிய பாதையை அறிவேன். அந்தப் பாதை அகலமான பாதை அல்ல. நேராகச் செல்லுகிறது. நல்ல கூரான கத்தி முனையைப் போன்று இந்தக் கஷ்டமான பாதையில் நடப்பது எனக்கு ஆனந்தம் தருகிறது. சில சமயம் தவறுகிறேன். தவறியபோது புலம்புகிறேன். ஆனால் பகவானுடைய வாக்கு இருக்கிறது. நல்வழியில் முயற்சி செய்பவனுக்குக் கேடில்லை.

**பார்த்த! நைவேஹ நாமுத்ர**
**விநாசஸ் தஸ்ய வித்யதே**
**நஹி கல்யாண க்ருத் கச்சித்**
**துர்கதிம் தாத கச்சதி.**

இந்தக் குருவுரை பொய்யாகாது என்பது என் உறுதி. என் பலவீனத்தினால் ஆயிரம் முறை வீழ்ந்தேனாலும் என் நம்பிக்கையை இழக்க மாட்டேன். இந்த ஊனுடலை ஒரு நாள் இல்லாவிட்டால் ஒரு நாள் அடக்கியே தீருவேன். அடக்கித் தெளிவு பெறுவேன். இந்த அசையா நம்பிக்கையோடு உயிர் வைத்துக் கொண்டிருக்கிறேன்.

[யங் இந்தியா 17-6-26]

கடவுளை நான் என் கண்ணால் காணவில்லை. வேறு விதத்திலும் நான் கண்டு விட்டேன் என்று சொல்ல முடியாது. உலகம், எல்லாம் நம்புகிறது, ஈசன் ஒருவன் இருக்கிறான் என்று. அந்த நம்பிக்கையைக்கொண்டு நானும் வாழ்க்கையைச் செலுத்துகிறேன். எனக்கு உண்டாகியிருக்கும் இந்த நம்பிக்கை அழிக்க முடியாத நம்பிக்கை. அழியாத நம்பிக்கை பிரத்யக்ஷ பிரமாணத்துக்குச் சமமாகவே ஆய்விடுகிறது. என்றாலும் எவ்வளவு உறுதியானதாயினும் ஒரு நம்பிக்கையை பிரத்யக்ஷமாகக் கண்டேன் என்று சொல்லுவது உண்மைக்கு மாறாகும். ஆனபடியால் என்னுடைய கடவுள் நம்பிக்கைக்குச் சரியான ஒரு சொல்லை நான் காணவில்லை. இத்துடன் நிறுத்திக் கொள்ளுகிறேன்.

[சுய சரிதம்]

# பால்ய சிநேகிதர்

சுவாமி ருத்ரானந்தா

எந்த ஜில்லாவிலுள்ள கோவில்களை எண்ணினாலும் எண்ணலாம்; இந்தத் தஞ்சை ஜில்லாவிலுள்ள கோவில்களை மட்டும் எண்ண முடியாது என்னலாம். மணல்மேடு புண்ணியம் செய்த ஊர்; ஏனென்றால் இந்த மேட்டில் சேர்ந்திருப்பது புத்த மங்கலம்; புத்தரின் போதனை நிகழ்ந்திருக்கக் கூடும். இங்குதான் பாலிய சிநேகிதர் கிருஷ்ணமூர்த்தி பிறந்தார்.

கிருஷ்ணமூர்த்தி பிறந்த வீட்டுக்கு அடுத்த வீடு அய்யாசாமி அய்யரின் வீடு. கிருஷ்ணமூர்த்தியைக் கிருஷ்ணமூர்த்தியாக்கினது அய்யாசாமி அய்யரே. அய்யா! சாமி! என்று ஒவ்வொரு நாளும் அநேகம் பேர் அவரை அழைப்பதும் வணங்குவதுமாய் இருப்பார்கள்.

கிருஷ்ணமூர்த்திக்குக் கல்வி யளித்தவர் அய்யாசாமி அய்யர்; குருவானவரும் அய்யாசாமி அய்யரே.

அய்யாசாமி அய்யர் பள்ளிக்கூடத்தில் பாடம் நடத்துவது அதிசயமாய் இருக்கும். பள்ளிக்கூடத்தில் வாத விவாதம் பலமாய் நடக்கும். இந்தப் போட்டிகளில் முதலில் நிற்கும் பையன் கிருஷ்ணமூர்த்தி.

"எண்ணும் எழுத்தும் கண்ணெனத் தகும்." எழுத்தில் கிருஷ்ணமூர்த்தி முதலானால், எண்ணில் வேறொருவன் முதலாய் வருவான். இதனாலும் போட்டி அதிகரிக்கும். கிருஷ்ணமூர்த்தியைக் கீழே தள்ளி மேலே வர மற்றப் பையன்கள் எப்போதும் முயலுவார்கள். கிருஷ்ணமூர்த்தி பேச மாட்டான்; ஆனால் சிநேகிதம் மட்டும் அதிகமாகும்; ஒருகாலும் குறையாது.

ஒரு நாள் பள்ளிக்கூடத்திலிருந்து வீட்டுக்குப் போகும் வழியில் இரண்டு தடித்த பிள்ளைகள் எதிர்த்துக் கொண்டார்கள். அப்போது வயது பத்து இருக்கலாம். அவர்களோ வயதில் மூத்தவர்கள், வழி மறிக்கவும் அடிக்கவும் தலைப்பட்டார்கள். வேறு பிள்ளைகளாய் இருந்தால் அடிபட்டுக் கொண்டேனும் வீடு போய்ப் பெரியோர்களிடம் முறை யிடுவார்கள். ஆனால், கிருஷ்ணமூர்த்திக்கு அது கூடவில்லை. மௌனமும் சாந்தமும் அதிகமானதால் தளர்ந்து நின்றுவிட்டு, வேறு சிநேகிதர்களின் உதவியால் எதிரிகளை வென்று பின்னர் வீடு போய்ச் சேர நேரிட்டது.

எப்போதும் புத்தகமும் கையுமாய்க் கிருஷ்ணமூர்த்தி இருப்பதை எல்லோரும் பார்ப்பார்கள். படிப்பது அதிகம். பள்ளிக்கூடத்தில் பரிசு கிருஷ்ணமூர்த்திக்குக் கிடைத்தால், மற்றப் பிள்ளைகள் மனம் சோர்வார்கள். உபாத்தியாயர் தமது செல்வப் பிள்ளைக்கே பரிசு கொடுத்தார் என்று சொல்லும் பொறாமைப் பிள்ளைகள் கூட உண்டு. மன்னர் ஐந்தாம் ஜார்ஜுக்குப் பட்டம் கட்டிய நாள் கொண்டாடுகையில் பள்ளிக்கூடத்தில் ராமாயணப் போட்டிப் பரீட்சை நடந்தது. கிருஷ்ணமூர்த்திக்குப் பரிசு கொடுக்கும்போது, மற்றப் பிள்ளைகளுக்கெல்லாம் திருப்தி செய்வதற்காகத் தமது பணத்திலிருந்து உபாத்தியாயர் 'காப்பிங்' பென்சில் வாங்கிக் கொடுத்தார்.

கிருஷ்ணமூர்த்திக்குப் பாடத் தெரியும். அவர் ஒரு பால பாகவதராகவும் இருந்தார். அய்யாசாமி அய்யர் வீடு தேவலோகம்போல் இருக்கும் என்று சொன்னேனல்லவா? எப்போதும் பஜனை; எப்போதும் பகவத் கதை நடந்த வண்ணமாய் இருக்கும். பிரசாதம் தாராளமாய் இருக்கும். வீடு நிறைந்திருப்பார்கள் மனிதர்கள். உருக்கமான பஜனையும் அய்யரின் நாம ஜபமும் ஏகோபித்து நடக்கும்போது ஊஞ்சலில் இருக்கும் கிருஷ்ணன் ஊஞ்சலோடு தானே அசைந்தாடுவான்! இது கற்பனையோ, அன்றி நிஜமோ யார்தான் நிச்சயமாகச் சொல்ல முடியும்? பார்ப்பவர்கள் நிஜமாகவே நம்புவார்கள். பஜனையில் முக்கியமாய்ப் பாடி வந்தவர் கர்ணம் வெங்கடராமய்யர். கூட எல்லோரும் சேர்ந்து பாடுவார்கள். பாட்டுக்கு அடி எடுத்துக் கொடுப்பது கிருஷ்ணமூர்த்திதான். ராமாயணம், பாரதம், பாகவதம் முதலியன படிப்பதும் கிருஷ்ணமூர்த்திதான். கிருஷ்ணமூர்த்திக்கு அவ்வளவு சங்கீதம் பாட வராது; ஆனால் ராகம், தாளம் முதலியனவற்றில் அநுபவத்தோடு கூடிய சங்கீத ஞானம் இயல்பாகவே இருந்தது.

அண்ணனைப் பின்பாட்டுக்காரராகச் சேர்த்துக் கொண்டு, இச்சிறு பாலகன் கழுத்தில் பூமாலை யணிந்துகொண்டு, கையிலும் காலிலும் சலங்கைகள் அணிந்து நின்று, பெரிய பேர்போன பாகவதர்களைப் போலவே அபிநயித்து, பெரிய கூட்டத்தின் முன்னிலையில், பக்தியோடு உருக்கமாகக் கதா காலக்ஷேபம் செய்வதைப் பார்த்தால் ஆச்சர்யப்படாமல் யாரும் இருக்க முடியாது. எதிரில் உட்கார்ந்து கதையைக் கேட்டுக் கொண்டிருக்கும் அய்யரின் கண்களில்தான் நீர் ஆறாய்ப் பெருகிக் கொண்டிருக்கும் என்பதில் ஆச்சரியம் இல்லை. ஆனால் உட்கார்ந்து கேட்கும் எல்லோருடைய மனமும் உருகி, அவர்களை அறியாது கண்ணீர் விடுவார்கள்! அப்போதுதான் பால பாகவதரின் பிரதாபம் மிக்கதாய்ப் பரவி வந்தது.



இன்ஸானியத்
(ஹிந்தி)

ஜெமினியின் மகோன்னத சித்திரம்

இப்பொழுது சென்னை வெலிங்டனிலும்
மற்றும் பல நகரங்களிலும் நடைபெறுகிறது

திலீப்குமார், பீனாராய், தேவ் அனந்த், ஆகா, ஹாலிவுட் ஜிப்பி

# மாயமாய் வந்தான்!

○●○

பூங்குயில் கூவும் பூஞ்சோலையில் ஒருநாள்
மாமயில் மீது மாயமாய் வந்தான்.

பொன் முகம் அதனில் புன்னகை பொங்க
இன்னமுதென்ன இன் மொழி பகர்ந்தொரு
மின்னலைப் போலே மறைந்தான்.

பனி மலரதனில் புதுமணம் கண்டேன்
வானில் கடலில் வண்ணங்கள் கண்டேன்
தேனிசை வீணையில் தீஞ்சுவை கண்டேன்
தனிமையில் இனிமை கண்டேன்.

வீரவேல் முருகன் மீண்டும் வருவான்
வள்ளி மணாளன் என்னை மறவான்
பேரருளாளன் எனக்கருள்வான் எனும்
பெருமிதத்தால் மெய் மறந்தேன்

○●○





பொருநையின் புது வெள்ளத்தில் மூழ்கிக் கொண்டிருந்த சாம்பசிவத்தைப்பார்த்து, "சாமி யாராகப் போனானே, அந்தத் திருவாழ்த்தான் வந்து விட்டானாம்" என்று சொன்னார் சங்கரம் பிள்ளை.

"எந்தத் திருவாழ்த்தான்!" என்று கேட்டு விட்டு மீண்டும் 'முருகா' போட்டுத் தண்ணீருக்குள் அமிழ்ந்தார் சாம்பசிவம். முத்து முத்தான மலர்கள், ரத்தின மயமான பூக்கள் மிதந்து செல்லும் குளிர் நீரிலே மூழ்கினால் அவராக வெளியே வந்தால் உண்டு; மூச்சு முட்டி எழாத முதலை அவர்.

சங்கரம் பிள்ளை, ஆசாமியின் பிடரியைப் பிடித்துத் தூக்கி, ".அட, சாலைத் தெரு பகங்கிளியா பிள்ளை மகன், முருகன் இருந்தானே போஸ்டாபீஸ் கிளார்க்கு, அந்தத் திருவாழ்த்தான்; இரண்டு வருஷங்கூட ஆகலையே — மறந்தா போயிட்டீங்க! உங்க மருமகன் - தங்கையின் திருக்குமாரன்; அந்தத் திருவாழ்த்தானைத் தான் சொல்லுகிறேன். உங்களுக்கு மறக்கும்படியாகவா நடந்து கொண்டான் அவன்!" என்று சொன்னதும் சாம்பசிவத்துக்குத் தண்ணீரே வெந்நீராகச் சுட்டது.



முதற் பரிசுக் கதை



# துறவி

கல்கி திரு. ரா. கிருஷ்ணமூர்த்தி நினைவுச் சிறுகதைப் போட்டி

## சுகி

"நிஜமாகவா! இல்லே, நம்மை ஆழம் பார்க்கிறீர்களா!" என்று கேட்டார் சாம்பசிவம்.

"பொய் எதற்காக ஐயா! நேற்று ராவிலே அந்தத் திருவாழ்த்தான் சாமியாராக வந்தானாம். ஏக அமளியாம்; தமளியாம். தாடியும் மீசையுமாக வந்தபோது, அவன் தங்கச்சி செண்பகம் வீட்டாரே பயந்து போயிட்டாங்களாம். உங்களுக்குச் சமாசாரம் எதுவும் தெரியாதா! சரியாப் போச்சு. நல்லா மூழ்கிக் குளியுங்க" என்று விளையாட்டாகத் தலையைப் பிடித்து உள்ளே அமுக்கினார் சங்கரம் பிள்ளை.

சாம்பசிவத்தின் உடல், தாமிரவர்ணி வெள்ளச் சுழிப்பிலே அமிழ்ந்து கிடந்தாலும் அவர் உள்ளம், இரண்டு வருடங்களுக்கு முன் நடந்த உணர்ச்சி வெள்ளத்துக்குள் நீந்த ஆரம்பித்தது.



என்னுடைய மகள் தங்கமும் மருமகன் முருகனும் ஒருவரை ஒருவர் மணப்பது என்று குடும்பத்திலே 'ஜோடி' கட்டிவிடப் பட்டவர்கள். தங்கமும் முருகனிடம் கொள்ளை ஆசை வைத்திருந்தாள். ஆனால் முருகனும்—மோகனாவும் புருஷன் மனைவியாகக் குடி வந்த போது என் நெஞ்சம் அக்னி ஜுவாலையாகி விட்டது! தங்கத்தின் உடல், உள்ளம் அக்னிப் பிழம்பாக வெந்திருக்க வேண்டும். துக்க இருள் அவள் மனக்குகையில் இன்று வரை கப்பிக் கொண்டிருக்கிறது. தான் பிராணப் பிரதிஷ்டை செய்திருந்த உருவமான முருகன் மோகனாவின் வசப்பட்டதும் வெறிச்சோடிப்போன என் மகள் வாழ்க்கையில் அத்தனையும் துன்பம்; துன்பம்.

முருகனும்-மோகனாவும் இன்ப வாழ்வின் உதய காலத்தில், வாழ்ந்த மாதிரி யார் வாழ்ந்தார்கள்! எவர் அவர்களைப் போல் காதல் வெள்ளத்தின் கரை கண்டவர்! உலகைச் சொப்பன உலகாக்குகிற நிலவொளியிலே கை கோத்து உலாவப் போவார்கள்; நிழற்படக் காட்சி, நீர் நிலை, உணவுச்சாலை எங்கும் அவர்கள் சேர்ந்தே போவார்கள். அவர்களை ஊரார் பரிகாசம் செய்தால் என்ன! பார்த்துச் சிரித்தால்தான் என்ன!

யௌவனத்தின் கிறுகிறுப்பில் பெண்சாதிப் பித்தன் இரவும் பகலும் அவன் மூந்தானையைப் பிடித்துக் கொண்டு தவங் கிடப்பது உலகில் இயற்கை. ஆனால் எந்த போஸ்டாபீஸ் கிளார்க்கு இரண்டு மாசம் லீவு போட்டு விட்டு உல்லாசப் பறவையாக வீட்டோடு இருந்தான்! இந்தக் கூண்டுக் கிளிகள் இரண்டும் வெளியே வந்து விட்டால், தெருவிலுள்ளவர்கள் திரும்பிப் பார்த்துச் சிரிப்பார்கள். "திருவாழ்ந்தான்" என்று பட்டம் கொடுப்பார்கள். மோகனாவுக்கும், "மோகினிப் பிசாசு" என்று திருநாமம் வழங்கினார்கள்.

தாய்மாமன் என்ற முறையில் நானே, "வே, இது நல்லாயில்லே; வீட்டுக்குள் இருக்கிறது எப்படியானாலும், வெளியே ஆண் பிள்ளையாக நடக்க வேண்டும். நாம் மேல் நாட்டிலே பிறக்கல்லே! 'ஹனிமூன்' என்று ஊர் சுற்று வது, ஜாலியாக உலாவுவது, இது அது எல்லாம் தப்பு" என்று சொன்னேன்.

அதற்குத் திருவாழ்க்தான், "மாமா, நீங்க பத்தாம் பசலி. பேச்சை விடுங்க" என்று சொல்லி விட்டான்.

ரதியும்-மதனையும் போலவே தான் அவர்கள் காதல் வாழ்க்கை நடத்தினார்கள்.

மோகனா ஆற்றிலே குளிக்க வந்தாலும், தலைநிறையப் பூச்சூடி வருவாள்; வாரிவிட்ட சுருட்டைத் தலையோடுதான் மதனன் போன்று வருவான் முருகன். அன்பும் ஆசையும் நிறைந்த கண்கள் என்னதான் பேசுமோ! சிரிப்பும் கும்மாளமும் புதிய புதிய குமிழிகள் விடும். நூற்றுக் கணக்கானவர்கள் குளிக்கும் படித்துறை யென்று எண்ணினும், அவர்கள் மனிதர்கள்! ஆனால், அந்த எண்ணமின்றிச் சாரல் புதுவெள்ளத்தில், கன்னல் சாறாக ஓடும் தண்ணீரில் ஒருவரை ஒருவர் தொட்டுப் பிடித்து விளையாடுவார்கள்! பிறர் வேடிக்கை பார்க்கட்டும்; பேசட்டும். அதனால் என்ன! அவர்கள் உலகமே வேறு. அது இன்ப உலகம்; அன்புமயமான உலகம். பூலோகத்துப் பொறுமைக் கண்கள் அவர்களுக்குத் தெரியாது.

"பெரிய மோகினிப் பிசாசு" என்று பெண்கள்தாம் ஒருவருக்கொருவர் ஆற்றிலே அவளைக் கண்டவுடன் சொல்லுவார்கள். மோகனா, பிறர் சொல்வதைக் கேட்டுச் சிரிப்பாள். திருவாழ்ந்தான் பல்லைக் கடிப்பான். மோகனா, "ஊருக்கு வாழத் தெரியாது, வாழ்கின்றவர்களைப் பார்த்துச் சகிக்காத உலகம் இது" என்று கூறி விட்டுப் போவாள்.

அன்று தங்கம் ஆற்றுக்குக் குளிக்கப் போனபோது, அவளுக்கு முன்னதாக ரவிவர்மாவின் ஊர்வசிப் படம் உயிர்பெற்ற மாதிரி தலையை விரித்து அலைஅலையாகப்புரள மோகனா போய்க் கொண்டிருந்தாள். "மோகினிப் பிசாசு என்றால் மோகினிப் பிசாசுதான். என்ன சௌடால்த்தனம். தன் அழகை இப்படியா விளம்பரம் செய்வது!" என்று தங்கம் தன் னருகே வந்த தோழிக்குச் சொல்லிக் காட்டினாள். ஊரார் சொல்வதைத்தான் என் மகள் தங்கமும் சொன்னாள். தனக்குப் பின்னால் திருவாழ்த்தான் வருவதைத் தங்கம் கவனிக்கவில்லை.

"என்ன சொன்னாய்!" என்று ஒரு பாய்ச்சல் பாய்ந்தான் முருகன்.

"ஊரார் சொல்லுவதைத் தான். அவள் மோகினிப் பிசாசுதான், அத்தான்! பாருங்களேன். என்ன ஒய்யாரம்! வனதேவதை என்று நினைப்போ! மோகினிப் பிசாசுதான். அவள் பெண்ணல்ல! உங்களை முட்டாள் ஆக்கி விட்டாளே!" என்றாள்.



நாடகக் கலைக்குப் புத்துயிரும் புது உற்சாகமும் அளித்த கல்கி அவர்களும், எத்தனையோ மாறுதல்களுக்கு இடையிலும் பல்லாண்டுகளாகத் தமது நாடகக் கலைப் பணியை விடாது நடத்தி வரும் நவாப் ராஜமாணிக்கமும்.—எட்டு ஆண்டுகளுக்கு முன்பு நவாப் நாடகத்தில் கல்கி அவர்கள் தலைமை வகித்துப் பேசிய போது எடுத்த படம்.



கல்கி ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள், அவர் மனைவியார் ஸ்ரீமதி ருக்மிணி அம்மாள், ராஜேந்திரன், புதல்வி ஆனந்தி—இருபதாண்டுகளுக்கு முன்பு எடுத்த படம்.

தங்கம், தன் அத்தைமகன் என்று முருகனைப் பரிகாசம் செய்யும் இடமோ, காலமோ அது அல்ல என்பதைக் கன்னம் நிறைய ஐந்து விரல்கள் பதிந்த காலத்திலே அறிந்தாள். ஒரு வாரம் வரை கன்னத்தில் சூடு போட்டதுபோல இருந்தது. பேய்க்கரமா அவனுக்கு! இல்லை. பெண்ணின்பத்தில் சுடுபட்டவனுக்குத் தன்னை அவமானம் செய்வதைப் பொறுக்கும் திறமை உண்டு; தன் இன்பப் பேடகத்தைக் குறை சொன்னால் அவன் மனித உருவில் உள்ள பேய்.

தங்கம் அடிபட்டது கொக்கிரகுளத்து ஊருக்குள் செய்தியாகி, நானும் தங்கத்துடன் கண்காணுமல் போகும் நிலையேற்பட்டது. பிறகு, நான் கிராமத்தின் பக்கம் குடியேறுவதற்கு முன்னுல் அந்தப் பழி குடியேறிவிட்டது! பெண்ணைத் திருமணம் செய்து வைக்க நினைந்த காலத்தில், அவள் மீதிருந்த பழி வினையாக விளைந்தது. 'பொல்லாத பெண்' 'ஒருவன் கைநீட்டி அடிபட்டவள்' என்று கூறி உலகம் ஏற்க மறுத்தது. பாவிப் பயல், எங்கோ சாமியாராகப் போன பின்னர்தான், இவ்வூரில் மீண்டும் நான் குடிவந்தேன். இன்று இப்பொழுது எங்கிருந்து முளைத்தான்!

மூன்று மாதங்களுக்குமுன், அவன் தங்கை செண்பகம் கொண்டு வந்தாளே அவனுடைய இரண்டு வயதுப் பெண் குழந்தையை, அதற்கு நான் வைத்தியம் செய்திருக்க வேண்டும். ஆனல், இழுப்பிலே கைந்து உயிருக்கு ஊசலாடும் போதும், "இந்தச் சனியனைக் கொண்டு போகச் சொல்லுங்கள்" என்று கத்தினுள் தங்கம். அவள் உள்ளத்திலே ஏற்பட்ட சூடு இன்னும் ஆறவில்லை. அது ஆறாத எரிமலைக் கொதிப்பு. முருகனுடைய குழந்தையைக் கண்டால் வெறுப்பது நியாயமே. அது இன்னும் என் காதுச் சவ்வைக் குத்துகிறது."

இவ்வாறு யோசனையில் மூழ்கவே, இரு கரையும் பொங்கிப் போகும் புது வெள்ளத்தின் குளிர்ச்சி போய்க் கொதி நீராய்த் தகிக்கவே, ஆத்திரத்தோடு வேட்டியைப் பிழிந்தார் சாம்பசிவம். முறுக்கிப் பிழிந்த போது, திருவாழ்த்தானைப் பிழிந்து விடுவதாக எண்ணினுர். அப்படியே, "ஏன் பயல் வந்திருக்கானும்!" என்று அவர் கேட்டார்.

"உங்கள் மகளுக்கு மாப்பிள்ளை பார்க்கத்தான் வந்திருப்பான். பயல், சாமியார் வேஷத்தில் வந்தது எதற்கு? பெற்ற பாசம் ஐயா, பெற்ற பாசம்! தங்கை செண்பகம் கடிதம் போட்டாளாம்; இமயமலை அடிவாரத்திலிருந்து வந்து விட்டான். போய்ப் பாருங்கள், தாடியும் மீசையுமாக என்னமாகத் தங்கத் தகடுபோல அவன் உடம்பு இருக்கிறது, தெரியுமா!" என்று கூறித் தண்ணீருக்குள் அமிழ்ந்து விட்டார் சங்கரம் பிள்ளை.

"அகப்பட்டாயா, பயலே!" என்று சொல்லிக்கொண்டே, வழக்கமாகக் குறுக்குத் துறை நோக்கி வலம் செய்யும் நினைவை மறந்து, வீடு நோக்கி ஈர மணல் காலில் ஒட்டி உதிர்வது போல என்னென்னவோ எண்ணிக் கொண்டு நடந்தார்.

## 2

முருகனும் - மோகனுவும் சந்தித்தது, மோகபரவசம் கொண்டது வாலிபத்தின் வாய்ப்பு. அதைப் பற்றிச் சொல்லும் நேரம்

இதுவன்று. சிற்றின்பத்தின் சிகரத்தில்வாழ்ந்த முருகன் பேரின்பம் நாடிப்போனது தான் பரிதாபமான கதை.

சாதி, சமயம் என்ற எல்லைக்கு அப்பாற்பட்ட அவர்கள் மனங்கனிந்த காதல் வாழ்வில், பெற்றோர் உற்றோர் எல்லோரையும் ஒருமிக்க இழந்தார்கள். தன் கரம் பிடித்தவன் பெற்றோர் பேச்சுக்கு உடன்பட்டுத் தன்னைக் கைவிடக் கூடாதே யென்ற காரணத்தினால் மோகனா தனது பெண்மையின் நாணத்திற்கும் பங்கம் வரும்படி நவீனமாக நடந்தது உண்மை. இதனால், வேலைகூடத் துச்சமாகப் போய் லீவு எடுத்துக் கொண்டு உல்லாச வாழ்வை நடத்தினான் முருகன். ஆண் உள்ளம் நிறைந்த எவனும் இறக்கம் அடையக் கூடிய இளமை எழில் படைத்த மோஹினி அவள். ரம்பை ஊர்வசியின் கூட்டுச் சரக்கு என்றபடி உருவம்; தந்த நிறத்தில் சொல்லுக்கு அடங்காத உடலின் வளைவு குழைவு. உடல் வனப்பின் லாகிரி அவனுக்குப் போதைப் பொருளாகப் போய் விட்டது. கட்டுக் கடங்காத கூந்தல் அலைகள், மனசை அலைமோதச் செய்யும். கொஞ்சும் பார்வையில், அவள் பார்த்தால் நெஞ்சே உருகி நைந்து விடும். பெரிய பெரிய நாட்டிய ராணிகள் தோற்கும் கண்-பார்வை. நிடசித்த மூள்ள எவனையும் அடிமையாக்கி விடும் அழகுத் தேவதை அவள். முருகன், அடிமைகளின் சக்கரவர்த்தியானான். அவன் திருவாழ்ந்தான் பட்டம் பெற்றதைப் பாக்கியமாக எண்ணிய ஆண் உள்ளங்கள் கொக்கிர குளத்தில் எத்தனை எத்தனை !

காணுதபோது, "திருவாழ்ந்தான்," "மோகினிப் பிசாசு" என்னும் ஆத்மாக்கள் கண்டாலோ, திட்ட மறந்து நிகட்டத் நிகட்டத் தான் பார்ப்பார்கள். தலை மறைந்ததும், வாய் நிறையத் திட்டுவார்கள். தங்கத்துக்குக் கன்னத்திலே அடி விழுந்த பின்னர், சற்று ஜாக்கிரதையாக எல்லோரும் மறைவாகத் தான் சொல்லுவார்கள். பெண்கள் வாய் திறக்க அஞ்சினால், ஆண்கள் விழி இமைக்க அஞ்சினார்கள்.

ஆறு மாதங்கள், ஒரு வருஷமும் ஓடி மறைந்தது.

மோகினி, தன் பெயரை நிலை நிறுத்த அன்புக் குழவியைப் பெற்றாள். ஆனால் அத்தோடு அவள் — முருகனுடைய அந்த அன்பின் உருவம், அழகின் சிகரம், பெண்ணின் வனப்புலகமே அழிந்தது. பேறு பெற்ற ஆஸ்பத்திரி அறையிலேயே மோகினி இறந்து விட்டாள். அழுதான், விழுந்தான். அரற்றினாலும் போன உயிர், அழகுத் தேவதை வரப் போகிறதா ! அத்தனை அழகும் பிடி சாம்பராய்ப் போய் விட்டது. அவன் துக்கம் பெருகி வெள்ளமாக வடிந்து கலங்கிய தினம் வந்தது. "பெண் குழந்தையை எடுத்துக் கொண்டு போகலாம். இருபத்திரண்டு தினங்கள் ஆகிவிட்டன. இனி ஆஸ்பத்திரியில் வைத்துக் கொள்ள முடியாது" என்றார்கள். வானவீதியிலே சிறகடித்து உல்லாசப் பறவையாக வாழ்ந்தவனுக்குப் பூமியில் உட்கார யாரும் நிம்மதி தரவில்லை. அவனைப் பெற்ற தாய், உடன் பிறந்த தங்கை, அண்ணன், அத்தை, மாமன் எல்லோரும் வெறுத்தார்கள். அவனைத் தவிர அந்தக் குழந்தையை விரும்புவார் யாருமில்லையே !

உலகத்தின் நிலை தெரிய ஆரம்பித்தது. இனி தானும் அதுவுமாக ஆற்றிலே விழுந்து சாக வேண்டும். இன்பமயமான எண்ணத்தோடு இறந்து விட்டால் நலம் என்ற முடிவுக்கு வந்தான். குழந்தையை எடுத்துக் கொண்டு வந்தான். இரக்கமற்ற உலகத்தில் ஒரு ஜீவன் கூட அவன் குழந்தையை எடுக்க விரும்பவில்லை. இரு கரையும் பெருகி ஓடும் பொருனை அம்மன் ஏற்க இஷ்டம் என்பது போன்று கூவிக் கொண்டிருந்தாள். யாரும் கண்டு சொல்ல முடியாத காலை நேரத்துக் கருக்கிருட்டில், துணிப் பின்னலை எடுத்துக் கொண்டு போகும்போது, மோகனா "அத்தான் வேண்டாம் !" என்று தடுப்பதுபோல பிரமை ஏற்பட்டது. மோகனாவின் சிரிப்பொலி காதில் கேட்டது. அவன் உடல் வெலவெலத்து வியர்த்தது. "என்னால், இனி வாழ முடியாது. இக் குழந்தையோடு செத்து மடியப் போகிறேன்" என்று ஓடினான்.

எண்ணியபடி நடந்தால், மனித சக்திக்குப் பொருள் ஏது ! அங்கே விதியானது ஒரு சாமியாரின் உருவிலே ஜபம் செய்து கொண்டிருந்தது. அவன் அவரை மிதித்து விட்டான்.

"ஏனப்பா! ஆள் இருப்பது தெரியவில்லையா!"

"மோகினி, நீ ஆண் உருவம் எடுத்து வந்து விட்டாயா !" என்று திடுக்கிட்டுப் பார்த்தான். அங்கே சாமியார் மூக்கைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். ஆற்றின் ஊதைக் காற்று தாங்காது பசலை வீறிட்டது.

"என்ன தம்பி இது !" என்றார் அவர். கீழே போட்டு விட்டு ஓடினான். அவர் அதைத் தொட்டார். காலைக் கதிரவன் ஒளியை வெல்லும் பசுமையான உடல் ; எல்லாம் பூவின் அசைவுகள். "பாவி, வா இங்கே !" என்றார். ஜெயில், போலீஸ் தண்டனை எல்லாம் மனத்திற்குள் பின்னி ஓடி வந்தன. சாமியார் அருகே வந்தபோது முருகன் கதையை அறிந்தார். "தம்பி ! நீ உலகத்தோடு வாழவில்லை. உலகை மறந்து வாழ்ந்தவர்கள் கதை யெல்லாம் இப்படித்தான். இந்தக் குழந்தையைக் கொல்ல எப்படி மனசு வந்தது! உன் உறவினர் வீட்டுக்கு வா. நான் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். நீ என்னோடு வா, உனக்கு இஷ்டம் இருந்தால் !" என்று சொல்லி அவனுடைய தங்கை செண்பகத்தின் வீட்டுக்கு அவனையும் குழந்தையையும் அழைத்துப் போனார்.

"தாயே, இது என் வேண்டுகோள். குழந்தையைக் காப்பாற்று" என்று தரையில் வீழ்ந்து வணங்கினார். அவர் வேண்டுகோள், செண்பகத்தை உலுக்கி விட்டது. குழந்தை யில்லாத அவள் மறுக்காமல் வாங்கிக் கொண்டாள். மாதந்தோறும் அந்தக் குழந்தையை வளர்ப்பதற்கு உரிய பணம் தாம் அனுப்ப ஏற்பாடு செய்வதாகச் சொல்லிவிட்டு, முருகனைத் தம்முடன் அழைத்துப் போய் விட்டார் சாமியார்.

சாமியாரைப் பின் தொடர்ந்து போன முருகன் சாமியாராகவே ஆகி விட்டான் என்று பேசிக் கொண்டார்கள். ஆனந்தத்தோடு பேசுவர்கள் பலர். அவன் தம்மிடம் சொல்லாமல் கொள்ளாமல் போய் விட்டானே என்று துக்கப்பட்டார் ஒருவர். அவர்,

முன்பு

"என் உடைகள் சீக்கிரமாகக் கிழிந்துவிட்டன!"

இப்போது

"என் உடைகள் சுத்தமானவாஷ்வெல் பார் சோப்பை உபயோகிப்பதால் அதிக வெண்மையாக இருப்பதுடன் அதிக நாள் நீடித்து வருகின்றன".

நூறு சத விகிதம் சுத்த எண்ணெயை அடிப்படையாகக் கொண்ட வாஷ்வெல் பார் சோப், உடைகளில் அழுக்குகள் அடையாமல் தடுப்பதற்கு உத்தரவாதமாக இருப்பதுடன், அடிக்காமலும் கசக்காமலும் உடைகள் முற்றிலும் சுத்தமாக வெளுக்கும்படி செய்கின்றன.

எனவே, வாஷ்வெல் சோப் உங்களுடைய உடைகளை நன்றாக வெளுப்பதுடன் நீடித்த காலம் உழைக்கவும் உதவியாக இருக்கிறது.

# கேரளா

## வாஷ்வெல் பார் சோப்

சுத்தமான எண்ணெய் மூலப்பொருள்




கேரளா சோப் இன்ஸ்டிட்யூட்

கோழிக்கோடு



சென்னை சர்க்கார் கைத்தொழில் &

வியாபார இலாக்காவின் ஒரு பகுதி

தங்கத்தைப் பெற்றவர்; முருகனின் தாய் மாமன் திருவாளர் சாம்பசிவம்!

## 3

**மா**தந்தோறும் செண்பகம் பெயருக்கு மணியார்டர் வந்தபோது, "திருவாழ்ந்தான் யோகக்காரன் ஐயா, பணம் அனுப்புகிறானே!" என்றார்கள் ஊரார். பெற்ற குழந்தைக்கு அவன் பணம் அனுப்பி வந்தான். குழந்தையின் பேச்சு, வளர்ச்சி குறித்துத் தங்கை எழுதுவாள். அக் கடிதங்களில் இக் குழந்தையின் காரணமாகத் தன்னைப் பெற்றோர் ஒதுக்கி வைத்துவிட்டது குறித்தும் அவள் எழுதுவாள். ஆனாலும், "சாமியார் வளர்க்கச் சொன்னதற்கு என்றும் நான் கட்டுப்பட்டவள்" என்று குறிப்பாள். இதைப் பார்க்கும் போது முருகன் சற்றுத் துக்கம் அடைவான். ஆனால் மலைச் சாரலின் பசுங்கொடிகள், செடிகள் மானினம் எல்லாம் அவன் மனத்திலே வளரும் குழந்தையின் செயல்களை நினைவூட்டி ஆனந்தம் தந்தன.

மாதம் ஒருமுறை கிராமத்திலுள்ள தபால் ஆபீஸ் அடைந்து தனக்கு வரும் கடிதங்களைப் பெற்று வருவான். பணம் அனுப்ப அனுமதியும் தருவார் அந்தச் சாது. அவருக்கு யாத்திரீகர்கள் தரிசிக்க வந்தால் காணிக்கை கொடுக்கும் பணம் அவன் கைவசம்தான் இருந்தது. இல்லாவிட்டால் கிராமத்தில் அவர் சொல்லுக்கு மரியாதை உண்டு.

வழக்கம்போல முருகன் கடிதம் பெற வந்தான். அது கடைசி மணியார்டர். இனி பணம் தேவையில்லை யென்று சாது சொல்லி விட்டார்.

அவனுக்காகக் காத்திருந்த கடிதம், இடியைத் தந்தது. "குழந்தைக்கு உடல் நலம் போதாது. இழுப்பு மாந்தம் இருக்கிறது. இதற்கு நமது சாம்பசிவம் மாமா அவர்களின் பச்சிலை வைத்தியந்தான் சிறந்தது என்று போனேன். அவர்கள் பதில் பேசுவதற்கு முன்னதாக அவர்களுடைய புத்திரி தங்கம் ஓடி வந்து 'சனியனைக் கொண்டு போ' என்று திட்டிஅனுப்பி விட்டாள். நான் டாக்டரிடம் வைத்தியம் பார்க்கிறேன். எப்படியும் பிழைத்துக் கொள்வான். நீங்கள் வருந்த வேண்டாம்" என்று அக் கடிதத்தில் எழுதியிருந்தது. பெற்ற பாசம் சும்மா இருக்குமா!

தலைகுனிந்து வந்து நின்ற முருகனைப் பார்த்து "உன்னை இங்கே வைத்துவிட நான் எண்ணியது தவறு. உன் குழந்தையின் நிலையை எண்ணி ஏங்குவாய். நீ போ. செலவுக்கு யாரிடமாவது கேள். தருவார்கள்" என்றார் சாது.

"உத்தரவு."

"நீ, இந்த இடம் சாஸ்வதம் என்று எப்போது எண்ணுகிறாயோ, அன்றைக்கு வா" என்று ஆசி கூறி அனுப்பிவிட்டார் சாமியார்.

சடைமுடியும், காவி உடையுமாக முருகன் குழந்தையைக் காண வந்து சேர்ந்தான். அப்பொழுதுதான் சாம்பசிவமும் சங்கரம் பிள்ளையும் ஆரம்பத்தில் கண்டவாறு பேசிய வண்ணம் ஆற்றுத் தண்ணீரிலே குளித்துக் கொண்டிருந்தார்கள்.

முருகனின் உருவம், உடை கண்டு அவன் தங்கையே பயந்து போனாள். நோய்வாய்ப் பட்ட குழந்தையின் உருவம் அவன் நினைத்தது போல அத்தனை மெலிந்திருக்கவில்லை. குழந்தையின் நோய்ப்பட்ட உடலே, தொட்டதும் பச்சைப் பசுங் கொடியை நினைப்பூட்டியது. காட்டிலே மெத்து மெத்தென்று ஸ்பரிசம் தந்த பூக்கள் குழந்தையை நினைப்பூட்டின; இங்கே குழந்தை, ஆசிரமத்துப் பூக்களை நினைவு தந்தது. குழந்தையின் ஒவ்வொரு அசைவும், மான் குட்டியும், சில்வண்டும், தேனுண்ணும் வண்ணப் பூச்சிகளுமாகத் தோன்றி அவன் எண்ணத்தில் எழ எழ, ஆழ்ந்த மலைப்பக்கம் தன்னைக் காத்த சாமியார் எண்ணங்கள் நன்றியுடன் எழுந்தன.

"குழந்தைக்கு இன்று தேவலை, பிழைக்க மாட்டானோ என்று எண்ணியே எழுதினேன். கண்—திருஷ்டி நிறைய விழுந்திருக்கிறது. இன்னும் ஒரு மாதம் ஆகுமாம் நம்பிக்கை பிறக்க" என்று சொன்னாள் செண்பகம். குழந்தைக்கு நோய் விலகி விடும் என்ற நம்பிக்கை பலமாகப் பிறந்தது. தன் தங்கையிடம் கொழு கொழுவெனத் துணிப்பின்னையாகக் கொடுத்துப் போனது எவ்வளவு உறுதியான எலும்பும் கட்டிச் சதையுமாக ஆகிவிட்டது—பால் தயிராக உறைந்தது போல. இப்படி எண்ணமிட்டுக் கொண்டிருக்கும் போதுதான் கண்ணைச் செருகிக் குழந்தை மிரள மிரள விழித்தது. அவ்வளவே; முருகனின் உள்ளம் ஒடுங்கி விட்டது. கைகால் வெட்டி இழுக்கிறது; கைக்கு அடங்காத இழுப்பு; வலிப்பு. துறவியாக வந்தவன் உள்ளத்தில் துயர் குடைந்தது. ஒரு கணம் எமவாதனை, அழுகை மாலை மாலையாக வந்தது. செய்வதென்னது என்று அறியாமல் தலைமேல் கையாக இருந்தான். ஏதோ ஒரு தைலத்தை எடுத்து அவன் தங்கை குழந்தைக்குச் சூடு பிறக்கத் தேய்த்தாள். குழந்தையின் சிரிப்பு கோரமாக மாறியிருந்தது. கண் திறக்க முடியாத நிலை; குழந்தையின் பரிதாபமான பார்வை; பார்க்கச் சக்தியற்று அவனும் குழந்தைபோல் கண்களை மூடிக் கொண்டான்.




"ஏம்மா, சாம்பசிவ மாமா முடிவாக என்ன சொன்னார்கள்!" என்று கேட்டான். சாம்பசிவத்துக்குப் பச்சிலை வைத்தியம், குழந்தை வைத்தியம் இரண்டும் நன்றாகத் தெரியும்.

"அந்தக் கண்றாவியை ஏன் சொல்லுறீங்க! மேலத் தெருவிலேதான் இருக்கிறாங்க; ஒரு நாள் கொண்டு போனேன். அவங்க மகள் தங்கம் 'சனியனை எடுத்துக் கொண்டு போ' என்று சொன்னாள். இப்போ இங்கிலீஷ் வைத்தியம் பார்த்தாச்சு. பிழைச்சா தலையெழுத்து" என்று சொன்னாள் செண்பகம்.

"அப்படியா சொன்னாங்க!" என்றவுடன் துறவிக்கு நினைப்பு வந்தது. கோபத்துக்குக் காரணம் பளிச்சிட்டது. என்றோ ஒரு நாள் 'மோகினிப் பிசாசு' என்று தன் காதலியைச் சொன்ன காரணத்துக்காகத் தான் தங்கத்தைக் கன்னத்தில் அடித்தது நினைவில் எழுந்தது. நல்ல மனுஷன், அதோடு விட்டார்; இல்லாவிட்டால், தன் கதி என்ன ஆகியிருக்கும் என்ற பயம் இதயத்தின் ஒரு மூலையில் விசுவரூபம் எடுக்கலாயிற்று. போனதை எண்ண எண்ண முருகச் சாமியாருக்குப் பயம் குறைந்து சற்றுத் தைரியம் வந்தது. இந்த நிலையில், இராப் பகலாகக் கண் விழித்து மூன்று மாத காலம் குழந்தையைக் கவனித்த அவன் தங்கை, பக்கத்தில் ஆள் இருக்கும் காரணத்தால் சற்றுக் கண் அயர்ந்தாள்.



கண் மூடிச் சிந்தனையில் ஆழ்ந்திருந்த முருகன் ஏதோ சத்தம் கேட்டுக் கண்விழித்தபோது கொப்பரைத் தண்ணீரைக் கோரிக் குழந்தை குடித்துக் கொண்டிருந்தது. குளித்துக் கொண்டும் நின்றது.

"இதுதானா பிள்ளையைக் கவனிக்கும் பொறுப்பு; இப்போதுதான் இழுப்பு நின்றது. பச்சைத் தண்ணீர் பட்டால் என்ன ஆகும்!" என்று இரைந்தான். தனக்கு அவ்வாறு இரைய உரிமை உண்டா என்று குழந்தைப் பாசம் ஆராயவில்லை. தமையன் பொறுப்பற்ற முறையில் பேசி விட்டதால் செண்பகத்தின் மனத்தைக் குத்திக் குடைந்தது. மேலும், தன்னுடைய தாயார் சொல்லிய வாக்கும் அப்பொழுது நினைவில் வந்தது.

உடனே செண்பகம், "எனக்குப் புத்தி சொன்னது போதும். வளர்த்தவளுக்கு அருமை தெரியும். நீங்கள் கண் விழித்துக் கொண்டிருந்ததால் சற்றுக் கண் அயர்ந்தேன். உங்களால் ஒரு மணி கவனித்துக் கொள்ள முடியாததை மூன்று மாதங்களாக இமைக்குள் வைத்துக் காப்பாற்றியதற்குச் சரியான பரிசுதான்" என்று கூறி அழ ஆரம்பித்து விட்டாள். முருகத் துறவிக்குத் தன் தவறு, அவசர புத்தி தெரிந்தது. தெரியாமல் பேசி விட்டதற்குத் தங்கையிடம் மன்னிப்புக் கேட்டான். கேட்டாலும் என்ன! குழந்தையின் தகப்பனைக் கண்ட மாத்திரத்தில் வளர்த்தவள் உள்ளத்தே இருந்த பாசம் எல்லாம் வற்றிப் போய் விட்டனவா!

"எதற்கும், நான் சாம்பசிவம் பிள்ளைவாளைப் பார்த்து விட்டு வருகிறேன்; செண்பகம்! நான் சொன்னதை மறந்து விடு" என்று கூறிக் கிளம்பினான்.

தெருவில் கால் வைத்தபோது ஏதோ கொம்பு முளைத்த அதிசயப் பிராணியைக் கூர்ந்து கவனிப்பது போல அந்தச் சந்நியாசியின் கோலத்தைப் பலர் பார்த்தார்கள். அவனும் மோகினியும் ஆற்றுக்குப் போன கோலத்தை நினைவுள்ளவர்கள் வர்ணித்தார்கள். சாம்பசிவம் பிள்ளையின் வீடு ஆற்றை யொட்டித் தெருவின் பக்கம் உள்ளது. அவனுக்கே மோகினியின் நினைவு வாட்டிற்று. ஆற்றிலே நீந்தியது, வாழ்ந்தது ஆற்றங்கரையை யடுத்த மரத்தைப் போலப் போய்விட்டது. ஆனால் பல எண்ணங்கள் மட்டும் அந்த ஆற்று நீரின் குமிழிகளைப்போல அவன் உள்ளத்தில் மிதக்கலாயின.

துறவி முருகன், தாய் மாமன் சாம்பசிவத்தின் வீட்டை நோக்கி நடந்தான்.

## 4

"நான் வர எண்ணவில்லை, சாமியாரே! நீங்களே வந்து விட்டீர்களே!" என்று சாம்பசிவம் உண்மையைச் சொன்னார். உண்மையை நம்பும் உள்ளத்தோடு இல்லை 'திருவாழ்த்தான்'.

"என்னமோ மாமா! நீங்கள் என்னை மன்னிச்சுடுங்க. அந்தக் குழந்தை 'பச்சை மண்' உங்களுக்கு என்ன செய்தது! அதற்கு நீங்கள் வைத்தியம் செய்திருக்கக் கூடாதா!" என்று கெஞ்சுதலாகக் கேட்டான்.

"வைத்தியம் செய்து கொள்ளும் நோக்கத்தோடு வந்தீர்களா!".

"வேறே எதுக்காக நான் மலைச்சாரலிருந்து இத்தனை தூரம் வரப் போகிறேன்! பாருங்க, தான் பெத்த பிள்ளையாக இருந்தா, என் தங்கச்சி வலிப்பு வந்த பிள்ளையைப் போட்டுவிட்டுத் தூங்குவாளா! அது கொப்பரைத் தண்ணீரை மொண்டு குளிக்குமோ, குடிக்குமோ!" தன் மீது இரக்கம் தோன்றத் தங்கை மீது பெரிய பழியைப் போட்டான். வைத்தியர் சிரித்தார். சிரிப்புக்கு ஏதோ அர்த்தம் இருக்க வேண்டும். அது என்ன!

"என்ன சிரிக்கிறீங்க! 'அகப்பட்டுக் கொண்டாயா பயலே, உனக்கு நல்லா வேண்டும்' என்று சிரிக்கிறீங்களா! என்னை அநாதையாக ஆக்கிக் கொண்டேன்; என் தாய் தந்தையரின் ஆதரவை இழந்தேன். என் குழந்தையை

அனாதை ஆக்கி வருகிறேன். அதற்கு யார் ஆதரவு! நீங்கள் பெரிய மனசு செய்யுங்கள்'' என்று காலைப் பிடித்துக் கொண்டான்.

"வே, சாமியாரே! நான் சிரித்தது வேறு காரணம். உம்முடைய தங்கையைப் போலக் குழந்தையை வளர்த்தவர்களை, இந்தக் கொக்கிர குணத்தில் நான் பார்த்ததில்லை. எத்தனை அக்கறை... ஆனால், அவளுக்குக் குழந்தை பிறக்கப் போகும் சந்தோஷத்தில் இனி கவனிப்பாளா!''

அப்படியா! அதனால்தானா இத்தனை வெறுப்பு வந்து விட்டது! ஒரு நிமிஷம் இனி அவள் என் குழந்தையிடம் பாசமாக இருக்க மாட்டாளா!''

"உம்முடைய தாய் தகப்பன் 'இருக்கவும் விடமாட்டோம்' என்று சொல்லுவது உமக்குத் தெரியாதா! உம்முடைய குழந்தை அவள் வீட்டில் இருக்கும் வரை, பிள்ளைத்தாச்சியான செண்பகத்தைப் பார்க்க முடியாது என்று கடிதம் எழுதியதை நீர் எங்கே கண்டீர்!''

"இது உண்மையா! என் அப்பாவா இதை எழுதியது!''

"நீரும், உம்முடைய மோகினியும் வாழ்ந்தது எவ்வளவு உண்மையோ அவ்வளவு நான் சொல்வதும் உண்மை. வேண்டுமானாலும் தங்கையைக் கேட்டுப் பாரும். உம்மால், உம்முடைய தங்கைக்கும் அவள் வயிற்றில் பிறக்கப் போகும் குழந்தைக்கும் தேவையான உதவி கிடைக்காமல் கஷ்டப்படுகிறார்கள்.''

"என்னால் என் தங்கையும் தாயன்பை இழக்க வேண்டாம். எனக்காக, நீங்கள் வைத்தியம் செய்ய வேண்டும். குழந்தைக்காகும் செலவை நான் தந்து விடுகிறேன்.''

சாம்பசிவம் சிரித்தார். அவருடைய வெற்றிலைக் காவியேறிய பற்கள் கோரமாக இருந்தன.

"நான் சாமியார் இல்லை. இனி உழைக்கப் போகிறேன். தயவுசெய்து சிரிக்காதீர்கள். என்னால், என் குழந்தையால் யாருக்கும் கஷ்டம் வேண்டாம். அதைக் காப்பாற்றுவது உங்கள் பொறுப்பு'' என்று கண்ணீர் சோரச் சொன்னபோது சாம்பசிவத்தின் உடல் புல்லரித்தது. இத்தனை பாசம் எங்கேயிருந்து இந்தத் துறவிக்கு வந்தது என்று அதிசயித்தார்.

"இரு இரு'' என்றவர் மகளைக் கூப்பிட்டார். பிறை நிலவின் நெற்றியும் கரிய கூந்தலின் கற்றையும் ஜன்னலில் தெரிந்தன. "குழந்தையை வாங்கலாமா!'' என்று பக்தன் தெய்வத்தைக் கேட்கும் பரிவோடு தந்தை அருமை மகளிடம் கேட்டார்.

"உம் வைத்தியம் செய்யுங்கள்.''

"உத்தரவு கிடைத்தது. சாமியாரே! நீர் செய்த புண்ணியம்.''

துறவிக்கு மகிழ்ச்சி முகம் நிறைய மலர்ந்தது.

"மாதம் முப்பது ரூபாய் பீஸ் தருவதாக இருந்தால் குழந்தையை நானே வைத்து வைத்தியம் செய்கிறேன். ஆனால் பிழைப்பது என் கையில் இல்லை. குழந்தையின் ஆயுள் கெட்டியாக இருக்க வேண்டும்'' என்றார்.

"அப்படியே தருவேன்'' என்று விருப்புச் சொன்னான்.

"அட்வான்ஸ பணத்தோடு குழந்தையைக் கொண்டு வாருங்கள்'' என்று சொன்னார் சாம்பசிவம் பிள்ளை.

"நானேயே வருகிறேன்'' என்று புறப்பட்டான். துறவியுடையில் அதே தெருக்கள் வழியாகப் போனபோது சன்னல் வழியாகப் பார்த்துச் சிரித்த கண்கள் ஆயிரமாயிரம்.

தங்கையின் வீடு நோக்கி வந்த போது, ஆற்றங்கரையின் செவ்வானக் காட்சியில், கலகலக்கும் நீரோசையைக் கேட்டு ஆற்றிலே பித்தனாகி நின்றார் துறவி. ஆனால் வீட்டை யடைந்த போது......

## 5

தங்கை செண்பகம் யாரிடம் பேசுகிறாள்!

தன் தகப்பனார் குரல் வீட்டுக்குள் கேட்டதும், இல்லாத பயமெல்லாம் திரண்டு வந்தது. அவர் பேச்சை மீறியதால் இன்று காவியுடை கிடைத்ததை விடத் தன் தங்கையை அவர் திட்டிக் கொண்டிருந்ததே பெரிய ஈட்டியாகப் பாய்ந்தது.

"அந்தப் பயல் வந்திருப்பது உண்மைதானா!''

"ஆமாம் அப்பா. அண்ணாச்சி வந்திருக்கிறாங்க. குழந்தைக்கு வைத்தியம் செய்வதற்கு யாரையோ பார்க்கப் போயிருக்கிறார்.''

"பணத்திற்கு என்ன செய்கிறார் சாமியார்!''

சாமியார். 'தந்தை மகனுக்குத் தரும் பட்டம்.'

"காலணாக் கூடக் கொண்டு வரவில்லை; நீங்களும் என்னை வந்து அழைத்துப் போக முடியாது என்று சொல்லி விட்டீர்கள். நேற்று எனக்குத் தூக்கம் வந்து தூங்கி விட்டேன். அது பச்சைத் தண்ணீர் மொண்டு குடித்து விட்டது. அண்ணாச்சிக்கு வந்த கோபம் சொல்லி முடியாது. என்னை அழ அழத் திட்டி விட்டார்கள்.''

"உனக்கு வேண்டியதுதான் அம்மா. நன்றாக வேண்டும். எங்களைப் பொல்லாதவர்களாக்கி நீ நல்லவளாகப் போகப் பார்த்தாய். அதற்குப் பரிசு தந்து விட்டான். சரி, நான் இப்போது வந்திருப்பது எதற்கு! உன் புருஷனிடம் கேட்டேன். 'அழைத்துப் போங்கள்' என்று சொல்லி விட்டார்; குழந்தைக்காரன் வந்து விட்டான். அவனிடம் குழந்தையை ஒப்படைத்து விட்டு, நீ வந்து விடலாம். உன் அம்மா இனி இங்கு வர மாட்டாள்.''

"ஐயோ! அப்பா அதை எப்படித் தனியே விட்டுவிட்டு நான் வருகிறது!''

"இமயமலைச் சாமியார் எதற்காக வந்திருக்கிறார்! அவனிடம் கொடு!''

முருகனால் மேலே கேட்டுக் கொண்டிருக்க முடியவில்லை.

"ஆமாம். நான் வாங்கிக் கொள்கிறேன். நீ பிள்ளைத்தாச்சி. எனக்காக உனக்குப் பிறக்கப் போகும் குழந்தையிடம் உன்னுடைய தாயன்பை நீ இழக்க வேண்டாம்'' என்று சொல்லி எவ்வித பதிலையும் பேசாமல் குழந்தையை எடுத்துக் கொண்டு வந்தபோது, வளர்த்த பாசம் தாங்காமல் வழியை மறித்தாள் செண்பகம்.

இவர்களைப் பெற்ற மகான் கற்சிலையைப் போல ஏதும் பேசாது இருந்தார்!

"குழந்தைக்கு வைத்தியம் செய்ய மாமா ஒப்புக் கொண்டார்; குழந்தை இனிமேல் அங்கே வளரும். இந்தப் பசலைக்காக உன் வாழ்வும் உன் வயிற்றுப் பிள்ளையும் பாழாக

வேண்டாம்" என்று தங்கையின் கரத்தைத் தள்ளிவிட்டுத் தெருவில் நடக்க ஆரம்பித்த போது, "அய்யா, பூச்சாண்டி!" என்று தகப்பனுடைய கோலத்தையும் உருவத்தையும் கண்டு பிஞ்சுக் குரலில் அலறிற்று அந்தக் குழந்தை. அதன் அழுகையையும் கூச்சலையும் கேட்டு, பலரும் தெருவுக்கு வந்து பார்த்துச் சிரிப்பாய்ச் சிரித்தார்கள்.

"என்னைப் பார்த்து அன்று பொறாமைப் பட்டவர்கள் இன்று சிரிக்கிறார்கள். நன்றாகச் சிரியுங்கள்; உங்கள் சிரிப்பும் பரிகாசமும் எனக்கு ஒன்றுபோலத்தான்" என்று உரத்துக் கத்திக்கொண்டு ஓடினான் துறவி.

குழந்தை இன்னும் அதிகமாகப் "பூச்சாண்டி" என்று அலறி ஆர்ப்பாட்டம் செய்து கொண்டிருந்தது.

"திருடன்! திருடன்!" என்று சிறு பயல்கள் கத்த ஆரம்பித்து விட்டார்கள். முருகனுக்கு இத்தனை வினைகள் தனக்குத் தொடரும் என்று தெரிந்திருந்தால் குகையை விட்டு வந்தே இருக்க மாட்டான்.

யாரோ இரண்டொரு மலைப் பிஞ்சுகளை வீசினார்கள். அது குழந்தையின் மேலே கூட லேசாகப்பட்டு, அது கத்திக் காலையும் கையையும் உதறிற்று. பரிதாபகரமாகப் பெற்ற குழந்தையை எடுத்துக் கொண்டு ஓடோடி, சாம்பசிவம் வீட்டுக்குள் தஞ்சம் புகுந்தபோது தான் நிம்மதி பிறந்தது.

மற்ற அவமானங்களைவிட, சாம்பசிவத்தின் மகள் தங்கம் ஓடிவந்து, "ஓகோ, மோகினியின் புருஷனா! ஏது இந்தக் கோலம்! இது என்ன ஓட்டம்!" என்று கேட்ட போது, முருகனுக்கு வானமே தன் தலையில் இடிந்து விழுவதாகத் தோன்றியது, மோகினி, மோகினி, மோகினி......சொல்லுக்குச் சொல் எத்தனை விஷப்பிடிகள்.

"கடந்த முனிவரும் கடப்பரோ மக்கள் மேற் காதல்" என்று சொல்லித் தங்கம் சிரித்தாள். அது எவ்வளவு பெரிய நெருப்புப்பொறி.

ஆனால், குழந்தை தன்னைவிட்டுத் திமிறி, அவன் பக்கமாகப் பாய்ந்தபோது, அவன் தடுக்க முடியாதபடி விட்டு விட்டான். தன்னை வளர்த்த அத்தையின் சாயலை மனசிற் கொண்டு, "அத்தே இந்தப் பூச்சாண்டியை அடித்து விரட்டு" என்று தங்கத்தைச் செண்பகம் என்று எண்ணிக்கொண்டு அந்தக் குழந்தை சொன்னபோது துறவி தன் நெஞ்சம் பலமாக உடைவதை உணர்ந்தான்.

"இந்தப் பூச்சாண்டிதான் உங்கப்பா, கண்ணு!" என்று கூறித் தங்கம் நெஞ்சோடு ஆதரவாகக் குழந்தையை அணைத்துக் கொண்டாள். அதன் கன்னத்தில் குழி விழத் தங்கம் முத்தம் கொடுத்தபோது, தான் என்றோ அறைந்து கன்றிப் போன அவன் கன்னத்தின் நினைவுச் சுவடு தெரிந்தது.

"விதி இப்படி விளையாடும், என்று நான் எண்ணவில்லை" என்று தனக்குள் சொல்லிக் கொண்ட போது சாம்பசிவம் சிரித்தார்.

"நான் சிரித்தபோது என்னோடு சிரிக்க வில்லை, எல்லோரும் பரிகாசம் செய்தீர்கள். நான் அழுகிறபோது என்னைப் பார்த்து இந்த உலகமே சிரிக்கிறது" என்றான் துறவி.

"காரணமாகத்தான் சிரித்தேன். இந்தக் குழந்தைக்கு மூன்று மாசத்திற்கு முன்னேயே குணமாகி யிருக்க வேண்டும். அன்று மறுத்து விட்ட என் மகள், இன்று மறுக்காமல் இருக்கிறாள். அன்றே சம்மதம் கொடுத்திருந்தால் இதற்குள் குணமாகி யிருக்கும்" என்று தாம் சிரித்த காரணத்தை விளக்கினார் சாம்பசிவம்.

"இனி உங்களுக்குச் சாப்பாடு எங்கே! அடடா, பணத்தை மறந்து விட்டேனே! முப்பது ரூபாய்!" என்று சாம்பசிவம் கேட்டபோது, கையைப் பிசைந்தார் துறவி.

"பணம் ஒரு வாரத்துக்குள் தந்து விடுகிறேன். நீங்கள் வைத்தியத்தை ஆரம்பிக்கலாம்" என்று கூறி விட்டுப் புறப்பட்ட போது, "அத்தை பூச்சாண்டி போயி..." என்று குழந்தை சிரித்தது. அதனோடு வெள்ளி மணியின் கிண் கிணி நாதம் போல ஒரு குரல் கேட்டது. நினைவிலே வைத்துக் கொள்ளக் கூடிய சிரிப்பொலி அது.

"பணம் வந்து விடுமல்லவா! நான் நாளை முதல் வைத்தியம் செய்கிறேன்."



"அவசியம் வந்து விடும்."

துறவிக்குப் பணத்தைப் பற்றிச் சொன்னதைப் போல அதைத் தேடுவது அத்தனை சுலபமாகப் படவில்லை. ஞானமணியம்மாள் சத்திரத்தில் வந்து படுத்துக் கொண்டு யோசித்தார் துறவி.

## 6

பாசலக்குப் பச்சிலை வைத்தியம் செய்ததோடு சாம்பசிவம் நின்றுரா என்பது அன்று அவரை நடுத் தெருவில் சங்கரம் பிள்ளை மறித்துக் கொண்டு, "ஐயா, சாம்பசிவம்! கடையிலே பெரிய வேலைசெய்து விட்டீர்களே. செட்டியார் கடைக் கணக்கு வேலைக்கு நீங்கள் போட்டு விடலாமா!" என்று கேட்டபோது வெளியாயிற்று.

இந்தக் கேள்விக்குச் சாம்பசிவம், "தெரிந்து தானே கேட்கிறீங்க; நானுக வேறு காரணம் சொல்லணுமாக்கும்!" என்றார்.

"சாமியாருக்கு வந்த யோகத்தைச் சொல்லுங்க. ஆனாலும் காரியத்தோடேதானே இந்த நாடகம் ஆடுறீங்க! பலேவனய்யா நீங்க..."

"உமக்குக் கல்யாணமாகாத ஒரு வயசுப் பெண் வீட்டிலே இருந்தா அந்தக் கவலை தெரியும். ஏதோ கடவுள் இவ்வளவாவது வழி விட்டாரே. அதைச் சொல்லுங்க. அந்தச் சின்னக் குழந்தையும் நாலு நாளிலே வலிப்பு இழுப்பு இல்லாதபடி நல்லா இருக்குது."

"எல்லாம் சரி. 'மருமகன்' என்று உங்கள் மனசிலே தீர்மானம் செய்த பிறகு, அவரைச் சாமியார் கோலத்திலே ஞானம்மாள் சத்திரத்திலே, புழுதியிலே படுக்க விடலாமா! பாவம், நேற்று பஸ் ஸ்டாண்டிலே யாரிடமோ தன் பசிக்குக் காசு கேட்டதை நான் பார்த்தேன். நிஜமா பார்த்தேன்."

செய்தி, எலும்புக் குருத்து வரை சுரீர் என்று குத்திற்று.

"இருக்கட்டும். என்ன திமிரோட ஒரு பெண்ணைத் தொட்டு அடிச்சான். அந்தப் பாவம் தீர, வழி பிறக்கும் வரை புழுதியும் வேணும். நானும் பயமுறுத்தி வைச்சிருக்கேன், மாசம் முப்பது ரூபாய் வீதம் ஆறு மாசத்துக்கு மருந்துச் செலவாகத்தரவேணும் என்று. பையன் முழி முழியின்னு முழிக்கிறான்."

இவ்வாறு கூறி வெற்றிச் சிரிப்பு சிரித்தார் பச்சிலை சாம்பசிவம்.

"விராலை வலைக்குள் பிடித்து விட்டீர்கள்; இனி சுலபமாக வெளியே எடுத்து நீங்கள் சொல்லுகிறபடி தங்கக் கம்பியாகத் தட்டி நீட்டி உங்கள் மகள் கழுத்திலே கட்டி வைக்க வேண்டியதுதான்" என்று கூறிச் சிரித்தார் சங்கரம் பிள்ளை.

சாம்பசிவம் தமது பெருமையை எண்ணிக் கொண்டு ஜோராக நடை போட்டு வீடு நோக்கி வந்து கொண்டிருக்கிறார்.

ஆனால்...!

"அத்தே, அந்தப் பூச்சாண்டி எங்கே அத்தை!" என்று குழந்தை கேட்டது.

"என்ன சொன்னே! உம், சொல்லு" என்று விளையாட்டாகப் பயமுறுத்தினுள் தங்கம்.

"இல்லே! 'அம்மா'ன்னு சொல்லுவேன். அம்மா அந்தப் பூச்சாண்டியை எங்கே அத்தே! இல்லே. நீ அம்மா!" என்று சொன்னதைக் காது குளிரக் கேட்டாள் தங்கம். இதே சொற்கள் அப்போது துறவி காதிலும் விழுந்தன. காய்ந்து கருகிப் போன உடம்பிலே இந்தச் சொற்கள் எத்தனையோ இன்ப ஓட்டங்களை ரத்த நாளங்களிலே தளிர்க்க விட்டன. கல்லாகிப் போன மனசில் கனிவு பிறந்தது. காய்ந்த உள்ளத்தில் பகைமையின் வேர் இறங்கிற்று. அவன் எதிர்பாராத தேவாமிர்தமான சொற்கள் அவை. தங்கம் 'அம்மா'!

வெளிப் பக்கம் தான் வந்திருப்பதை இருமிக் காட்டினுன் துறவி.

"அதோ பூச்சாண்டி, அம்மா!" என்றது குழந்தை.

வாரி அதை எடுத்துக் கொண்டு, வெளிப் பக்கம் பார்த்தாள். புன்முறுவல் பூக்கும் துறவிக் கோலம். அவள் கண்களிலே கனவல்ல, கானல் பிறந்தது. தான் எண்ணிய எண்ணம் எத்தனை தவறு என்று திடுக்கிட்டாள் முருகன்.

"என்ன பார்க்கிறீர்கள்!" என்றுகேட்டாள்.

"இல்லே..." என்று இழுத்தான்.

"நானே சொல்லுகிறேன். என்னை 'அம்மா' என்று சொன்னதும் உங்களுக்கு நினைப்பு...... கிளுகிளுப்பு நினைப்பு—அதுதானே!" என்று எரிப்பது போலப் பார்த்தாள்.

"இல்லே. இதோ பணம் இருக்கிறது. ஐம்பது ரூபாய்!"

"இருக்கட்டும். நில்லுங்கள்" என்று கூறியவள் அவசரமாக மாடிக்குப் போனுள். ஏதோ ஒரு கட்டுக் கடிதங்களை எடுத்து வந்து அவன் முன்னுல் 'தொப்'பென்று போட்டாள்.

"இது என்ன!"

"பிரித்துப் பாருங்கள், உங்கள் பாவம் தெரியும்."

"நான் என்ன பாவம் செய்தேன்!"

"பாருங்கள்" என்று தங்கம் உருட்டி விழித்தது, புலியின் சீற்றத்தை நினைவில் கொண்டு வந்தது. அவன் நடுங்கும் கரத்தோடு பிரித்தான். ஆமாம்! அவன் பாவத்தையே பலரும் எழுதியிருந்தார்கள். அத்தனையும் தங்கத்தைக் காண வந்த மாப்பிள்ளை வீட்டார் எழுதிய கடிதங்கள். அதில் ஒரே பல்லவி.

"யாரோ ஒரு பயல் கை நீட்டி அடித்தானமே இந்தப் பெண்ணை. அது உண்மையாக இருந்தால் பெண் பிடிக்கவில்லை."

"பொல்லாத பெண் வேண்டாம்."

"வாயாடிப் பெண் வேண்டாம்."

"இந்தப் பெண்ணை என் தலையில் கட்டாதீர்கள், புண்ணியவானே."

"இவளும் ஒரு பெண்தானு! சை!" இன்னும் மேலே, மேலே என்னவோ வரிகள்...படிக்கப் படிக்கத் தலை பம்பரமாகச் சுழன்றது. தன்னை மறந்தான். தான் செய்த தவறு எத்தனை மகத்தானது என்ற சிந்தனை வாட்டிப் பிழிந்தது.

"நான் இதற்குப் பிராயச் சித்தமாக என்ன செய்யவேண்டும்!" என்று கெஞ்சிக் கேட்டான். கண்களில், பனித்திரை மறைக்கக் கேட்டான். குழந்தை அந்த வேளையில் பூச்சாண்டியின் கண்ணீரை விளையாட்டாகக் கையில் ஏந்திற்று. துறவியிடம் குழந்தைக்கு அதற்குள் பயம் கூடப் போய் விட்டது.

அவள் பேச வாயெடுத்தாள். யாரோ வரும் காலடியோசை கேட்டபோது அங்கே கிடந்த காகிதங்களை வாரிச் சுருட்டினான். திரும்பிப் பார்க்காமல் ஓடிப் போனான். "அம்மா, தங்கம்" என்று கூப்பிட்டுக் கொண்டு சாம்ப சிவம் உள்ளே வந்தார்.

"தாத்தா" என்று மழலையில் குழறிற்று குழந்தை.

"நீயாவது 'தாத்தா' என்று சொல்ல இருக் கிறாயே!" என்ற உத்வேகம், மனசில் குழம்பிக் கிடந்த ஆசை, கனவு எல்லாம் ஒருங்கே சேர்ந்து, "என்ன மாப்பிள்ளை, ஏன் நிற்கி றீர்கள்! உட்காருங்கள்!" என்று சொல்லி விட்டார் சாம்பசிவம்.

முருகனுக்கு என்ன சொல்வதென்று புரிய வில்லை. நரகமா, சொர்க்கமா வென்று சந்தே கம் கொள்ளும் பரிதாபமான நிலையில் தவித் தான். கண்ணீரைத் துடைத்துக் கொண்டு, "உங்களுக்குப் பணம் ஐம்பது ரூபாய்" என்ப தாக ஏதோ ஆரம்பித்த சமயம், சாம்பசிவம் சொன்னார்:—

"பணம் கிடக்கட்டும். பாருங்கள், வருகிற வழியிலே ஒரு கண்ணராவியை. யாரோ ஒரு காலிப்பயல், மணிபர்சை அடித்துக் கொண்டு ஓடிவிட்டானாம். பறி கொடுத்தவன், பஜாரில் அலறுகிறான். அதுவும் குழந்தைக்கு இன் செக்ஷன் வாங்க வந்தானாம், இதைக் காதாரக் கேட்டுக் கொண்டு வருகிறேன். பர்சில் ஐம்பது ரூபாய் இருந்ததாம். அது போகட் டும். நீங்கள் எனக்கு ஒரு காரியம் செய்ய வேண்டுமே!......" என்றார்.

"என்ன செய்யச் சொல்லுகிறீர்களோ!"

"உங்கள் குழந்தைக்காகச் சொல்லுகிறேன். உங்களுக்காகச் செட்டியார் கடையில் கணக்கு வேலை ஒன்று வாங்கி வைத்திருக்கிறேன். கை நிறையச் சம்பளம். இந்த வேஷத்தைக் களைந்து விட்டு, இரண்டு தினத்தில் நீங்கள் வேலைக்குப் போக வேண்டும்."

"யோசிக்கிறேன்."

"இனி யோசிக்க என்ன இருக்கிறது! ஆண்டியைப் போல ஞானம்மாள் சத்திரத்தில் தங்க வேண்டாம். புழுதியில் புரண்டது போதும். கை நீட்டிப் பிச்சை ஏற்க வேண் டாம். இந்தப் பணத்தை நீங்களே எடுத்துக் கொண்டு, துணிமணி வாங்குங்கள். காஷா யத்தை உடனே மாற்றி விடுங்கள், உம்... போய் வாருங்கள்."

அந்த வார்த்தை முழுதும் முடியவில்லை. அவர் மகள் தங்கம் வந்தவள், "'போகலாம்' என்று சொல்லுங்கள். அவருக்கு இனி இங்கே என்ன வேலையப்பா!" என்று கடுமையாகச் சொன்னாள்.

"என்னம்மா, ஊரிலே என் செய்கையைப் புரிந்து கொண்டு விட்டார்கள். நீ இன்னும் புரிந்து கொள்ளவில்லையே. அதுவும் இவ்வளவு வயசு வந்த பெண்..."

<u>கல்கி மொழி</u>

நமது செந்தமிழ் நாட்டில் இரண்டு அற்புதங்கள் உண்டு. அவை உலகில் வேறு எங்கும் காண முடியாத அற்புதங்கள். ஒன்று மாமல்லபுரத்து அழியாப் பாறைச் சிற்பங்கள். இன்னொன்று பரத நாட்டியக் கலை.

"புரிந்து கொண்டுதான் சொல்லுகிறேன்." துறவியாகக் குனிந்து நின்றான் முருகன்.

"முன்பு நீ செய்த பாவம் நினைவில் இருக் கிறதா! இவளை மணக்க 'முடியாது' 'முடியாது' என்று எத்தனை பேர்கள் கடிதம் என்னென்ன மாதிரி எழுதி யிருக்கிறார்கள் என்று உனக் குக் காட்டத்தான் நினைத்தேன். இப்போதே அதைக் கொண்டு வருகிறேன்" என்று கூறி விட்டு மாடிக்குப் போக முயன்றார் சாம்பசிவம்.

அப்போது மகள் சொன்னாள்: "அப்பா அந்தக் கடிதங்களை அவரிடம் சற்று முன் நானே காட்டினேன். அவர் படித்தார்."

"அப்படியா! பழம் நழுவிப் பாலில் விழுந்த மாதிரி" என்று குறிப்பாகச் சிரித்தார்.

"இதோ, பாருங்கள்! தங்களைத் 'தாத்தா' என்று அழைக்க ஒரு குழந்தை வேண்டும். அப்பா, இது தானே தங்கள் எண்ணம்!"

புரியாமல் மகளின் முகத்தைப் பார்த்தார். குழந்தை 'அத்' என்று ஆரம்பித்து 'அம்மா' என்று தங்கத்தைக் கட்டிக் கொண்டது.

"நீங்கள் இனிமேல் கவலைப்பட வேண்டாம், அப்பா! எனக்கு 'அம்மா' என்று கூப்பிட ஒரு பிள்ளையைக் கொண்டு வந்து விட்டீர்கள். ஐயா முருகன் அவர்களே, முனிவரே. இக் குழந்தையைப் பற்றித் தாங்கள் கவலையில்லா மல் திரும்பிப் போவீர்களானால், நீங்கள் கொடுத்த அடியை நான் மறந்து என் ஆயுளுக் கும் கவலையின்றி வாழ்வேன்! தயவு செய்து போய் விடுங்கள். இது என் குழந்தை. உங்கள் குழந்தையை மறந்து விடுங்கள். இதுவே நீங்கள் தரும் பிராயச்சித்தம். நீங்கள் செய்த பாவத்திற்குக் கூலி தந்தீர்கள்!"

மழை பெய்து வெறித்த மாதிரி இருந்தது, தங்கம் பேசியது.

"நான் பாவி" என்றான் முருகன்.

தங்கம், "இதோ பூச்சாண்டி....பூச்சாண் டின்னு சொல்லு" என்றாள். குழந்தை கொஞ்சும் மழலையில் 'பூச்சா' என்று சொல்லி அழகு காட்டியது.

குழந்தையின் கன்னத்தில் முத்தமிட்டாள். குழந்தை செவ்விதழ் விரியச் சிரித்தது.

அவன் நகர்ந்தான்.

பாசமுள்ள முருகன் நகரவில்லை; பற்றற்ற, பந்தமற்ற துறவி நகர்ந்தான். சாஸ்வதமான மலைச் சாரலை நோக்கி நகர்ந்தான். இனிமேல் அவன் உண்மையிலேயே துறவி!

# * கல்கி பேசுகிறார்

……தஞ்சை ஜில்லாவில் மணல் மேடு என்ற கிராமத்தில் 1900-ம் வருஷத்தில் நான் பிறந்தேன். ஹிந்து குடும்பத்திலே பிராமண ஜாதியிலே வடம வகுப்பிலே பிறந்தேன். பள்ளிப் படிப்பு திருச்சியிலே.

பத்திரிகை உலகிலே புகுந்து சேவை செய்ய வேண்டுமென்ற ஆசை நீண்ட நாளாக உண்டு. இப்போது உணவு மந்திரியாக இருக்கும் (டாக்டர் டி. எஸ். எஸ். ராஜன் சென்னை மந்திரி சபையில் உணவு மந்திரியாக இருந்த போது எழுதப்பட்டது இது) டாக்டர் ராஜன் எனக்கு ரொம்ப காலமாகவே 'அறிவு' மந்திரி. என் கை நாடியைப் பிடித்துப் பார்த்த டாக்டர் "நான் புத்திசாலி" என்று கண்டு பிடித்து என்னைச் சென்னைக்கு மூட்டை கட்டி அனுப்பி வைத்தார். திரு வி. கல்யாணசுந்தர முதலியார் அவர்களுக்குச் சிபார்சுக் கடிதம் அனுப்பினார். 'நவசக்தி'யில் சேர்ந்தேன். பிறகு "தும்பி"யாக இருந்து "தமிழ்த் தேனீ"யாக மாறி ரீங்காரம் செய்து கடைசியில் "கல்கி"யானேன்.

எனக்கு கர்நாடகம், லாங்கூலன், அகஸ்தியன், ரா. கி., எமன், விவசாயி, பெற்றோன், என்ற புனைபெயர்கள் உண்டு.

எனக்கும் "ராஜாஜி"க்கும் அறிமுகமான சம்பவம் ருசிகரமானதுதான். நான் திருச்சி தேசியக் கல்லூரிப் படிப்பிற்கு முழுக்குப் போட்டு விட்டுத் தேச சேவைக்குப் புறப்பட்ட போது, நான் எழுதிய துண்டுப் பிரசுரம் ஒன்றைப் படித்துப் பார்த்து விட்டு ஸ்ரீ ஸி. ஆர். ரொம்பவும் பாராட்டினார். பின் திருச்சி காங்கிரஸ் ஆபீஸில் (மாதம் ரூ. 30-ல்) எனக்குக் குமாஸ்தா உத்தியோகம் கிடைத்தது. ஆனால் எனக்கு அந்த முப்பது ரூபாய் சம்பளம் அதிகம் என்று சொல்லி, "உனக்கு ரூ. 25 போதாதா! நீ ஒண்டிக் கட்டைதானே!" என்று என்னோடு ஸ்ரீ ராஜாஜி அவர்கள் சண்டைக்கு வந்தார்கள். அப்படிப்பட்ட சண்டைக்காரரோடுதான் ஆச்சரியகரமாகப் பழகினேன். பழகப் பழக வெறுப்பு விருப்பாக மாறி அவரது மேதாவிலாசம் புரிந்தது. இன்றும் அவரிடமிருந்து வசவு எனக்குக் கிடைக்குமே தவிர வாழ்த்து என்பது கிடையவே கிடையாது.

நான் எழுதிய கதைகளுள் எது எனக்குப் பிடித்தது? என்று பலர் கேட்கிறார்கள். இந்தக் கேள்வி மிகவும் கஷ்டமானதுதான். எனக்குப் பிடித்தது சில சமயங்களில் வாசகர்களுக்குப் பிடிக்காமல் இருக்கலாம். வாசகர்களுக்குப் பிடிக்கும் என்று நினைத்தது சில சமயங்களில் அவர்களுக்குப் பிடிக்காமலிருக்கலாம். ஆனால் ஒரு எழுத்தாளன் தன்னை மகா மேதாவியாக நினைத்துக் கொண்டு சுய புராணக் குப்பைகளைக் கிளறிப் பக்கம் பக்கமாக எழுதுவதைவிடத் தலைவலி வேறு இருக்க முடியாது.

பத்திரிகையின் அரசியல் கொள்கை, பொதுவாகப் பொதுஜனங்களுக்குப் பிடிக்கும் அரசியல்தான் பத்திரிகையின் அரசியலுமாகும். ஆனால், நாம் சொல்லும் விஷயத்தைப் புரியும்படி சொல்லுவதில்தான் நமது சாமர்த்தியம் அடங்கியிருக்கிறது. தினப் பத்திரிகைகளில் வரும் விஷயங்களைச் சுருக்கமாகக் கதை போல எடுத்து விளக்கி நமது அபிப்பிராயத்தைத் தெளிவாகச் சொல்லிவிட வேண்டும். அதில்தான் பத்திரிகையின் முன்னேற்றம் அடங்கி இருக்கிறது.

ராஜாஜியை எனக்கு ரொம்பப் பிடிக்கிறது. அவரது அரசியல் தீர்க்கதரிசனம் அதைவிடப் பிடிக்கிறது.

இலக்கியத் தலைவர் டி. கே. சி. என்னைப் பார்க்க அடிக்கடி வருவார். அவருடன் அளவளாவிப் பேசுவதில் தனி இன்பம் இருப்பதாக நினைக்கிறேன். அவரது நட்புரிமையைப் பெருமையாகக் கருதுகிறேன்.

நான் இதுவரையில் பத்துப் புத்தகங்கள் எழுதி இருக்கிறேன். ஏட்டிக்குப் போட்டி, சாரதையின் தந்திரம், கணையாழியின் கனவு, கள்வனின் காதலி, தியாக பூமி, மகுடபதி, பாரதி பிறந்தார், சங்கீத யோகம், பார்த்திபன் கனவு, சிவகாமியின் சபதம் முதலியவைகளே அவை.

எழுத்தாளர் உலகில் நான் யாரையும் விரோதித்துக் கொள்வது கிடையாது. என்னை யாராவது விரோதி என்று எண்ணிக் கொண்டு அவஸ்தைப்பட்டால் அதற்கு நான் என்ன செய்வது!

தமிழ் சினிமாவைப் பற்றி என். அபிப்பிராயம், இன்னமும் அது தமிழ் சினிமாவாக இருக்கிறதே என்பதுதான்.

என்னுடைய பொழுது போக்கு (ஹாபி): மற்ற சகோதரப் பத்திரிகாசிரியர்கள், எழுத்தாளர்களுடன் பேசுவது, எழுதுவது.

எனக்கு ரொம்பப் பிடித்தமான நண்பர் என்னையும், என் எழுத்தையும் பார்த்துப் பல்லை நறநற வென்று கடிப்பவர்தான்.

என்னுடைய ஆசை தாம்பரத்துக்குப் பக்கத்திலுள்ள முடிச்சூர் என்னும் கிராமத்துக்கு விர்ரென்று காரில் பறந்துபோய்ச் சற்று நேரம் நிம்மதியாக இருந்து விட்டு வருவதுதான்.

'விமோசனம்' என்னும் பெயரால் ஒரு தினசரிப் பத்திரிகை நடத்த எண்ணியிருந்தேன். ஆனால் அந்த நினைவிலிருந்து வெற்றிகரமாக வாபஸாகி விட்டேன். அமெரிக்காவிலிருக்கும் ரோடரி மிஷின்கள் அங்கேயே சௌக்கியமாக வாழட்டும் என்பதேயாகும்.

எனக்குப் பிடிக்காத நேரம் செவ்வாய்க் கிழமை இரவுதான். ஏன் என்று கேட்கிறீர்களா! அன்றுதான் "கல்கி"யின் தலையங்கம் எழுதப்பட்டு இரவு முழுதும் கண் விழிக்க வேண்டியிருக்கிறது!

---

* 1948-ல் 'திரை உலகம்' பத்திரிகைக்குக் கல்கி அவர்கள் தம்மைப்பற்றி அனுப்பிய குறிப்பு.



# பொன்னி தந்த செல்வர் : 1

சோழப் பேரரசின் மகோன்னத காலத்தைச் சித்திரிக்கும் சரித்திரக் கதையான ''பொன்னியின் செல்வன்'' என்ற நவீனத்தில் வரும் காட்சிகளை ஓவியர் மணியம் இங்கே தருகிறார்.

தமிழ் நாட்டின் பொற்காலமாக விளங்கிய சீரும் சீலமும் பொருந்திய சரித்திரத்தைப் பின்னணியாகக் கொண்டு, தமிழர்களின் வீரம், பண்பாடு, அரசியல் திறம் ஆகிய உயர்ந்த பண்புகள் அனைத்தையும் சித்திரிக்கும் இந்தக் கதையில், தமிழ் மக்கள் எண்ணி எண்ணி வியக்கக் கூடிய அரிய கதாபாத்திரங்களைக் காண்கிறோம். பொன்னிதந்த

சல்வராக விளங்கிய கல்கி
யவர்களின் இந்த அமர
ிருஷ்டிகளை — ஓவியர் மணி
ம் தமது கற்பனையிலே
ண்டு வரைந்திருக்கிறார்.
ந்தர சோழ சக்கரவர்த்தி,
ராஜராஜ சோழன், பழுவேட்
டரையர், மதுராந்தகன், ஆழ்
ார்க்கடியான், குந்தவை,
ந்தினி, செம்பியன்மாதேவி,
அநிருத்தப்பிரம்மராயர், பூங்
ுழலி முதலிய கதாபாத்திரங்
களையும் அவர்கள் தோன்றும்
ை மான காட்சிகளையும்
பான்னியின் செல்வர் 1, 2
ஆகிய காட்சிகளைடயே
காணலாம்.







தமது சரித்திரக் கற்பனைக்குப் பின்னணி வழங்கக்கூடிய ஓவியக் காட்சிகளை யெல்லாம் சென்று சென்று பார்த்து ரஸித்தார் கல்கி அவர்கள். அவருடைய உள்ளத்தைக் கவர்ந்த சில புகழ்பெற்ற ஓவியங்களை இங்கே காணலாம்.

கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் இளமையில் ராஜாஜியோடு கொண்டிருந்த தொடர்பு, கல்கி அவர்களின் வாழ்க்கை உருவாவதில் பல விதத்திலும் காரணமாக இருந்தது. இதைக் கல்கி அவர்கள் அநேக முறைகளில் ரஸமாகச் சொல்வதுண்டு. கீழே வருகிற கட்டுரையில் ராஜாஜியோடு தாம் பெற்ற இரண்டு அநுபவங்களைக் கூறுகிறார். மிகச் சிறு விஷயங்களையும் திருத்தமாகச் செய்யும் ராஜாஜியின் பண்புக்கும், அதை ரஸமாக எடுத்துச் சொல்லும் கல்கியின் திறமைக்கும் இந்தக் கட்டுரை ஒரு நல்ல சான்று. — ஆசிரியர்

# என் ராஜிநாமா / கல்கி

காந்திஜி தமிழ் நாட்டில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அந்தக் காலத்தில் தலைவர்கள் ஒவ்வொருவரும் பிரயாணம் செய்யும் காலத்தில், ஓர் இராட்டையை உடன் எடுத்துச் செல்வது வழக்கம். காந்திஜியுடன் சென்ற ராஜாஜியும் அப்படி ஓர் ராட்டை எடுத்துக் கொண்டு போனார். அப்போது நான் திருப்பூரில் கதர் போர்டில் ஊழியம் செய்து கொண்டிருந்தேன். ஆகவே, இராட்டை விஷயமாக எனக்கு எல்லாம் தெரிந்திருக்க வேணுமென்று ராஜாஜி எண்ணினார். அப்படி அவர் எண்ணியதில் தவறு இடையாது. இராட்டினத்தைப் பற்றி எனக்கு எல்லாம் தெரியும்தான். அதைப் பற்றி ஒரு 'அழகான' வியாசம் எழுதச் சொல்லியிருந்தால், பேஷாக ராஜாஜிகூடத் திருப்தியடையும்படி எழுதியிருப்பேன்! ஆனால் அவர் அப்படி ஒன்றும் சொல்லாமல் அவருடைய இராட்டினத்துக்கு எண்ணெய் போடும்படி எனக்குக் கட்டளையிட்டார். நானும் 'ஆகட்டும்' என்று ஜம்பமாக ஒப்புக் கொண்டேன்.

அன்றைய தினம் இராட்டைக்கு எண்ணெய் போடுகிறேன் என்று ராஜாஜியிடம் நான் ஒப்புக் கொண்டதைப் போன்ற தவறு, என் வாழ்க்கையில் நான் செய்தது இடையாது. அரை மணி நேரம் இராட்டைக்கு எண்ணெய் போட நான் முயற்சி செய்த பிறகு, வாழ்க்கையிலேயே வெறுப்புண்டாகி விட்டது; சந்நியாசம் வாங்கிக் கொள்ளாமல் மயிரிழையில் தப்பினேன். புதிதாக அப்போதுதான் 'கிராப்' வெட்டிக் கொண்டிருந்தபடியால், மொட்டையடித்துக் கொள்ள மனம் வரவில்லை.

இராட்டைக்கு எண்ணெய் போடுவதைப் போல் இந்த உலகில் இன்னொரு சிரமமான காரியம் உண்டு என்றால், அது கைக் குழந்தைக்கு விளக்கெண்ணெய் போடுவதுதான்.

இராட்டையில் இரண்டு இடங்களில் எண்ணெய் போட வேண்டும். சக்கரம் சுழலும் அச்சு; கதிர் சுழலும் தோல் காதிலுள்ள தொளை. ஆனால் என்னுடைய அரை மணி நேர முயற்சிக்குப் பிறகு, அந்த இராட்டை முழுதும் எண்ணெய் ஸ்நானம் செய்திருந்தது! அந்த அறை யெல்லாம் எண்ணெயில் முழுகி யிருந்தது! என் வேஷ்டி துணிமணிகள் அரைப்படி எண்ணெய் குடித்து விட்டன. ஆனால் அந்த நாசமாய்ப் போகிற இராட்டையில், எண்ணெய் பட வேண்டிய இரண்டு இடங்களிலும் மட்டும் ஒரு சொட்டு எண்ணெய் கூடப் படவில்லை.

நிமிஷத்துக்கு நிமிஷம் என் கோபம் அதிகமாகி, வியர்த்து விறுவிறுத்துப் போய், கலயத்தில் பாக்கி யிருக்கும் எண்ணெயை இராட்டையின் தலையில் கொட்டலாமா— என் தலையிலேயே கொட்டிக் கொண்டு ஒரு வழியாகப் போய் ஸ்நானம் செய்து விடலாமா என்று யோசித்துக் கொண்டிருந்த போது ஸி. ஆர். அங்கு வந்து சேர்ந்தார். இராட்டையை ஒரு முறையும், என்னை ஒரு முறையும் பார்த்துப் புன்னகை புரிந்தார். எங்கேயோ போய் ஒரு துணி எடுத்துக் கொண்டு வந்து இராட்டையின் மேல் சிந்தியிருந்த எண்ணெயைத் துடைத்தார். பிறகு, கலயத்தில் பாக்கியிருந்த எண்ணெயை நான் பார்த்தது பார்த்தபடி நிற்கையிலேயே, எப்படியோ சக்கரத்தின் அச்சிலும், தோல் காதின் தொளையிலும் மட்டும் படும்படியாக விட்டு விட்டார்!

பிறகு, அந்த எண்ணெய்க் கலயத்தை என் கையில் கொடுக்காமல்—கொடுத்தால் என்ன

---

**கல்கி மொழி**

சாதாரணமாய் வாழ்க்கையின் வெளிப்படையான நிகழ்ச்சிகள்தான் நமது கவனத்தைக் கவருகின்றன. நாம் பார்க்கும் வெளி உலகத்துக்குப் பின்னால் மனோலோகம் ஒன்றிருக்கிற தென்பதை மறந்து விடுகிறோம். ஆற்று வெள்ளத்தில் மேலே மிதந்து வரும் நுரைத்திரள்களும், உதிர்ந்த இலைகள் மலர்களும், குப்பை கூளங்களும் நம் கண்ணில் படுகின்றன. ஆனால் ஜலப் பரப்பின் அடியில் உள்ள சுழல்களையும் சுழல்களையும் நாம் அறிவதில்லை. தினந்தோறும் நாம் பார்த்துப் பழகி வரும் மனிதர்களைப் பற்றி நமக்கு எல்லாம் தெரியும் என்று நினைக்கிறோம். உண்மையில் அவர்களுடைய வாழ்க்கையின் முக்கியமற்ற வெளிப்படையான அம்சந்தான் நமக்குத் தெரிந்தது. அவர்களுடைய உள்ளத்தில் பொங்கிக் குமுறும் ஆசா பாசங்கள், விரோத குரோதங்கள், இன்ப துன்பங்கள்—இவை ஒன்றும் நமக்குத் தெரியாது. —பவானி பி. ஏ. பி. எல்.

---



தலைவர் ராஜாஜி, கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி, கல்கி மானேஜிங் டைரக்டர் திரு சதாசிவம்—பத்து ஆண்டுகளுக்கு முன் எடுத்த படம்

விபரீதம் வருமோ என்ற பயத்துடன் தாமே கொண்டு போய் வைத்து விட்டுத் திரும்பி வந்தார். சாவதானமாய் உட்கார்ந்து நூல் நூற்கத் தொடங்கினார்!

அந்த நாளில், அதாவது ராஜாஜியிடம் நான் காரியதரிசி வேலை பார்த்த நாளில், சில சமயம் அவருடன் ரயில் பிரயாணம் செய்ய வேண்டியிருக்கும். அப்போது ஒரு நாள் நடந்த தமாஷான சம்பவம் என்னுடைய வாழ்க்கையையே மாற்றி அமைத்து விட்டது என்று துணிந்து சொல்லலாம்.

ரயில் 'லொடக்' என்று இரண்டு ஆட்டம் ஆடி நின்றதும் தூங்கிக் கொண்டிருந்தவன் தூக்கிவாரிப் போட்டுக் கொண்டு எழுந்திருந்தேன். நாங்கள் இறங்க வேண்டிய சங்கரி துர்க்கம் ஸ்டேஷன் வந்திருந்தது. ராஜாஜியும் அப்போதுதான் எழுந்து தமது படுக்கையைச் சுருட்ட ஆரம்பித்தார்.

அதைப் பார்த்து நானும் படுக்கையைச் சுருட்ட ஆரம்பித்தேன். அதைக் கட்டுவதற்கு ஒரு கயிறு வைத்திருந்தேன். படுக்கையைச் சுருட்டி அதனடியில் கயிற்றைவிட முயன்ற போது, படுக்கை முழுதும் அவிழ்ந்து விழுந்தது. பிறகு படுக்கைக்கும் எனக்கும் ஒரு பெரிய மல் யுத்தம் ஆரம்பித்தது. தலையணையை உள்ளே திணித்தால் ஜமக்காளம் வெளியில் வந்து விழுகிறது. அதைத் திணித்து விட்டுப் பார்த்தால், துப்பட்டி எப்படியோ வெளியிலே வந்து கிடக்கிறது. எல்லாவற்றையும் மறுபடியும் வைத்துச் சுருட்டி விட்டுப் பார்த்தால் கயிற்றைக் காணவே காணோம்! துப்பட்டி கயிற்றையும் சேர்த்து அழைத்துக் கொண்டு படுக்கைக்குள் போய் விட்டது. துப்பட்டி மறுபடி வெளியில் வராமல் கயிற்றை மட்டும் எடுப்பதற்குள் எனக்கு மூச்சு வாங்கிப் போய் விட்டது!

மறுபடி படுக்கை கட்டத் தொடங்கினேன். ஒரு வார்த்தையில் சொல்கிறேன்! அவசரத்தில் நம்மைக் காலை வாரிவிடுவதற்குப் படுக்கையையும் கயிற்றையும் போன்ற வஞ்சகத் துரோக வஸ்துக்கள் ஒன்றுமே இல்லை! என்னவெல்லாமோ செய்து பார்க்கிறேன். படுக்கையை அந்தக் கயிறு கட்டவே மாட்டேன் என்கிறது.

இதற்குள்ளே 'கார்டு' விசில் அடித்து விட்டான். ராஜாஜி தமது படுக்கையைக் கட்டி அதையும் மற்ற சாமான்களையும் கீழே இறக்கி விட்டு என்னைப் பார்த்தார். மளமளவென்று வந்து கையிலிருந்த கயிற்றைப் பிடுங்கிக் கொண்டு, அதை ஒரு வாங்கு வாங்கி, ஒரு இழுப்பு இழுத்துப் படுக்கையைக் கட்டி முடிச்சுப் போட்டார். அப்புறங்கூட அதை என் வசத்தில் ஒப்புவித்தால் என்ன விபத்து நேருமோ என்னமோ என்று பயந்து, தாமே தூக்கிக் கொண்டு போய் வெளியில் பிளாட்பாரத்தில் போட்டார்!

இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தார்கள் ரயிலில் இருந்தவர்கள். எனக்கு மானம் போய் விட்டது. கொஞ்ச நாளைக்கெல்லாம் என்னுடைய காரியதரிசி பதவியையே ராஜினாமா செய்து விட்டேன்!

## அற்புதமான பலன்கள்!

—31-12-54ல் வெளியான போனஸ் விவரம்—

வருஷம் ஒன்றுக்கு இன்ஷ்யூர் செய்யப்பட்ட ரூ. 1000/-க்கு

முழு ஆயுள் ரூ. 18
எண்டோமென்ட் ரூ. 15

இன்னும் கூடுதலான விகிதங்களுக்கு உத்தரவாதம்

★

மதிப்பீடு செய்த ஆக்சுவரி குறிப்பிடுவதாவது:

"......மிக ஆச்சரியகரமான பலன்களைத் தெளிவுற எடுத்துக் காட்டுகிறது......"

"......உமது கம்பெனியின் பாலிஸிதாரர்கள் வருங்காலத்தில் பிரீமியமாகச் செலுத்தி மிச்சப் படுத்தும் தொகைகளுக்கு இன்னும் கூடுதலான பலன்களை நிச்சயமாக அடைவார்கள் என்று நான் நம்புகிறேன்......"

★

# இந்தியன் மெர்க்கண்டைல்

## இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிட்.

14, நிக்கோல் ரோடு
பல்லார்ட் எஸ்டேட், பம்பாய்-1

★

கிளை ஆபீஸ்கள்:

327, தம்பு செட்டித் தெரு, சென்னை
15/57, பெரிய கடைத் தெரு, கோயமுத்தூர்
8570/1/1, ராஷ்டிரபதி ரோடு, (கிங்ஸ்வே)
ஸ்ரீபவன், சிக்கந்தராபாத் (டெக்கான்)

# அநுமகரத்வஜா

ஷட்குண மகாத்வஜா சக்தி வாய்ந்தது



சுத்தமான ஷட்குணத் தங்கத்தினால் மிகவும் சிறிய அளவில் ஆனால் பிரமாத சக்தி வாய்ந்ததாக உயர்ந்த முறையில் தயாரிக்கப்பட்டுப் பிறகு மாத்திரை வடிவம் ஆக்கப்பட்டிருக்கிறது. உபயோகிப்பதற்கு மிகவும் சுலபம். மற்ற மகரத்வஜங்களை விடச் சக்தி வாய்ந்தது.

○●○

14 மாத்திரைகள் ஒரு புட்டியில் இருக்கின்றன. (7 முழு அளவுகள்)

○●○

## பெங்கால் கெமிகல்

கல்கத்தா - பம்பாய் - கான்பூர்

சென்னை ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
**ஆர். எல். கௌடர் & கம்பெனி**
59, பந்தர் தெரு : சென்னை-1

ஆந்திர ராஜ்ய டிஸ்ட்ரிப்யூட்டர்கள்
**சத்ய நாராயணா பார்மஸி**
குமரி தெரு, விஜயவாடா-1 & விஜயநகரம்

# வட இந்திய சீக்கியர்களும்

பஞ்சாபுக்குச் சென்றதும் என்னுடைய உள்ளத்தில் அடங்காத ஒரு தாபம் பொங்கி எழுந்தது. சீக்கியர்கள் என்பவர்கள் யார்! அவர்கள் எந்த தேசத்தைச் சேர்ந்தவர்கள்! ஏன் இப்படிச் சீக்கிஸ்தான் கிளர்ச்சி செய்து வருகிறார்கள் என்று தெரிந்து கொள்ள என் இருதயம் துடித்தது. பஞ்சாபில் இந்தி மொழியை எதிர்த்துக் கிளர்ச்சி செய்யும் அவர்களைப் பார்த்து ஒரு குரல் அழ வேண்டுமென்று தோன்றியது.

"சுதந்திர இந்தியாவில் வேறு எந்த பாகத்தையும்விட பஞ்சாப்தானே எத்தனையோ வழிகளில் முன்னேறி வருகிறது. அதற்கு ஏன் இப்படித் தடை செய்கிறீர்கள்! அதனால் தாங்கள் அடையும் நன்மை என்ன!" என்று அந்தச் சீக்கியர்களைப் பார்த்து ஒரு வார்த்தை கேட்டுவிட்டு, அவர்களுக்கு என் மனமார்ந்த அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்ள வேண்டும் என்று ஆசை உண்டாயிற்று.

சீக்கியர்களுக்கும் இந்துக்களுக்கும் கொஞ்ச காலத்துக்கு முனபு வரையில் எந்த விதமான விரோதமும் இடையாது. அது சுதந்திரத்துக்குப் பின்னால்தான் உண்டாகி வளர்ந்திருப்பதாகும். இதன் காரணத்தை நாம் நன்கு அறிந்து கொள்ள வேண்டுமானால் பஞ்சாபின் அரசியல் சரித்திரத்தைக் கொஞ்சம் தெரிந்து கொள்ளுதல் அவசியமாகும்.

பஞ்சாப், பெப்சு, இமாசலப் பிரதேசம் எல்லாம் இரண்டு மொழி வழங்கும் பிரதேசங்கள். தேவநாகரி எழுத்தில் உள்ள இந்தியும், குருமுகி எழுத்தில் உள்ள பஞ்சாபியும்தான் அங்கு வழக்கில் இருந்து வருகின்றன. ஆனால் படிப்பதற்கு அவர்கள் எடுத்துக் கொள்ளும் மொழி உருது. நியாயஸ்தலங்களில் வழங்கும் மொழியும் உருதுதான். அங்கு பிரபலமாக இருக்கும் தின வாரப் பத்திரிகைகள் எல்லாம் உருதுப் பத்திரிகைகள்தான்.

சீக்கியர்கள் தங்களுக்குச் சீக்கிஸ்தான் வேண்டும், அரசியல் மொழி பஞ்சாபியாகத்தான் இருக்க வேண்டும் என்று கிளர்ச்சி செய்து வருகிறார்கள். சென்ற ஜூன் மாதம் இருபத்திரண்டாம் தேதி நாங்கள் பஞ்சாபில் இருக்கும்போது சீக்கிஸ்தான் கிளர்ச்சியும், இந்தி எதிர்ப்பு இயக்கமும் உச்ச நிலையில் இருந்தன. அது சம்பந்தமாகச் சுமார் எட்டாயிரம் சீக்கியர்கள் கைது செய்யப்பட்டிருந்தனர். ஐயாயிரம் சீக்கியர்கள் சிறையில் இருந்தனர். பார்க்குமிட மெல்லாம் "பஞ்சாபி சூபா" கோஷம்தான். சூபா என்றால் சமஸ்தான் என்று பொருள். அதாவது பஞ்சாப் சமஸ்தானம் வேண்டுமென்ற கூக்குரல்தான் எங்கும் கேட்டன. இதையேதான் சீக்கிஸ்தான் கிளர்ச்சி என்று சொன்னார்கள்.

சீக்கியர்களுக்கு பஞ்சாப் சமஸ்தானம்தான் முக்கியமாக இருந்தது. ஆனாலும் மொழியை வைத்து மக்களிடையே உணர்ச்சியூட்டி வந்தனர். இந்தப் பிரச்னையில் 1949-ம் ஆண்டில் ஒரு மாறுதல் ஏற்பட்டது. பஞ்சாபைப் பாஷைப் பிரச்னை அடிப்படையில் இரண்டு பகுதிகளாகப் பிரித்தனர். ஜலந்தரை ஒட்டிய

# யாத்திரை . 19



ஆறு ஜில்லாக்கள் ஒரு பகுதி. அங்கு அதிகமான மக்கள் பஞ்சாபி பேசி வந்ததால் பள்ளிக் கூடங்களில் பஞ்சாபி மொழியில் கல்வி போதிக்க ஏற்பாடு செய்தனர். நான்கு ஜில்லாக்கள் கொண்ட அம்பாலாவை இன்னொரு பகுதியாகப் பிரித்து அங்கு இந்தியைக் கல்வி போதிக்கும் பாஷையாகச் செய்தனர்.

ஆனால் எந்த வகுப்பிலாவது குறைந்த பட்சம் பத்து மாணவர்கள் வேறு மொழியைக் கற்றுக்கொள்ள விரும்பினால் அதற்கும் சர்க்கார் வசதி செய்து கொடுத்தனர். சீக்கியர்கள் தங்கள் மொழியான பஞ்சாபியைப் படிக்க ஆரம்பித்தார்கள். இந்துக்கள் இந்தியைப் பயில ஆரம்பித்தனர்.

அந்தப் பக்கத்தில் உள்ள மொழியில் இலக்கிய வளமுள்ள பாஷை உருதுதான். அதனால் பலர் உருதுவைப் பயின்று வந்தனர். இதை யறிந்த பஞ்சாப் சர்க்கார் இன்னும் நான்கு ஆண்டுகளுக்குள் உருதுவும், ஆங்கிலமும் இருந்த இடத்தில் தேசிய மொழியான இந்திதான் இருக்கும் என்று அறிக்கை வெளியிட்டு விட்டனர்.

பஞ்சாப் சர்க்கார் காரியாலயங்களிலும், உயர்நீதி மன்றங்களிலும் இந்தி பாஷையைத்தான் உபயோகித்து வருகின்றனர்.

பஞ்சாப் சர்க்கார் இந்தியுடன் பஞ்சாபியையும் சேர்த்து வளர்த்து வருவதற்கு எல்லா ஏற்பாடுகளையும் செய்துதான் இருக்கிறார்கள். இருந்தாலும் அங்குள்ள மக்களுக்கு அதில் அவ்வளவு திருப்தி இல்லை.

பஞ்சாபில் சாதாரணமாக எல்லா மக்களும் பஞ்சாபியையும், இந்தியையும் தடங்கல் இல்லாமல் பேசுகிறார்கள். எழுதப் படிக்க வரும்போதுதான் தகராறு வந்து விடுகிறது. சீக்கியர்கள் கிளர்ச்சி அதிகமானதுடன் பள்ளிக்கூடங்களில் இந்தியுடன் பஞ்சாபியையும் கட்டாயப் பாடமாகச் செய்து விட்டனர்.

பஞ்சாபியை விரும்பாத இந்துக்கள் 'இது அநியாயம்' என்று முணுமுணுக்கின்றனர். சீக்கியர்களோ "பள்ளிக் கூடங்களில் குருமுகி எழுத்தில் பஞ்சாபியைச் சொல்லிக் கொடுக்க வேண்டும் என்று சொல்வதெல்லாம் வெறும் கண் துடைப்பு. இது சர்க்கார் அறிக்கையில் இருக்கிறதே ஒழிய நடைமுறையில் கையாளப்படவில்லை" என்று குறைப்படுகின்றனர்.

பஞ்சாபில் உள்ள சில ஜில்லாக்களில் சீக்கியர்கள் அதிகம் இருக்கின்றனர். அந்த ஜில்லாக்களை எல்லாம் சேர்த்துத்தான் 'சீக்கிஸ்தான்' அமைக்க வேண்டும் என்று மாஸ்டர் தாராசிங் தலைமையில் கிளர்ச்சி நடத்தி வருகின்றனர். ஒரு ஜில்லா எங்களுக்குக் கிடைத்தாலும் போதும், அதை நாங்கள் ஆளுவோம் என்று ஓலமிடு




பகீரதன்

கின்றனர். இப்படிக் கோஷமிடும் இந்தச் சீக்கியர்கள் யார்? ஏன் இப்படி அவர்கள் கோஷமிட்டு வருகிறார்கள்?

## சீக்கியர்களின் அரசியல்

சீக்கியர்கள் அரசியலில் அகாலிகள், தேசிய வாதிகள் என்று இரண்டு பிரிவினர்களாகப் பிரிந்து நிற்கின்றனர். அகாலிகள் எல்லாரும் சனாதனிகள். சீக்கிய மதக் கொள்கைப்படி அவர்களைக் காலன் நெருங்கமாட்டான் என்ற நம்பிக்கையுடையவர்கள். அதாவது காலன் பயம் இல்லாதவர்கள் அகாலிகள். தேசிய வாதிகள் எல்லாரும் மதபக்தி உள்ளவர்கள் தான். ஆனால் பொது அறிவு உள்ளவர்கள். வளர்ந்து வரும் உலகத்தோடு சேர்ந்து வாழும் அறிவு பெற்றவர்கள், தேசபக்தர்கள்.

சென்ற பொதுத் தேர்தலில் அகாலிகள் முறியடிக்கப் பட்டனர். தேசிய வாதிகள் வெற்றி பெற்றனர். தோல்வி பெற்ற அகாலிகள் தேசியவாதிகளை எப்படியாவது முறியடித்து விடவேண்டும் என்று கங்கணம் கட்டிக் கொண்டு வேலை செய்தனர். அதற்கு ஏற்றாற் போல் குருத்வாரம் தேர்தல் வந்தது.

குருத்வாரம் என்றால் சீக்கியர்களின் கோயில்களுக்குப் பெயர். சீக்கியர்களின் குருத்வாரம் எல்லாம் நல்ல பணம் படைத்தவை. குருத்வாரத்தின் நிர்வாகம் மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட "சிரோமணி குருத்வார பிரபந்தக் குழு" என்ற குழுவின் மூலம் ஒழுங்காக நடைபெற்று வருகிறது. இந்தத் தேர்தலும் பொதுத் தேர்தல் போல பிரமாத ஆர்ப்பாட்டத்துடன் நடக்கிறது. வயது வந்த எல்லா சீக்கியர்களுக்கும் ஓட்டு உரிமை உண்டு. குருத்வாரத் தேர்தலையும் பஞ்சாப் சர்க்காரே நடத்திக் கொடுக்கிறார்கள்.

சென்ற குருத்வாரத் தேர்தலில் சிரோமணி குருத்வார பிரபந்தக் குழுவுக்குத் தேர்ந்தெடுக்கப்பட்ட எல்லாரும் அகாலிகள். அகாலிகளுடன் போட்டியிட்ட தேசியவாதிகள் அத்தனை பேரும் முறியடிக்கப் பட்டனர்.

இவ்வாறு வெற்றி பெற்ற அகாலிகள் தங்களுக்கென்று தனி சமஸ்தானம் இருந்தால்தான் அரசியலில் செல்வாக்குப் பெற முடியும் என்று முடிவு கட்டினர். இதனால் ஏற்பட்ட கிளர்ச்சிதான் "பஞ்சாபி சூபா." அதாவது சீக்கிஸ்தான் புரட்சி.

குருத்வார விழாக்களில் எல்லாம் அகாலிகள் "பஞ்சாப் சூபா" அடைந்தே தீருவோம் என்று கோஷமிட ஆரம்பித்தனர். அங்குள்ள தேசிய வாதிகள் உடனே அதற்கு எதிர்க் கோஷமிடத் தொடங்கினர். குருத்வாரம் அரசியல் மேடையாகி விட்டது. இதைத் தடுப்பதற்காகப் பஞ்சாப் சர்க்கார் குருத்வாரம் சம்பந்தமான எந்த விழாவிலும் "பஞ்சாபி சூபா" கோஷம் இடக்கூடாது என்று தடை விதித்தனர்.

இந்தத் தடை உத்தரவை அகாலிகள் மீற ஆரம்பித்தார்கள். "பஞ்சாபி சூபா" கோஷமிடும் அதிகாரம் வேண்டுமென்று அகாலிகள் சத்தியாக்கிரகம் செய்தனர். அமிர்தசரசிலும், ஜலந்தரிலும் அகாலிகள் கூட்டம் கூட்டமாகச் சத்தியாக்கிரகம் செய்ய ஆரம்பித்தனர். இவர்களுடைய குறுகிய மனப்பான்மையைக் கண்ட தேசிய வாதிகள் அவர்களுக்கு எதிராகக் கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தனர். சீக்கிய தேசிய வாதிகள் என்ன கிளர்ச்சி செய்தனர்?

## மகா பஞ்சாப்

பஞ்சாப் ஜனத்தொகையில் ஐம்பத்தைந்து பங்குள்ள இந்துக்களுடன் தேசிய சீக்கியர்கள் சேர்ந்து கொண்டனர். பெப்சு, இமாசலப் பிரதேசம், பஞ்சாப் மூன்றையும் சேர்த்து "மகா பஞ்சாப்" அமைக்க வேண்டும் என்று கோஷமிட்டனர். பஞ்சாபில் இருந்த சமஸ்தானங்களைக் கொண்டு அமைத்ததுதான் பெப்சுவும், இமாசலப் பிரதேசமும். அதனால் எல்லாவற்றையும் பஞ்சாபுடன் சேர்த்துவிட வேண்டியதுதான் நியாயம் என்பது அவர்கள் வாதம்.

'பஞ்சாபி சூபா' இயக்கமும் 'மகா பஞ்சாப்' கிளர்ச்சியும் நடந்து கொண்டிருக்கும்போதே பஞ்சாபில் எத்தனையோ தேச முன்னேற்றக் காரியங்களையும் விடாமல் அவர்கள் கவனித்து வருகிறார்கள். பக்ரா நங்கல் அணைகள், நங்கல் கால்வாய், அருவி மின்சார நிலையங்கள், சிர்ஹிந்த் கால்வாய் அபிவிருத்தி, பிஸ்த்-தோ-ஆப் கால்வாய்ச் சீர்திருத்தம் எல்லாம் ஒரு குறையும் இல்லாமல் நடைபெற்று வருகின்றன. இந்தச் சாதனைகள் "பஞ்சாபி சூபா" இயக்கத்தை நசுக்கிப் பஞ்சாபை இந்தியாவிலேயே பொருளாதாரத்திலும், தொழில் துறையிலும் சிறந்த முற்போக்கான ராஜ்யமாக உயர்த்தி விடும் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை.

தமிழ் நாட்டில் உள்ள அரசியல்வாதிகளுக்கும் அவர்களுக்கும் உள்ள அதிசயமான வித்தியாசம் இதுதான். அவர்கள் தங்களுக்குள் எத்தனையோ பயங்கரச் சண்டைகள் போட்டுக் கொண்டாலும் கூடவே தேசத்துப் பொருளாதார வளர்ச்சியில் ஒரு கண் வைத்துக் கொண்டே இருக்கிறார்கள். தமிழ் நாட்டிலோ சில்லறைச் சண்டைகளில் அதிக கவனம் செலுத்துவது போல் தேசியப் பொதுக் காரியங்களில், ஏழை எளிய மக்களின் நலத்தில் அரசியல் வாதிகள் கவனம் செலுத்துவதில்லை.

இந்தியாவை ஆண்ட வெள்ளைக்காரர்கள் வட இந்தியாவில் அவர்களுக்குள் பிரித்தாளும் தந்திரம் பல செய்து பார்த்தாலும் அவர்களுடைய தேச பக்தியை மட்டும் அவர்களால் அழித்துவிட முடியவில்லை. அதனால்தான் சொந்தச் சண்டைக் குழப்பத்திலும் அவர்கள் தேசத்தை மறந்து விடவில்லை.

வெள்ளைக்காரர்கள் அங்கு என்ன பிரித்தாளும் தந்திரத்தைக் கையாண்டார்கள்?

வெள்ளைக்காரர்கள் இருக்கிறார்களே அவர்கள் மிகுந்த கெட்டிக்காரர்கள். அவர்கள் இந்தியாவில் கையாண்ட பிரித்தாளும் தந்திரத்தின் பிரதிபிம்பம்தான் இப்பொழுது நடைபெற்று வரும் "பஞ்சாபி சூபா" கிளர்ச்சி.

இந்தியாவை பிரிட்டிஷார் ஆண்ட போது அவர்கள் சீக்கிய மத நம்பிக்கை உள்ளவர்களை என்ன காரணத்தாலோ ஊக்குவித்தனர். வெளிப்படையாகச் சொல்லப்படுகிற ஒரு காரணம் வட இந்தியாவில் பிரிட்டிஷார் வேரூன்றுவதற்குப் பேருதவி புரிந்தவர்கள் சீக்கியர்கள் என்பதே. அதனால் பிரிட்டிஷார்கள் பல சீக்கியர்களுக்கு ஏராளமான பூமியைக் கொடுத்து அவர்களை ஜமீன்தார்களாகவும், ஜாகீர்தார்க

# உங்களுடைய தேக ஆரோக்கியத்தை ப்ளிட் எப்படி பாதுகாக்கின்றது

மலேரியா, டைபாயிட், காலரா முதலிய
பல வியாதிகளைக் கொண்டுவரும் பூச்சிகளை இது கொல்லுகிறது




ப்ளிட் தனிப்பட்ட ஒரே ஒரு பூச்சியைக் கொல்லும் மருந்தல்ல. ஆனால் பற்பல பூச்சிகளைக் கொல்லும் மருந்துகளின் ஒரு முழுச் சேர்க்கையாகும். இந்நூதன இம்மருந்துகள் ஒன்றிற்கொன்று கலந்து மற்றதையும் மிகவும் சக்தியுள்ளதாகச் செய்துகொள்ள உதவுகின்றன. இவ்வித ஒற்றுமையான செய்கையினாலேயே ப்ளிட் நீங்கள் வாங்கக் கூடிய பூச்சியைக் கொல்லும் மருந்துகளிலேயே மிகவும் சக்திவாய்ந்ததாயும், சிக்கனமானதாயும் விளங்குகிறது.

ப்ளிட் மாந்தருக்கும் வீட்டில் வளர்க்கப்படும் பிராணிகளுக்கும் தீங்கு விளைவிக்காது. இன்றே ஒரு டின் வாங்குங்கள்—இது எவ்வளவு பலனுள்ளதென்பதை அறிய உங்களுக்கு ஆச்சரியமாயிருக்கும்.

**1** ஒரு சிலவற்றையேதான் கொல்லும் என்றில்லை—வீட்டிலுள்ள பூச்சிகளனைத்தையும் கொல்லுகிறது

பூரணப் பிரயோஜனத்தை உத்தேசித்து விஞ்ஞான முறைப்படி ப்ளிட்டில் ஆறு சக்தி வாய்ந்த பூச்சிகளைக் கொல்லும் மருந்துகள் சேர்க்கப்பட்டுள்ளன. வீட்டிலுள்ள பூச்சிகள் இதனுடைய சாகடிக்கும் தன்மையினின்று தப்பவே முடியாது!

**2** நீங்கள் செலவழிக்கும் ஒவ்வொரு அணுவுக்கும் அதிகமான பூச்சிகளைக் கொல்லுகிறது

ப்ளிட் தெளிக்கப்பட்ட பாகம் பல வாரங்களுக்கு பூச்சிகளுக்கு உயிருக்காபத்தாய் விளங்குகிறது. நீங்கள் ப்ளிட் உபயோகித்த பிறகு உங்களை பாதுகாத்துக் கொண்டே போகிறது. உங்கள் முழுக்குடும்பத்தின் தேக சுகத்தை ப்ளிட் கொண்டு காப்பாற்றவும்.

## சிவப்பு, வெள்ளை, நீல நிறமும் கொண்ட டின்னில் கிடைக்கும்

ஸ்டாண்டர்ட்-வாக்குவம் ஆயில் கம்பெனி

(கம்பெனி அங்கத்தினர்களின் பொறுப்பு வரையறுக்கப்பட்டது)

V. 1739




ளாகவும் செய்து வைத்தனர். இந்த லம்பர்தாரர்கள் பஞ்சாபில் நிறைய இருக்கின்றனர். இவர்கள் வெள்ளைக்காரர்கள் இந்த நாட்டை ஆண்டவரையில் மிகுந்த செல்லப் பிள்ளைகளாக, வேண்டிய சௌகர்யங்களுடன் சுக வாழ்வு வாழ்ந்து வந்தனர்.

ராவ்பகதூர் போன்ற பெரிய பட்டங்களைப் பெற்றனர். ராணுவத்தில் அவர்களுக்கு நல்ல செல்வாக்கு இருந்தது. சர்க்கார் உத்தியோகங்கள் தாராளமாகக் கிடைத்து வந்தன.

தேசம் சுதந்திரம் பெற்ற பிறகு அங்கு ஜமீன்தார் ஒழிப்பு வந்து விட்டது. அதனால் ஜமீன்தார்கள் ஏராளமாகப் பணத்தைச் செலவழித்து இந்த "பஞ்சாபி சூபா" கிளர்ச்சியை நடத்தி வருவதாகச் சொன்னார்கள்.

## யார் இந்த சீக்கியர்கள்?

இந்துக்களுக்கும் சீக்கியர்களுக்கும் அதிக வித்தியாசமே கிடையாது. சீக்கியர்கள் தங்கள் மதத் தலைவரான குருநானக்கை ராமனின் அவதாரம் என்றுதான் சொல்லிக் கொள்ளுகிறார்கள். குருநானக்கின் உபதேசம், இந்து மதத் தலைவர்களான ரமானந்தர், கபீர்தாஸ் ஆகியவர்களின் உபதேசங்கள் எல்லாம் சீக்கியர்களுடைய மத நூலான 'கிரந்த் சாஹிப்'பில் இடம் பெற்றிருக்கின்றன.

சீக்கியர்களுக்கு விக்ரக வழிபாடு கிடையாது. ஆனால் 'கிரந்த சாஹிப்' என்ற மத நூலுக்குத் தங்கக் கட்டில் செய்து, அதில் வெல்வெட் மெத்தை தைத்துப் போட்டு, சித்திர விசித்திர வேலைப்பாடுகளுடன் கூடிய தலையணைகள் வைத்துப் பூசை செய்கின்றனர். தூபதீப நைவேத்தியங்கள் எல்லாம் நடக்கின்றன.

அங்குள்ள இந்துக்கள் குருத்வாரத்துக்குப் போய் கிரந்த சாஹிப்பை வணங்குவதும், சீக்கியர்கள் இந்து ஆலயங்களுக்கு வந்து விக்கிரக வழிபாடு செய்வதும் சாதாரணமாகப் பழக்கத்தில் இருந்து வருகின்றன.

இதைவிட அதிசயம் இந்துக் குடும்பத்திலேயே சீக்கியர்கள் இருப்பதுதான். இது எப்படிச் சாத்தியமாகிறது என்று நேயர்களுக்குத் திகைப்பாயிருக்கிறதல்லவா!

இந்துக் குடும்பத்தில் யாருக்காவது அடிக்கடி குழந்தை பிறந்து தங்காமல் இறந்து கொண்டே இருந்தால், அந்த இந்துக் குடும்பத்துத் தாய் ஒரு பிரார்த்தனை செய்து கொள்வாள். "ஆண்டவனே! அடுத்து எனக்குப் பிறக்கும் குழந்தையைச் சீக்கியனாக்கிவிடுகிறேன். குழந்தையைக் காப்பாற்று!" என்று வேண்டிக் கொள்வாள்.

இவ்வாறு பிரார்த்தனை செய்து கொண்ட பிறகு ஒரு இந்துத் தாய்க்குப் பிறக்கும் குழந்தைகள் இறந்து போகாமல் இருப்பதுடன் மேலும் குழந்தைகள் பிறந்து வளர்ந்து வருகிறது என்ற அழுத்தமான நம்பிக்கை அங்கு இன்னும் இருக்கிறது. 'நம்பினோர் கெடுவதில்லை' அல்லவா!

இந்துக் குழந்தையைச் சீக்கியனாக்கும் மதச் சடங்கெல்லாம் முப்பது நிமிஷத்துக்குள் முடிந்து விடுகிறது. பிறகு அந்தச் சீக்கியன் இந்துக் குடும்பத்திலேயே வளர்ந்து வருகிறான்.

சீக்கியர்-இந்து கலப்பு மணம் நடைபெறுவதும் சர்வ சாதாரணம். இறுதிச் சடங்கு

செய்வதில் சீக்கியர்களுக்கும் இந்துக்களுக்கும் வித்தியாசம் கிடையாது. ஆனால் இறந்து போன தங்கள் மூதாதையர்களுக்குச் சீக்கியர்கள் நிதி கொடுக்க மாட்டார்கள்.

ஒவ்வொரு சீக்கியருக்கும் முக்கிய மதச் சின்னங்கள் ஐந்து. பிறந்த நாளிலிருந்து எடுக்காத தாடியும் சிகையும், சிகையை வாரி முடியும் மரச் சீப்பு, வெள்ளை ஆடை, கையில் இரும்பு வளையல், இடையில் வாள் இவைகள் தான் சீக்கியர் என்பதற்கு வேண்டிய முக்கிய மதச் சின்னங்கள். இவற்றைச் சாதாரணமாகப் பார்த்துத் தெரிந்து கொள்ள முடிவதில்லை.

கையில் அணியும் இரும்பு வளையல் என்றவுடன் அதைப் பற்றி அங்கு கேள்விப்பட்டது நினைவுக்கு வருகிறது.

ஒரு அணுக்கூட பெறாத அந்த வளையல் ஒரு சமயத்தில் பத்து ரூபாய்க்கும் பதினைந்து ரூபாய்க்கும் கூடக் கிடைக்கவில்லையாம்.

இந்து முஸ்லிம் சண்டையின் போது முஸ்லிம்கள் இந்துக்களிடமிருந்து தப்பி ஓடுவதற்காக இம்மாதிரி இரும்பு வளையல்களை வாங்கிக் கையில் அணிந்து கொண்டு உயிர் தப்பிப் பிழைத்தார்களாம்.

இப்படி எத்தனை எத்தனையோ மனித உயிர்களைக் காப்பாற்றியதாம்.

பஞ்சாபியர்கள் நல்ல உடற்கட்டுடன் மேனி அழகும் உள்ளவர்கள். பெண்மணிகள் முகத்தை மறைத்துக் கொள்கிறார்கள்.

நான் பஞ்சாபில் சிகை அலங்கார நிலையங்களையே பார்க்கவில்லை. நம் ஊர்களில் தடுக்கி விழுந்தால் ஒரு சிகை அலங்கார நிலையம், பளபளவென்று நிலைக் கண்ணாடிகளுடன் மின்னிக் கொண்டிருக்கிறதல்லவா! பஞ்சாபில் சிகை அலங்கார நிலையமே அபூர்வம் என்றுதான் சொல்ல வேண்டும். அதனால்தான் தலையைக் கிராப் வைத்துக் கொள்ள விரும்பும் சீக்கியர்கள் பஞ்சாபில் இருக்க முடியவில்லையோ என்று சந்தேகம் ஏற்படுகிறது.

தாடியையும் தலை முடியையும் காப்பாற்றிக் கொள்ளச் சீக்கியர்கள் எடுத்துக் கொள்ளும் சிரத்தையை நேரில் பார்த்தால் தான் புரிந்து கொள்ள முடியும்! ஒரு நாளில் குறைந்தது மூன்று மணி நேரமாவது தாடிக்கும், தலை முடிக்கும் அவர்கள் செலவழிப்பார்கள் என்றால் மிகையாகாது.

தாடியை எடுத்து விட்டுக் கிராப்பு வைத்துக் கொண்டிருக்கும் சீக்கியர்களைப் பார்த்து இதர சீக்கியர்கள் கேலி செய்கிறார்கள். "இவன் என்ன சீக்கியனா! ஏதோ பெயருக்குச் சீக்கியன். அவ்வளவுதான்!" என்றெல்லாம் நையாண்டி பண்ணுகிறார்கள்.

ராணுவத்திலும், சர்க்கார் உத்தியோகத்திலும் உள்ள சீக்கியர்களில் பெரும்பாலோர் இப்பொழுது தாடி இல்லாமலும் தலையை 'ஜம்'மென்று கிராப்பு வைத்துக் கொண்டுதான் இருக்கிறார்கள்.

பிரிட்டிஷார் காலத்தில் மதப் பற்றுள்ள சீக்கியருக்கு மட்டுமே சர்க்கார் உத்தியோகம் கிடைத்து வந்தது. மதப் பற்றுள்ளவர்களுக்கு ராணுவத்தில் நல்ல செல்வாக்கு இருந்தது. மதப் பற்று நிறைந்த சீக்கியர்களுக்கு என்று தனி ராணுவமே கொடுத்துக் கௌரவப் படுத்தி வந்தார்கள் வெள்ளைக்காரர்கள்.

அதனால் சீக்கியர்கள் எல்லாரும் தாடியிலும், தலை முடியிலும் அந்தக் கவனம் செலுத்தி வந்தனர். இப்பொழுது நிலைமை மாறிவிட்டது. இவ்வாறு இருப்பதற்குச் சுதந்திர இந்தியாவில் இடமில்லை யல்லவா! அதனால்தான் "பஞ்சாப் சூபா" கிளர்ச்சி செய்து வருகின்றனர்.

சீக்கியர்கள் தங்கள் மதத்தை உயிரைப் போல் நேசித்துப் போற்றி வளர்த்து வருகிறார்கள். அதனாலேயே அவர்கள் "சீக்கிஸ்தான்" இயக்கத்தை நடத்தி வருகிறார்களோ என்று நினைக்க வேண்டியிருக்கிறது.

விவேகானந்தர் காலத்தில் உலகத்தில் உள்ள எல்லா மதங்களும் கூடியிருந்த இடத்திலே இந்து மதம் மட்டும்தான் தலைதூக்கி நின்றது. உலக மதங்கள் எல்லாவற்றையுமே இந்து மதம் தனதாக்கி விடுமோ என்றுகூட விவேகானந்தர் காலத்தில் இருந்த இதர அகில உலக மதவாதிகள் பயப்படும் அளவுக்கு இந்து மதம் உயர்ந்து நின்றது.

அப்பேர்ப்பட்ட எல்லையற்ற இந்து மதமாகிய சமுத்திரத்தில் சீக்கிய மதம் சிறு மீனாக அல்லவா, இருக்கும் இடம் தெரியாமல் நீந்த வேண்டி வரும். அப்படி ஆகாமல் தனியாக நீந்த வேண்டுமானால் "பஞ்சாப் சூபா" வேண்டியதுதான் என்று அகாலிகள் பஞ்சாபில் பிரசாரம் செய்கின்றனர்.

இன்றையதினம் 'சீக்கிஸ்தான்' கிளர்ச்சி செய்து வந்தாலும் ஒரு காலத்தில் சீக்கிய மதத் தலைவர்கள் இந்த நாட்டுக்கு நல்ல சேவை செய்திருக்கிறார்கள். நெடுநாளாக உறங்கிக் கிடந்த இந்தியர்களைச் சீக்கியத் தலைவர்கள் புத்துணர்ச்சி பெறச் செய்திருக்கிறார்கள். சீக்கிய மதத் தலைவர்களின் சீரிய தொண்டால் இந்துக்களிடையில் மதப் பற்று மிகுந்தது. முக்கியமாக இந்து மதத்துக்கு விரோதமாக அந்தக் காலத்தில் வளர்ந்து வந்த மத மாற்றங்களைத் தீவிர ஊக்கம் கொண்டு அனேகர் எதிர்த்து வேலை செய்யத் தொடங்கினர். ஆங்காங்கு குருத்வாரங்கள் ஏற்பட்டன. புராதன இந்துக் கோயில்களைப் புனருத்தாரணம் செய்து சீர்படுத்துவதிலும் சிரத்தை உண்டாயிற்று.

மற்றொரு பக்கத்தில் இந்துக்கள்—சீக்கியர்கள் ஐக்கியம் புத்துயிர் பெற்று வளர்ந்து வந்தது. அவர்கள் இயற்கையான அறிவு மேன்மையுடன் இந்து—சீக்கியர் கூட்டுறவும் சேர்ந்து எல்லாத் துறையிலும் வேகமாக முன்னேற்றம் ஏற்பட்டு வந்தது.

சீக்கியத் தலைவர்களுக்குள்ளே புகழ் பெற்ற எத்தனையோ தலைவர்களைப் பற்றிக் கேள்விப் பட்டிருக்கிறோம். அவர்களில் ஒன்பதாவது சீக்கிய குருவான தேஜ்பகதூர் சீக்கியர்களுக்கும் இந்துக்களுக்கும் ஆற்றிய தொண்டு சரித்திரத்தில் இடம் பெற்று மங்காச் சுடராக ஜொலிக்கிறது. அவருடைய சீடர் குரு கோவிந்தசிங். பாரத மாதா பெற்ற சிறந்த தலைவர்களில் ஒருவர் குருகோவிந்தசிங் ஆவார்.

அவர் வீற்றிருந்து வீரசாகஸம் புரிந்த ஸ்தலமான அனந்தபூர் சாகிப் இன்றும் சீக்கியர்களின் புனித யாத்திரை ஸ்தலமாக விளங்கி வருகிறது. சீக்கிய மதத் தலைவரான குரு கோவிந்தசிங் அனந்தபூர் சாகிப்பில் ஆற்றிய வீரத் திருப்பணிகளைப் பற்றித் தெரிந்து கொள்ளுவதற்கு அனந்தபூர் சாகிப்புக்குப் புறப்பட்டுச் செல்லுவோம். (தொடரும்)

---

கல்கி மொழி

## தொடர் கதை

இந்த அத்தியாயத்தை எழுதுவதற்கு மிகவும் தயக்கமாக இருக்கிறது. மனம் வேதனைப்படுகிறது. கையும் கூசுகிறது. எனினும் எழுதியே ஆகவேண்டும். கதையை முடிக்க வேண்டிய கடமை ஒன்று இருக்கிறதல்லவா!

பத்திரிகையில் தொடர்ச்சியாகக் கதை எழுதுவதில் இந்த ஒரு கஷ்டம் இருக்கிறது. ஆசிரியனோடு சேர்ந்து வாசகர்களும் கதையைக் கற்பனை செய்து கொண்டு வருகிறார்கள். மேலே இப்படித்தான் நடக்க வேண்டும் என்று கருதுகிறார்கள். கதையின் முடிவு இப்படித்தான் இருக்க வேண்டும் என்று முடிவு கட்டுகிறார்கள். கதாநாயகி இறந்துவிடக் கூடாதென்று சிலரும், கதாநாயகி இறந்துதான் ஆக வேண்டும் என்று சிலரும் வற்புறுத்துகிறார்கள். கதாநாயகனுக்குத் தண்டனை கிடைக்க வேண்டும் என்று சிலரும் அவனுக்குப் பட்டாபிஷேகம் நடக்க வேண்டும் என்று சிலரும் எதிர்பார்க்கிறார்கள். இப்படியே ஒவ்வொரு பாத்திரத்தின் முடிவும் இப்படி இருக்க வேண்டும் என்று அபிப்பிராயம் சொல்லுகிறார்கள்.

ஆனால் கதை ஆசிரியன்—முக்கியமாக, தொடர்கதை எழுதும் ஆசிரியன்—பெரிய தர்மசங்கடத்தில் அகப்பட்டுக் கொள்கிறான். கதாபாத்திரங்களுக்கு உண்மையாக நிகழ்ந்த முடிவை உண்மையுடன் கூறுவதா அல்லது வாசகர்களின் விருப்பத்தை யொட்டி மாற்றிச் சொல்வதா என்ற கடினமான பிரச்னை ஏற்படுகிறது. எவ்வளவு கசப்பான உண்மையாயிருந்தாலும் அது எழுதுவதற்கும் படிப்பதற்கும் எவ்வளவு மன வருத்தம் தருவதாயிருந்தாலும் நடந்தது நடந்தபடி சொல்லி விடுவதே கதை ஆசிரியனுடைய தர்மமும் கடமையும் ஆகுமல்லவா!

இங்கே இவ்வளவு நீண்ட பீடிகை போடுவதற்குக் காரணம் என்னவென்பதை வாசகர்கள் ஊகித்தறிந்திருப்பார்கள். மேலே வருவதை எழுதுவதற்குத் தயக்கந்தான் காரணம். ஆனால் எத்தனை நேரந்தான் தயங்கவும், தள்ளிப்போடவும் முடியும்!

— அலை ஓசை




# ஓ.கே வனஸ்பதி

## ருசிகரமான உணவுகள் தயாரிக்க ஏற்றது.

ஏன் தெரியுமா ?

- அதிகமான போஷாக்குச் சக்தி அளிப்பதற்காக ஒவ்வொரு அவுன்ஸ் ஓ. கே. வனஸ்பதியிலும் 700 I. U. வைட்டமின் 'A' சேர்க்கப்பட்டிருக்கிறது.
- ஓ. கே. வனஸ்பதி 'ஏர்-டைட் லீவர் லிட்' டின்களில் பாக் செய்யப்படுகிறது. இதனால் கடைசி அவுன்ஸ் வரை 'ஓ. கே.' வனஸ்பதி புதுமை கெடாமலும், சுகாதாரமாகவும் இருக்கிறது.
- ஓ. கே. வனஸ்பதி கெடுதல் எதுவும் செய்யாத உணவுத் தயாரிப்பு சாதனம். ஏனென்றால் அது நயம் தாவர எண்ணெயிலிருந்து சுகாதாரமான முறையில் தயாரிக்கப்படுகிறது.
- காலியானதும், ஏர்-டைட் ஓ. கே. லீவர் லிட் டின்னை, உங்கள் அடுப்பங்கரையில் சுகாதாரமான முறையில் சாமான்களைப் பத்திரப்படுத்தி வைக்க உபயோகியுங்கள்.




¼, 1, 2, 5, & 10 பவுண்டு டின்களில் இப்பொழுது கிடைக்கிறது.





தயாரிப்பவர்கள்

**தி ஈஸ்ட் ஏஷியாடிக் கம்பெனி (இந்தியா) லிமிடெட், மதராஸ்.**

EP

**1935ம் ஆண்டில் கல்கி கிருஷ்ணமூர்த்தி அவர்கள் உதகமண்டலத்தில் ராமகிருஷ்ண ஆசிரமத்தில் பத்து நாட்கள் தங்கி யிருந்தார். புதல்வி ஆனந்திக்கு அப்பொழுது மூன்று வயது. உதகமண்டலத்திலிருந்து மிக்க பிரியத்துடன் தந்தை புதல்விக்கு எழுதிய கடிதங்களில் ஒன்று கீழே பிரசுரமாகிறது. தந்தையின் வாஞ்சை துலங்குவதோடு, ஒரு குழந்தைக்கு 'எப்படி விஷயங்களை எடுத்துச் சொல்ல வேண்டும் என்பதையும் இந்தக் கடிதத்திலே தெளிவாகக் காண்கிறோம். —ஆசிரியர்**

# புஷ்பக் காட்சி

பிரியமுள்ள குழந்தை ஆனந்திக்கு அநேக ஆசீர்வாதம்.

இனிமேல் உன்னை விட்டுவிட்டு நான் எப்போது வெளியூருக்குப் போனாலும், உனக்குக் கடிதம் எழுதுவது என்று தீர்மானித்திருக்கிறேன். நான் எழுதும் கடிதங்களை நீ கிழித்து விடாமல் ஜாக்கிரதையாய் வைத்திருக்க வேண்டும். உனக்கு வயதான பிறகு மறுபடி வாசித்துப் பார்த்தால் சுவாரஸ்யமாயிருக்குமல்லவா?

ரயில்வே ஸ்டேஷனில் நான் உன்னை விட்டுப் பிரிந்த பிறகு, உள்ளே போய் ரயில் ஏறினேன். அங்கே எனக்குத் தெரிந்தவர் ஒருவர் இருந்தார். அவருக்குக் காது கொஞ்சம் மந்தம். ஆகையால் அவருடன் பேசுவது கொஞ்சம் கஷ்டமாயிருந்தது. சீக்கிரத்திலேயே மேலே ஏறிப் படுத்துக் கொண்டேன். நீ என்ன செய்து கொண்டிருக்கிறாயோ, தூங்கிப் போய் விட்டாயோ இல்லையோ என்று யோசித்துக் கொண்டே நான் தூங்கிப் போய் விட்டேன்.

காலையில் போதனூர் ஸ்டேஷன் வந்த பிறகுதான் விழித்துக் கொண்டேன். அங்கே பல் தேய்த்துவிட்டு, ஹோட்டலில் இட்லி, தோசை, காப்பி எல்லாம் சாப்பிட்டேன். நீயும் அந்த சமயம் பால் குடித்துக் கொண்டிருப்பாய் என்று நினைத்தேன்.

ரயில் ஒன்பது மணிக்கு மேட்டுப்பாளையம் ஸ்டேஷனை அடைந்தது. அங்கே இறங்கி, மலைமேல் போவதற்கென்று இலேசாகச் செய்திருந்த சின்ன ரயில் வண்டியில் ஏறிக் கொண்டேன்.

ரயில் மலைமேல் ஏற ஆரம்பித்தது. இரண்டு பக்கமும் நிறைய வளர்ந்திருந்த காட்டுச் செடிகளில் சின்னச் சின்னப் பூக்கள் ஏராளமாய்ப் புஷ்பித்திருந்தன. ஒரு பூ, காதில் உன்னுடைய அம்மா போட்டுக் கொள்ளும் தோட்டைப் போல் இருந்தது. இந்தப் பூ லட்சம் லட்சமாய்ப் பூத்திருந்தது. சில பூக்கள் இரத்தினம் போல் சிவப்பாயும், சில பட்டை தீர்ந்த கற்கள் போல் சிவப்பாயும், இன்னும் சில ஊதா நிறமாயும் இருந்தன.

சில இடங்களில் அழகான வெள்ளைப் பூக்கள் பூத்த செடிகள் இருந்தன. அப்புறம் பலா மரங்கள். கிளைகளில் கொத்துக் கொத்தாய்ப் பலாப் பழங்கள் தொங்கின. அவைகளைப் பார்த்தால் நீ ரொம்ப ஆச்சரியப் பட்டிருப்பாய்.

ஓர் இடத்தில் 'கிரீச்' என்ற சத்தம் கேட்டது. அங்கே என்னவென்று பார்த்தேன். காட்டுச் செடிகளுக்கு மத்தியில் ஒரு குரங்கு இருந்தது. அது என்னைப் பார்த்து, "என் சிநேகிதி ஆனந்தியை ஏன் அழைத்துக் கொண்டு வரவில்லை?" என்று கேட்டது. "ஆனந்தி சின்னக் குழந்தை தானே? அவளுக்கு ஊட்டியின் குளிர் இந்த வருஷம் பொறுக்காது. அடுத்த வருஷம் பெரியவளாய்ப் போய்விடுவாள். அப்போது முடிந்தால் அழைத்து வருகிறேன்" என்று சொன்னேன். குரங்கு, "சரிதான், அடுத்த வருஷமாவது கட்டாயம் அழைத்து வா!" என்று சொல்லி விட்டு ஓடி விட்டது.

சில இடங்களில் பட்டுப் பூச்சிகள் ஏராளமாய்ப் பறந்து கொண்டிருந்தன. அவற்றின் சிறகுகள் வித விதமான வர்ணங்களில் இருந்தன. இருபது வர்ணங்கள் நான் எண்ணினேன். "ஆனந்தி இப்போது இங்கே இருந்தால், அந்தப் பட்டுப் பூச்சிகளைப் பிடிக்க வேண்டும் என்று பிடிவாதம் செய்வாள்" என்று எண்ணிக் கொண்டேன்.

இன்னும் சில இடங்களில் மலைமேலிருந்து தண்ணீர் சள சள வென்றும் சொடசொட வென்றும் கொட்டிக் கொண்டிருக்கிறது. அங்கேயெல்லாம் ரயில் நிற்கக் கூடாதா, நின்றால் சற்று இறங்கி அந்தத் தண்ணீரைக் கையால் அலைந்து விட்டுப் போகலாமே என்று எனக்குக் கூடத் தோன்றிற்று. நீயாயிருந்தால், அங்கிருந்து வரவே மாட்டேன் என்று சொல்வாய்.

ரயில் வளைந்து வளைந்து சுமாராய் ஐயாயிரம் அடி உயரம் செங்குத்தாக மேலே



தமது குமாரன் சௌஞ்சீவி ராஜேந்திரனுக்கு உபநயனம் செய்து வைக்கிறார் பேராசிரியர் கல்கி கிருஷ்ணமூர்த்தி

போகிறது. குனூர் ஸ்டேஷனுக்குப் பிறகு, கொஞ்ச தூரம் சம தரையிலும் கொஞ்ச தூரம் மலைமேல் ஏறியும் செல்கிறது. வில்லிங்டன் என்னும் ஸ்டேஷனுக்குச் சமீபத்தில் ஒரு மரத்தைப் பார்த்தேன். அதில் இலைகளே யில்லை. நீல நிறமான பூக்களே அடர்த்தியாயிருந்தன. அதைப் பார்த்தால் நீ குதிக்கத் தொடங்கி விடுவாய்.

குனூருக்குப் பிறகு காற்று ஜில்லென்று வீசத் தொடங்கி விட்டது. வெயில் அடித்தாலும் அது உடம்பில் உறைக்கவேயில்லை. மலைப் பிரதேசங்களில் உயரப் போகப் போகக் குளிர் அதிகமாகும். ஜலங்கூடக் கையால் தொட முடியாதபடி பனிக்கட்டியைப் போல் ஜில்லென்று இருக்கும்.

மத்தியானம் 12 மணிக்கு பர்ன்ஹில் ஸ்டேஷனில் இறங்கி மேடும் பள்ளமுமான மலைச் சாலையில் நடந்து சுமார் ஒரு மைல் தூரத்திலிருந்த ஸ்ரீராம கிருஷ்ண ஆசிரமத்துக்கு வந்து சேர்ந்தேன். கொஞ்சம்கூடக் களைப்புத் தோன்றவில்லை...

இங்கே தபால் பன்னிரண்டு மணிக்கே எடுத்து விடுகிறார்களாதலால் உனக்கு நேற்றே கடிதம் எழுத முடியவில்லை.

நேற்று மத்தியானம் சாப்பிட்டு விட்டு இரண்டு மணி நேரம் தூங்கினேன். சாயங்காலம் இரண்டு மைல் நடந்தேன். இராத்திரி ஒன்பதரை மணிக்குப் படுத்தவுடன் தூங்கிப் போய் விட்டேன். காலையில் ஏழு மணிக்குத்தான் எழுந்திருந்தேன். இங்கே ரொம்ப நன்றாய்த் தூக்கம் வருகிறது. இவ்வளவு நான் தூங்கி ரொம்ப காலமாயிற்று.

போன தடவை, எட்டு வருஷங்களுக்கு முந்தி நான் இங்கு வந்திருந்த போது எவ்வளவு குளிர் இருந்ததோ, அவ்வளவு இப்போதில்லை. அதனால் வசிப்பதற்கு அதிக சௌகரியமாயிருக்கிறது. ஆனாலும் இங்கே எவ்வளவு குளிரா யிருக்கிறதென்பது சென்னைப் பட்டணத்தில் உள்ள உன்னால் தெரிந்து கொள்ள முடியாது. தரையில் காலை வைத்தால் ஜிலீர் என்கிறது. தலைக்குத் தடவிக் கொள்ளத் தேங்காயெண்ணெய் கொண்டு வந்தேனல்லவா? அது கெட்டியாய் உறைந்து போய் விட்டது. வெகு நேரம் வெயிலில் வைத்ததில் கொஞ்சம் உருகிற்று.

இந்த ஊரில் எல்லாவற்றையும் விடப் பெரிய அதிசயம் புஷ்பங்கள்தாம். உன்னை அங்கே இரண்டு தடவை பூக்காட்சி பார்க்க அழைத்துப் போனேனல்லவா? அந்த மாதிரி பூக்காட்சி இங்கே ஒவ்வொரு பங்களாவிலும் இருந்து கொண்டிருக்கிறது. இங்கே ஸ்ரீராமகிருஷ்ண ஆசிரமத்தைச் சுற்றிலுங்கூட மிக அழகான பூச்செடிகள், கொத்துக் கொத்தாய்ப் பூத்திருக்கும் பல வர்ணப் பூக்களுடன் வளர்ந்திருக்கின்றன.

இப்படிக்கு

உன் பிரியமுள்ள அப்பா,

உதகமண்டலம்
2—5—1935

ரா. கிருஷ்ணமூர்த்தி




நான் உமது நண்பன். லட்சக்கணக்கான மக்களுக்கு நண்பன்—ஏழைக்கும் பணம் படைத்தவருக்கும் சமமாக நண்பன். சிறுவரும் பெரியோரும் என்னை விரும்புகின்றனர். எவ்விடத்திலும் எனக்குத் தனிச் சிறப்பும் வரவேற்பும் உண்டு.

ஓய்ச்சலை நொடியில் விலக்கி, வியர்த்து விறுவிறுத்திருக்கையில் உமக்கு அமைதி யளிக்கிறேன். மனோவியாகூலம் அடைந்துள்ள சமயத்தில் சந்தோஷமளித்து மனக் கொந்தளிப்பின்போது சாந்தி தருகிறேன். என்னால் என்றும் கெடுதலில்லை (ஒரு டம்ளர் கூடவே சாப்பிடலாம்); எப்போதும் இன்பத் துணையே.

ஓய்வுக்காக ஏங்கும்போதும், நிமிஷம் செல்வது யுகமாகத் தோன்றும்போதும், கண்ணைத் திறக்கமுடியாமல் களைப்பு மேலிடும்போதும், நான் உமக்குப் புத்துயிர் அளிக்கிறேன். வேலைநேரம் முடிந்து வீடு திரும்பும்போது அங்கும் உமக்குத் தெம்பு கொடுக்கக் காத் திருக்கிறேன்.

உண்மையில், எங்கிருந்தபோதிலும், என்ன செய்தபோதிலும், உடல் நிலை எப்படி இருந்தபோதிலும், என்னை உயிரளிக்கும் பானமென்று காண்பீர்கள். மேலும் இவ்வளவு உயரிய குணங்கள் பெற்ற நான்தான் மிக்க மலிவான பானமுங்கூட; தேநீருக்கு "பதி லாக" என்று ஒன்றில்லை.

**நான்தான் டீ — இன்பத்தின் சின்னம்**



பேராசிரியர் கல்கி யின்

# அமர தாரா



அத்தியாயம் 14

## விந்தை மனிதர்!

கறுத்த உருவம் நேரே ஈசுவர மூர்த்தியை நோக்கி வந்தது. விளக்கின் ஒளி அந்த உருவத்தின் முகத்தில் பட்டதும், எனக்குத் தூக்கி வாரிப்போட்டது. அந்த உருவம் முகமூடி அணிந்திருந்தது. நான் அந்த வயதில் முகமூடி அணிந்த திருடர்களைப் பற்றிய கதைகள் கூடப் படித்ததில்லை. ''என்ன ஆகப் போகிறது? என்ன ஆகப் போகிறது?'' என்று என் இதயத்தின் ஒவ்வொரு துடிப்பும் கேட்டது. அந்த மனிதர் மேலிருந்து என் கண்களை அகற்றவே முடியவில்லை. உடலில் விவரிக்க முடியாத ஒரு பரபரப்பு உண்டாயிற்று.

நான் ஆச்சரியமும், திகைப்பும், பயமும் சேர்ந்த ஒரு நிலையில் அந்த விந்தை மனிதர் ஈசுவரமூர்த்தியின் அருகில் நிதானமாக நடந்து வருவதைப் பார்த்துக் கொண்டிருந்தேன்.

ஈசுவரமூர்த்திக்கு ஒரு கஜ தூரத்தில் அவர் வந்ததும் நின்றார். ''நான் வந்து விட்டேன். என் உடம்பில் உயிர் இருக்கும் வரையில் நீ இந்தமாதிரி துஷ்கிருத்தியங்கள் செய்வதைப் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். எங்கே இருந்தாலும் வந்து விடுவேன். இது ஞாபகமிருக்கட்டும்'' என்றார்.

ஈசுவரமூர்த்தி பதில் பேசவே இல்லை. எனக்கு என் அருகில் சோமையா நின்று கொண்டிருந்தது கூட மறந்து போய் விட்டது. அந்தப் புதிய மனிதரின் பேச்சு என் மனத்தைக் கொள்ளை கொண்டு விட்டது.

ஆனந்தி

புது மனிதர் தொடர்ந்தார்: "கந்த சாமியின் பிள்ளையை இந்தமாதிரி ஏதாவது செய்வாய் என்று நான் எதிர் பார்த்தேன். என்னை ஏமாற்றி ஒரு காரியமும் நீ செய்ய முடியாது" என்று சொல்லும்போது, சோமையா பாய்ந்து முன்னால் சென்றான். சாட்டையை ஓங்கி அந்தப் புதிய மனிதர்மீது வீசினான். நான் கலங்கிப்போய் விட்டேன். ஆனால் என்ன அதிசயம்? அந்த மனிதருக்கு மந்திரம் தெரியும்போலிருக்கிறது. அந்தச் சாட்டைக் கயிறு அவரை நெருங்கியபோது லாகவமாக அதைத் தம் கையால் பிடித்துக் கொண்டார். உடனே அதைக் கையில் ஒரு சுற்றுச் சுற்றிக் கொண்டு ஒரு சுண்டு சுண்டினார். அதில் என்ன தந்திரம் இருந்ததோ? சோமையா ஒரு மூலையில் போய்



விழுந்தான். அந்தச் சாட்டையைச் சரியாகப் பிடித்துக் கொண்டு சோமையாவின் அருகில் ஓடினார் அந்த முகமூடி மனிதர். ஓங்கியும் விட்டார். பிறகு அதை அவன்மீது எறிந்து விட்டு, "உன்னை எதற்கு நான் அடிக்க வேண்டும்? எப்படியாவது நாசமாய்ப் போ" என்று சொல்லி விட்டுத் திரும்பினார்.

அவர் திரும்பியதும் நான் "ஐயோ" என்று கத்தி விட்டேன். சோமையா சாட்டையை எடுத்து மறுபடியும் ஓங்கி விட்டான். படீரென்று சப்தம் கேட்டது. முகமூடி மனிதரின் மீது அடி விழுந்ததோ இல்லையோ தெரியவில்லை. அந்த இடத்திலிருந்த ஒரே ஒரு மங்கலான விளக்கின் வெளிச்சத்தில் ஒன்றும் சரியாகத் தெரியவில்லை. இரண்டுபேரும் அடித்துக் கொண்டார்கள்.

அத்தனை நேரம் நின்று கொண்டேயிருந்த ஈசுவரமூர்த்தி அப்போது இருவரும் சண்டை போட்டுக் கொண்டிருந்த இடத்துக்கு ஓடினார். புதிய மனிதரை அவரும் தாக்கினார். சோமையா தன் கையிலிருந்த சாட்டையை ஓங்க முடியாதபடி முகமூடி மனிதர் அவன் கையை முறுக்கிக் கொண்டிருந்தார். அப்போது ஈசுவர மூர்த்தி அவர் மீது பாயவே, புதிய மனிதர் சோமையாவின் முகத்தை நோக்கி ஓங்கி ஒரு குத்து விட்டார். சோமையா கீழே விழுந்தான்.

இரண்டு பேரும் சற்று நேரம் துவந்த யுத்தம் செய்தார்கள். என் கண்களோ சாட்டையின் மீதே இருந்தது. புதிய மனிதர் ஈசுவரமூர்த்தியையும் கீழே தள்ளி விட்டார். அவர் மீது உட்கார்ந்து கொண்டு தலையைப் பிடித்துத் தரையில் ஒரு தடவை முட்டினார்.

"ரங்கா! அங்கே கிடக்கும் துணியை எடு" என்று உத்தரவு போட்டார் அந்த முகமூடி மனிதர்.

எனக்கு இன்னொரு தடவை தூக்கி வாரிப் போட்டது! 'என் பெயர் இந்த மனிதருக்கு எப்படித் தெரிந்தது?' என்று யோசித்துக் கொண்டே கீழே கிடந்த ஈசுவரமூர்த்தியின் மேல் வேஷ்டியை எடுத்துக் கொடுத்தேன்.

அந்தத் துணியால் ஈசுவரமூர்த்தியின் கைகளைக் கட்டிவிட்டுத் தன் கையிலிருந்த இன்னொரு துணியால் வாயை அழுத்திக் கட்டிவிட்டு எழுந்தார் அந்த முகமூடி மனிதர்.

பிறகு என்னைப் பார்த்து "வா, ரங்கா!" என்று கூறிவிட்டு முற்றத்தில் கிடந்த ஒரு சிறிய பையைத் தம் கையில் எடுத்துக் கொண்டார். அவர் குதித்த போது அதைப் போட்டிருக்கவேண்டும். பிறகு மேஜை மீதிருந்த விளக்கை அணைத்துவிட்டு வாசற்பக்கம் கதவைத் திறந்தார். நாங்கள் இருவரும் வெளியே வந்ததும் தெருவை இரண்டு பக்கமும் திரும்பிப் பார்த்தார். ஒருவரும் கண்களுக்குத் தென்படவில்லை. பிறைச் சந்திரனின் மங்கலான ஒளியில் அந்த இடம் கனவு உலகம் போலிருந்தது.

உடனே அவர் வாசற்கதவைச் சாத்தி நாதாங்கியைப் போட்டார். பிறகு ஒரு விசித்திரமான காரியம் செய்தார். தான் அணிந்துகொண்டிருந்த முகமூடியைக் கழற்றிப் பையில் வைத்து விட்டு, ஒரு மீசையை எடுத்து ஒட்ட வைத்துக் கொண்டார். ஒரு துண்டை எடுத்துத் தலைப்பாகை கட்டிக் கொண்டார். நான் அதை என் கண்களால் பார்த்துக் கொண்டே இருந்திராவிட்டால் என்னைக் காத்தவர் அவர்தான் என்பதை

ஒப்புக்கொண்டிருக்கவே மாட்டேன். அப்படி அவர் தோற்றம் அடியோடு மாறிப் போய் விட்டது.

நான் வியந்து கொண்டு நிற்பதைப் பார்த்துவிட்டு அந்தப் புதிய மனிதர், என் கையைத் தம் வலிய கரத்தால் பிடித்துக் கொண்டார்.

"என்னுடன் வருகிறாயா துரை? பயமாக இல்லையே?" என்று கேட்டார்.

"இல்லை! பயமாகவே இல்லை!" என்றேன்.

"உன்னை எனக்கு அதனால்தான் ரொம்பப் பிடிக்கிறது. நீ ஈசுவரமூர்த்தியிடம் பயமில்லாமல் பேசினாய் பார். அதனால் உன் மீது என் பிள்ளையைப் போல் வாஞ்சை ஏற்படுகிறது. கண்ணாடியை எறிந்தாயே? நன்றாகத் தலையைப் பார்த்து எறிந்திருக்கக் கூடாது? அவன் மண்டையை உடைத்திருக்கலாம். உனக்கு மாங்காய் அடித்து வழக்கமில்லைபோல் இருக்கிறது. நீ நான் சாதுப் பிள்ளை ஆயிற்றே! உனக்கெப்படி இதெல்லாம் தெரியப் போகிறது. ஆனால் நான் நினைத்த மாதிரி அவ்வளவு பயந்தாங் கொள்ளி இல்லை நீ. துணிச்சலான பையன்தான்" என்று சொல்லிக் கொண்டே போனார்.

"உங்களுக்கு என்னைப் பற்றி எப்படித் தெரியும்? நீங்கள் யார்? நான் உங்களைப் பார்த்

தாதே இல்லையே?" என்று இரண்டு மூன்று கேள்விகளை நானும் கேட்டேன்.

நாங்கள் ஈசுவரமூர்த்தியின் வீடு இருந்த தெருவைத் தாண்டிக் கொண்டிருந்தோம். அந்தத் தெருவில் ஈசுவர மூர்த்தியின் வீடுதான் கடைசியில் இருந்தது. அவர் வீட்டுக்கு வலது பக்கத்தில் மாந்தோப்பும், இடது பக்கத்தில் பாழ்மனையும் இருந்தன. பாழ்மனைக்கு அடுத்த வீட்டில் யாரும் இல்லை. எதிரிலும் வீடு கிடையாது. ஆகவே அவர் வீட்டில் என்ன நடந்தாலும் வெளியே தெரிய வழியில்லை.

முகமூடி மனிதர் ...... இல்லை, மீசை மனிதர்–, என் கேள்விக்கு உடனே பதில் சொல்லவில்லை. மௌனமாக நடந்து வந்தார். இன்னொரு தெரு தாண்டும் வரை பேசவில்லை. எனக்கும் மறுபடியும் கேட்கப் பயமாக இருந்தது. இரவு மணி பத்துக்குமேல் இருக்காது. கிராமம் ஆனபடியால் வெளியில் யாருமே நடமாடவில்லை. ஒன்றிரண்டு வண்டிக்காரர்கள் மட்டும் எங்களைத் தாண்டிக் கொண்டு சென்றார்கள்.

எங்கள் வீட்டுக்கு வரும் வழியில் ஒரு இலுப்ப மரத் தோப்பு உண்டு. அந்த இடத்துக்கு வந்ததும் அவர், "தம்பி! இந்தத் தோப்புக்குள்ளே போய் உட்கார்ந்து சற்று நேரம் பேசலாம் வா!" என்று கூப்பிட்டார்.

எனக்கு முதலில் தயக்கமாக இருந்தது. ஆனாலும் அவருடைய குரலில் தொனித்த பரிவின் காரணமாகத் தைரியம் ஏற்பட்டது.

"சரி" என்றேன்.

இருவரும் இலுப்பைத் தோப்புக்குள் புகுந்து சென்று ஒரு மரத்தடியில் போய் உட்கார்ந்தோம்.

அவர் தொண்டையைக் கனைத்துக் கொண்டார். "ரங்கதுரை! நான் யார் என்று கேட்டாய். அதைப் பற்றிப் பின்னால் தெரிந்து கொள்ளலாம். இப்போது உன்னைப் பற்றி எனக்கு எப்படித் தெரியும் என்று கேட்டாயே, அதற்குப் பதில் சொல்லி விடுகிறேன். உன் அப்பா கந்தசாமி உன்னைப் பற்றி என்னிடம் சொல்லியிருக்கிறார்."

"அப்பாவா?"

"ஆமாம் ரங்கா! உன் அப்பாதான். நாங்கள் இருவரும் சிறையில் ஒன்றாக இருந்தோம்."

"அப்படியானால் அப்பா ஏன் உங்களோடு வரவில்லை?"

மறுபடியும் சிறிது நேரம் மௌனமாக இருந்துவிட்டுப் புதிய மனிதர், "ரங்கா! நீ உன் மனத்தைத் திடமாக வைத்துக் கொள். அப்பாவும் நானும் சேர்ந்து தான் புறப்பட்டோம். ஆனால் விதி வேறு விதமாக இருந்து விட்டது. நாங்கள் புறப்பட்ட வேளையோ என்னமோ தெரியவில்லை. அவருக்கு நல்ல அடிபட்டு விட்டது. அவர் பிழைப்பது துர்லபம் என்று எண்ணுகிறேன். இனிமேல் நீ என்னைத்தான் உன் அப்பாவாக நினைத்துக் கொள்ள வேண்டும்" என்றார்.

என் தலையில் பேரிடி விழுந்தது போலிருந்தது. பொங்கிக் கொண்டு வந்த விம்மல்களை என்னால் அடக்க முடியவில்லை. நான் விசித்து விசித்து அழுவதைக் கண்ட அந்தப் புதிய மனிதர், என் கைகள் இரண்டையும் பிடித்துக் கொண்டு, "ரங்கதுரை! நீ ரொம்பத் தைரியசாலி என்று நினைத்தேன். நீ இப்படிக் கோழையைப்போல் அழலாமா? உன்னை விட உலகத்தில் எத்தனையோ பேர் கஷ்டப் பட்டிருக்கிறார்கள். இன்னும் கஷ்டப்படுகிறார்கள். அதை நினைத்துக் கொண்டு திடமாக இருக்க வேண்டும்" என்றார்.

அவருடைய வார்த்தைகளில் என்ன மந்திர சக்தி இருந்ததோ தெரியவில்லை. அல்லது அவருடைய கரத்தில்தான் அந்த சக்தி இருந்ததோ? உடனேயே எனக்கு ஆறுதல் உண்டாயிற்று. என் கண்ணீர் நின்றது.

ஆனால் அம்மா? அவளுடைய நிலை என்ன என்பதை என்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியவில்லை. அப்பா சிறைப்பட்டார் என்பதைக் கேட்ட போதே அப்படித் துடித்துப் போனவள் அவர் துப்பாக்கியால் சுடப்பட்டார் என்பதைக்கேட்டால் என்ன செய்வாள்?

"ஐயோ! நான் அம்மாவிடம் இதை எப்படிச் சொல்லுவேன்?" என்று கூறினேன். மறுபடியும் துயரம் என் தொண்டையை அடைத்தது.

அவர் என்னைத் தேற்றினார். "ரங்கதுரை! நடந்தது நடந்துவிட்டது. உன் அப்பாவும் நானும் இந்த ஏழு மாதங்களாக இணைபிரியாமல் பழகினோம். ஆனால் அவர் அடிபட்டுக் குற்றுயிராகக் கிடக்கும்போது நான் மனத்தைக் கல்லாக்கிக் கொண்டு ஓடிவரும்படி நேர்ந்தது. நானும் அங்கே தயங்கி நின்றிருந்தால் என்னையும் சுட்டுக் கொன்றிருப்பார்கள். உன்னையும் உன் அம்மாவையும் காப்பாற்ற யாருமே இல்லாமல் போயிருந்திருப்பார்கள். கந்தசாமிக்கு உங்களை நான் காப்பாற்றுவதாக வாக்குக் கொடுத்தேன். அதை என்றென்றும் நிறைவேற்றுவேன். இப்போது

5,00,000 கதிர்கள்

# பருத்தி நூல்கள்

நெ. 80 வரை நூல்கள்

## மதுரை மில்ஸ் கம்பெனி லிட்., மதுரை

மில்கள் : மதுரை, தூத்துக்குடி, அம்பாசமுத்திரம்

○●○

கைத்தறி, இயந்திரத் தறி, பின்னல் தறிகளுக்கான
சகலவிதமான நூல்கள்

○●○

விசேஷ ரகங்கள் :

கயிறுகள், விழுதுகள், கித்தான்கள், நாடாக்கள் முதலியவைகளுக்கான
விசேஷ நூல்கள்-தையல் நூல்-முறுக்கேற்றிய திரித்த சரடுகள் முதலியன

○●○

மானேஜர்கள் :

## ஏ. & எப். ஹார்வி லிமிடெட்

பாண்டியன் பில்டிங்

போன் : 420 (4 லைன்) மதுரை தந்தி : "ஹார்வி"

புது டில்லியில் தற்போது நடைபெறும் இந்தியன் இண்டஸ்ட்ரீஸ் பொருட்காட்சியில் எமது ஸ்டால் நெ. M. 4-க்கு தயவு செய்து விஜயம் செய்யுங்கள்.

---

KALI BRAND
STAINLESS STEEL STORES

பிரசித்தி பெற்ற
'காளி பிராண்ட்' எவர் சில்வர் பாத்திரங்கள்
கும்பேஸ்வரர் சன்னதி, கும்பகோணம்.

மலிவான விலையில்
புதிய ரகங்கள்!

உயர்தரம், உறுதி,
உத்தரவாதம் உள்ளது

சாஸ்திர முறையில் எந்த
விக்ரகங்களும்
ஆர்டருக்கு.....
செய்து கொடுக்கப்படும்

தயாரிப்பவர்கள்

## ஸ்ரீ எம். வி. எம். ஸ்டோர்ஸ்,

கும்பேஸ்வரர் சன்னிதி, கும்பகோணம்.

நான் சொல்கிறபடி நீ செய்யவேண்டும். செய்கிறாயா?'' என்று கேட்டார்.

"செய்கிறேன்'' என்றேன்.

"சிறையிலிருந்து இரண்டு நாட்களில் தகவல் வரும். நான் நேற்றிரவு தப்பி வந்தேன். நான் இங்கே வருவேனென்று போலீஸார் எதிர்பார்த்து என்னை இங்கே தேடக்கூடும். ஆகையால் நான் இங்கே இருப்பது ஆபத்து. அதுவும் சகுவரமூர்த்தி வேறு இப்போது தகவல் கொடுத்து விடுவார். பின்னர் வேறு வினையே வேண்டாம். நீ சீக்கிரத்தில் உன் அம்மாவை எப்படியேனும் சென்னை நகரத்துக்குப் போகச் சம்மதிக்க வைத்துவிடு. நான் முதலில் போய் வீடு பார்த்து வைக்கிறேன். உனக்குப் படிப்புக்கும் ஏற்பாடு செய்கிறேன். நீ பள்ளிப் படிப்பு முடித்துக் கல்லூரியில் சேர்ந்து படிக்க வேண்டுமென்று உன் தந்தை விரும்பினர். அதை என்னிடம் அடிக்கடி சொன்னர். அந்தப் பொறுப்பு என்னுடையது. மேலும், நீங்கள் இனிமேல் இங்கே இருந்தால் சகுவரமூர்த்தி சும்மா விடமாட்டான். ஏதாவது தொந்தரவு பண்ணிக் கொண்டே இருப்பான். அப்பாவைப் பற்றிய செய்தி வரும்போது அம்மா கலங்கிவிடாமல் நீதான் பார்த்துக் கொள்ள வேண்டும். இன்னொன்று. உன்னை யாராவது பிடித்து என்னைப் பற்றிக் கேள்வி கேட்டால், சகுவரமூர்த்தியின் வீட்டுக்கு வெளியில் வந்த பிறகு நான் மாந்தோப்பின் வழியாக ஓடி விட்டேன் என்று சொல்லிவிடு. என்னிடம் பேசியதையெல்லாம் பற்றிச் சொல்லி விடாதே. ஞாபகமிருக்கட்டும். அம்மாவிடம் மாத்திரம் சொல்லு.''

"ஆகட்டும்! என்னுடைய தமிழ் வாத்தியாரிடமும் சொல்ல வேண்டும்.''

"ஆமாம்! கந்தசாமி அவரைப் பற்றியும் சொல்லி இருக்கிறார். அவரிடம் சொல்லிக் கூட உன்னுடைய தாயாரைக் கிளம்பச் செய்யலாம்.''

"ஆனல் வாத்தியாரய்யா ரொம்பச் சந்தேகப் பேர்வழி. யாரையும் நம்ப மாட்டார். இதை யெல்லாம் நான் சொன்னல் நம்பவே மாட்டார்.''

"அவரை நம்பச் செய்வது என் பொறுப்பு. அவருடைய விலாசம் சொல்லு. எழுதிக் கொள்கிறேன்'' என்று கூறிக் கொண்டே பையிலிருந்து ஒரு சிறிய புத்தகமும் ஒரு தீப் பெட்டியும் எடுத்தார். நான் ஒரு தீக்குச்சியைக் கிழித்துக் கொண்டே விலாசம் சொன்னேன். அதைக் குறித்துக் கொண்டார். அதன் பிறகு, "சமர்த்தாக இரு, ரங்கதுரை! எதற்கும் கவலைப்படாதே! நான் சொன்னவற்றை எல்லாம் ஞாபகம் வைத்துக் கொள். ஒரு மாதம் ஜாக்கிரதையாக இருங்கள். பிறகு நானே வந்து அழைத்துக் கொண்டு போகிறேன். அதற்குள் எல்லா ஏற்பாடுகளும் செய்து விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு எழுந்து நின்றார்.

"உங்கள் பெயர் என்ன என்பதைச் சொல்லவில்லையே?'' என்றேன்.

"என் பெயர் எதுவாக இருந்தால் என்னப்பா? சமயம் வரும்போது நானே சொல்கிறேன். நீ இப்போது வீட்டுக்குப் போ. நானும் போய்விட்டு வருகிறேன்'' என்று கூறிவிட்டு இலுப்பந் தோப்பின் இருளில் மறைந்து விட்டார் அந்த விந்தை மனிதர். நானும் வீடு நோக்கித் திரும்பினேன்.

நான் வீடு போய்ச் சேர்ந்தபோது வெகு நேரமாகி விட்டது. என் அன்னை வாசற்படியில் உட்கார்ந்து கண்ணீர் வடித்துக் கொண்டிருந்தார். நான் தூரத்தில் வருவதைப் பார்த்த வுடனேயே அவர் ஓடி வந்து என்னைத் தழுவிக் கொண்டார்.

"என் கண்ணு! இத்தனை நேரம் என்னடா செய்தாய்? எப்படி அவனிடமிருந்து தப்பி வந்தாய்?'' என்று கலங்கிய கண்களுடன் கேட்டார்.

"நீ முதலில் உள்ளே வா. சொல்கிறேன்'' என்று கூறிவிட்டு உள்ளே சென்றேன். அவரும் கதவைத் தாழ்ப்பாள் போட்டுக் கொண்டு உள்ளே வந்தார்.

உடனே, "பாவம்! இத்தனை நேரம் கழித்து நீ வீட்டுக்கு வந்திருக்கே. சாப்பாடு போடாமல் நான் பேசிக் கொண்டிருக்கிறேனே!'' என்று சொல்லிக் கொண்டே இலையைப் போட்டார். நானும் அதற்குள் கைகளைக் கழுவிக் கொண்டு வந்தேன். எனக்கும் பசி வயிற்றைக் கிள்ளியது. 'அப்பாவைப் பற்றிய செய்தியை என்ன விதமாக அம்மாவுக்குச் சொல்வது? நான் சொல்லா விட்டாலும் நாளைக்குத் தெரியத்தானே போகிறது?' என்றெல்லாம் மனத்தில் நினைத்துக் கொண்டே சாப்பிட உட்கார்ந்தேன். அம்மா மறுபடியும் என்னைக் கேள்வி கேட்க விடாமல், "என்னைக் காண வில்லையே என்று தேடினாயா?'' என்று கேட்டேன்.

"ஆமாம், ரங்கா! ரொம்பக் கவலையாகப் போய் விட்டது. நீ இந்தமாதிரி காரியம் செய்ய மாட்டாயே. வழக்கமாக வரும் நேரத்தில் வராமல் போகவே பக்கத்து வீட்டுப் பையனை விட்டு

விசாரிக்கச் சொன்னேன். அவன் உன் சிநேகிதன் சுந்தரத்தை இழுத்துக் கொண்டு வந்தான். சுந்தரம்தான் சாயங்காலம் நடந்த கலாட்டாவைப் பற்றியெல்லாம் சொன்னான். நீ கூட ஏன் ரங்கா அவர்களுடன் போய்ச் சேர்ந்து கொண்டாய்?''

"ஏன் அம்மா? நான் எப்போதாவது இந்தமாதிரி நடந்து கொண்டிருக்கிறேனா? மாந்தோப்புக்குப் போய்க் கொண்டிருந்தோம். ஈசுவரமூர்த்தி வந்திருக்கிறார் என்று எனக்குத் தெரிந்



திருந்தால் நான் அந்தப் பக்கம் தலை கூடக் காட்டியிருக்க மாட்டேன்.''

"அது சரி! நீ ஏன் கல்லெடுத்து அடித்தாய்?'' என்று கேட்டார்.

"என்ன? சுந்தரம் நான் கல்லெறிந்தேன் என்று சொன்னானா? எவ்வளவு துணிச்சலாகப் பொய் சொல்கிறான்? அவன்தான் அம்மா இன்று நடந்த சண்டைக்கே காரணம். அந்த மீசைக்காரச் சோமையாவைப் பார்த்து இவன் பரிகாசமாகச் சிரித்திருக்கா விட்டால் இந்த ரகளை ஏற்பட்டே இருக்காது.''

"அவன் என்னிடம் அப்படிச் சொல்லவில்லையே!''

"அம்மா! அவன் சொன்னதெல்லாம் பொய். நான் நடந்தபடி சொல்கிறேன்'' என்று கூறிவிட்டு அன்று நடந்தவற்றையெல்லாம் விவரமாகக் கூறினேன். வாய் சொல்லிக் கொண்டிருந்ததே தவிர மனம் அப்பாவின் விஷயத்தை எப்படிச் சொல்வது என்பதிலேயே லயித்துப் போயிருந்தது. ஒருவாறு என்னை அறையில் தள்ளிப் பூட்டியது வரையில் சொல்லி முடித்து விட்டேன். பிறகு எழுந்து போய்க் கையைக் கழுவிக் கொண்டு வந்தேன்.

"இப்படியா நடந்தது? அந்தப் பிள்ளை தான் ஒரு தவறும் செய்யாத மாதிரி பேசினானே. அவன் உன் மீது பழியைப் போட்ட போது நான் கொஞ்சம் நம்பி விட்டேன், ரங்கா. அப்பாவின் ஞாபகத்தினால் நீ அவர் வீட்டில் கல்லெறிந்து விட்டாயோ என்று நினைத்தேன்'' என்று கூறினார்.

'அப்பா' என்று அவர் கூறியதும் என் உடம்பு முழுதும் பதட்டம் ஏற்பட்டு விட்டது.

"அம்மா!'' என்று விம்மி விம்மி அழுது விட்டேன்.

அவருக்கு ஒன்றும் புரியவில்லை. பிறகு, "ஏன் ரங்கா! உன்னைப் பற்றிச் சுந்தரம் சொன்னதை நம்பி விட்டேனே என்றா அழுகிறாய்? இதற்கு அழலாமா? இப்போதுதான் உண்மை தெரிந்து விட்டதே!'' என்றார்.

நான் பிறகு கண்ணைத் துடைத்துக் கொண்டு மீதி விவரங்களையும் கூறினேன். முற்றத்தில் புதிய மனிதர் ஒருவர் குதித்தது, அவர் என்னைக் காப்பாற்றியது, இலுப்பமரத் தோப்பு வரை கொண்டு வந்து விட்டது எல்லாம் சொன்னேன்.

"அந்தப் புண்ணியாத்மா வெகு காலம் நன்றாக இருக்க வேண்டும். அவர் யார் ரங்கா?''

"நானும் அவரிடம் கேட்டேன், அம்மா! அவர் சொல்லவில்லை. ஆனால் இன்னொரு விஷயம் சொன்னார்.''

"என்ன விஷயம்?''

"அப்பாவும் அவரும் இந்த ஏழு மாத காலமாக ஒன்றாகப் பழகி ரொம்பச் சிநேகமாக இருந்தார்களாம். அப்பா என்னைப் பற்றிச் சொல்லியிருந்தபடியால்தான் என்னை அவர் தகுந்த சமயத்தில் வந்து காப்பாற்றுவதற்கு முடிந்ததாம்'' என்றேன்.

என் அன்னை கண்களில் பெருகிய நீரைத் துடைத்துக் கொண்டார்.

அதற்கு மேல் எனக்குச் சொல்ல எப்படி மனம் வரும்? இருந்தாலும்,

குடும்பத்தில்
எல்லோரும் விரும்புவது...

Glaxo

கிளாக்ஸோ பிஸ்கோத்துகள்

சிறந்த பிஸ்கோத்துகள்
பிரிட்டானியா





'சொல்லத் தானே வேண்டும்' என்று மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, "அப்பாவும் அவரும் சேர்ந்துதான் புறப்பட்டார்களாம் அம்மா! அப்போது அவருக்குத் துப்பாக்கிக் காயம் பட்டு விட்டதாம்" என்று கூறினேன்.

"என்ன? என்ன சொன்னாய்?"

"அம்மா! அப்பாவுக்கு அடிபட்டு விட்டதென்று அந்தப் புதிய மனிதர் கூறினார். கவலைப்படவேண்டாமென்றும் சொன்னார்" என்று துக்கம் நெஞ்சை அடைக்க, திக்கித் திணறி ஒருவாறு கூறி விட்டேன்.

என் அன்னை அன்று துடித்த துடிப்பை என்னால் விவரிக்க முடியாது. "துரை! எனக்குப் பயமாக இருக்கிறதே. துப்பாக்கியால் சுட்டு விட்டவர்கள் பிழைத்து எழுந்திருக்க முடியுமா? ஐயோ! அவர் சிறையிலாவது இருந்திருக்கக் கூடாதா? தப்பி வருவதற்கு ஏன் முயற்சிக்க வேண்டும்?" என்று கதறி அழுதார்.

நான் அவரைச் சாந்தப்படுத்த முயன்றேன். சிறையிலிருந்து தகவல் ஏதேனும் வரும் வரை இதை முழுதும் நம்புவதற்கில்லை என்றும், நமக்கு முன் கூட்டியே தகவல் தெரிந்து விட்டதென்று வெளியில் தெரிந்தால் எல்லோருக்கும் சந்தேகம் ஏற்படும் என்றும், ஈசுவரமூர்த்தி இதைச் சாட்சியாக வைத்துக் கொண்டு என்னையும் சங்கடத்தில் மாட்டி வைப்பாரென்றும் கூறினேன். அதன் பிறகு அவர் அதிகமாகத் தன் உள்ளத்தை அரித்துத் தின்ற சந்தேகத்தை வெளியே காட்டிக் கொள்ளவில்லை. எனக்கு ஏதும் நேர்ந்து விடக் கூடாதே என்ற அளவற்ற பயத்தினால் அவர் தம்முடைய தாங்க முடியாத துயரத்தைக்கூட வெளியே காட்டிக் கொள்ள வில்லை.

மறு நாள் காலைபொழுது புலர்ந்ததும் வாத்தியாரய்யா வீட்டுக்குச் சென்று நடந்த விவரங்களையெல்லாம் மூச்சு விடாமல் சொல்லி முடித்தேன்.

அதைக் கூறும்போதே அவர் கண்கள் நன்றாகக் கலங்கி விட்டன.

நானும் கண் கலங்குவதைப் பார்த்து விட்டு, "உனக்குத் தைரியம் சொல்ல வேண்டியவனான நான் உன்னைக் கலங்க வைக்கிறேன். உன்னைச் சாட்டையடியிலிருந்து காப்பாற்றியவர் தம் பெயரைச் சொல்ல வில்லையா?" என்றார்.

"இல்லை. நான் கேட்டும் அவர் சொல்ல வில்லை."

"அந்த மனிதர் வேறு ஏதும் சொல்ல வில்லையா? சிறையிலிருந்து தப்பி வந்தவர்களைச் சீக்கிரம் நம்பிவிடக் கூடாது."

"இவரைப் பார்த்தால் ரொம்ப நல்ல மனிதரென்று தோன்றிற்று ஸார். அவர் என்னை எதற்காக அடி வாங்குவதிலிருந்து காப்பாற்ற வேண்டும்? அப்படிப் பார்த்தால் என் தந்தையும் ஒரு சிறைக் கைதிதானே?" என்றேன். அந்த முகமூடி மனிதரிடம் எனக்கு என்ன காரணத்தாலோ ஒரு தனிப் பிரியம் ஏற்பட்டு விட்டது.

வாத்தியாரய்யா பதில் சொல்லவில்லை. நானே மறுபடியும், "அவர் என்னிடம் ரொம்பப் பிரியமாகப் பேசினார் ஸார். அவரை என்னால் ஒரு தப்பி வந்த கைதி என்று நினைக்க முடியவில்லை. அப்பாவைப் போலவே அவரையும் அபாண்டமான பழி சுமத்திச் சிறைக்கு அனுப்பியிருக்கக் கூடும் அல்லவா? ஒரு வேளை ஈசுவர மூர்த்தியே செய்திருக்கலாம். ஈசுவரமூர்த்தியிடத்தில் அவர் பேசிய விதத்தைப் பார்த்தால் அப்படித்தான் தோன்றிற்று" என்றேன்.

"ஏன் துரை? ஈசுவர மூர்த்தியின் விரோதிகள் எல்லாரும் நல்லவர்கள் என்று சொல்லிவிட முடியுமா? அவனுக்கு நல்லவர்களும் விரோதிகளாக இருக்கலாம். துஷ்டர்களும் இருக்கலாம். இவர் மிக நல்லவராகவே இருக்கலாம். ஆனால் முகமூடி போட்டுக் கொண்டும், வேஷத்தை மாற்றிக் கொண்டும் இருப்பவர்கள் ரொம்ப நல்லவர்களாக இருக்க முடியாது என்று எனக்குத் தோன்றுகிறது. அது போனால் போகட்டும். இந்த ஈசுவர மூர்த்தியினால் உனக்கு மறுபடியும் ஒரு சங்கடமும் வராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். இப்போது வைஷம்யம் மிகவும் அதிகமாகி இருக்கும்."

"ஆமாம் ஸார்! நேற்று நடந்ததை நினைத்தாலே கதி கலங்குகிறது. அந்தச் சோமையாவையும், சாட்டையையும் நினைத்தாலே பயமாக இருக்கிறது. அவன் அடிக்க வந்த சமயத்தில் கடிதம் எழுதிக் கொடுத்து விடலாமென்றே தீர்மானித்து விட்டேன் ஸார். அந்த மனிதர் வந்து காப்பாற்றி யிருக்காவிட்டால் உங்களை நான் மறுபடியும் பார்த்தே இருக்க மாட்டேன். அம்மா எங்கள் இருவரையும் ஒரே சமயத்தில் இழந்திருப்பாள்."

"எப்பேர்ப்பட்ட நிலைமையிலிருந்து நீ தப்பினாய் ரங்கதுரை? நினைத்தாலே வியப்பாக இருக்கிறது. இந்தக் கந்தசாமியின் கதியும் இப்படி ஆகியிருக்க வேண்டாம். தப்பி வருவதற்கு முயற்சிப்பானேன்? பேசாமல் சிறையிலாவது இருந்திருக்கக் கூடாதா?" என்று அவர் வருத்தப்பட்டார்.

(தொடரும்)

## இந்த நவீன ஔஷதம் ஜலதோஷத்தை 2 வழிகளில் எதிர்த்துப் போராடுகிறது!



உங்களுடைய குழந்தை படுக்கப் போகும் சமயத்தில் நீங்கள் அதனுடைய மார்பின்மேலும் தொண்டையின்மேலும் விக்ஸ் வேபோரப்பைத் தடவிவிட்டீர்களேயானால், அது இரு வழிகளில் நிவாரணம் பெறுகிறது! மூச்சு விடுவதை லகுவாக்குவதன் பொருட்டும், இருமலை நிறுத்துவதன் பொருட்டும், உங்களுடைய குழந்தை இந்த மனோரம்மியமான தைலத்திலிருந்து கிளம்பும் ஆவிகளைச் சுவாசிக்கிறது. அதே சமயத்தில் வேபோரப் சருமத்தின் வழியாக உட்சென்று வேலை செய்து, மார்பினுள்ள அடைசலையும் வலியையும் அகற்றுகிறது. இந்த இரு-வித வேலை ஜலதோஷத்தை அநேகமாக ஒரே இரவில் அகற்றுகிறது!




# விக்ஸ்
வேபோர்ப்




'விக்ஸ்வேப்போரப்' ஒரு டிரேட் மார்க்.

NAS 104



உங்கள் வீட்டிலுள்ள செம்பு, பித்தளையிலும் செய்யப்பட்ட ஒவ்வொரு சாமானையும் சுத்தமாகவும் தகுந்த பளபளப்புடனும் வைத்திருப்பது அவசியம். இந்தப் பளபளப்புதான் அவைகளின் அழகை அதிகப்படுத்துகிறது. அவைகளுக்கு இந்த பிராஸோ பாலிஷினால் பளபளப்பை, மிகச் செலவில்லாமலும் சுலபமாகவும், விரைவாகவும் நீங்கள் அளிக்க முடியும். உங்கள் வீட்டில் இருக்கும் நிகரற்ற பிராஸோ பளபளப்பைக் கண்டு நீங்கள் பெருமைப்படுவீர்கள்

# பிராஸோ
மெட்டல் பாலிஷ்




திரவம் அல்லது பேஸ்ட்




## 21. அதோ பார்!

“அவசரமான வேலை. உடனே கிளம்பு” என்று ஆனந்தன் சொன்னதும், “அப்படியென்றால், நான் சாப்பிட வேண்டாமா? இன்னும் நான் பல்கூடத் துலக்கவில்லையே!” என்று கூறினான் குண்டுமணி.

சற்று நேரத்தில் இருவரும் கிளம்பினார்கள். நேராக அருகிலேயிருந்த ஒரு பெரிய ஹோட்டலுக்குச் சென்றார்கள். அங்கே குண்டுமணி வயிறு முட்ட இட்லி, வடை, தோசை, போண்டா, பஜ்ஜி இன்னும் என்னென்னவோ சாப்பிட்டான்.

குண்டுமணி சாப்பிட்டுக்கொண்டிருக்கும்போதே ஆனந்தன் ரமணியைப் பற்றிக் கூறி விட்டு, அவனை எப்படியாவது தேடிக் கண்டுபிடிக்க வேண்டுமென்றான். சாப்பிட்டானதும் “குண்டுமணி, இனி நாம் கிளம்பலாமா? இப்போது எந்தப் பக்கம் போய்த் தேடினால், அவன் அகப்படுவான்?” என்று கேட்டான் ஆனந்தன்.

“தேடுவதா! யாரை? உங்கள் வீட்டில் வேலைக்கு இருந்தானே சுப்புக்குட்டி, அவனைத்தானே? மேலப்புலிவார் ரோட்டுப் பக்கம் போனால்...” என்று பதில் சொல்ல ஆரம்பித்தான் குண்டுமணி.

“அட ராமா! ஹோட்டலிலே எவ்வளவு விவரமாகச் சொன்னேன்! சாப்பாட்டிலே குறியாயிருந்துவிட்டுச் சுப்புக்குட்டியா, அப்புக் குட்டியா என்று கேட்கிறாயே! சரி, போகட்டும். இப்போதாவது கவனமாகக் கேள். நாம் இருவரும் ரமணி என்ற பையனைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டும். அவன் என்னுடைய உயரம்தான் இருப்பான். நிறமும் என் நிறம்தான். இந்த ஊருக்குப் புதிதாக வந்திருக்கிறான். எப்படியாவது அவனைத் தேடிக் கண்டுபிடித்து விட்டால், பட்டணத்திலேயிருக்கிற என் மாமா ரொம்ப ரொம்ப சந்தோஷப் படுவார். நமக்கும் நிறையப் பரிசுகள் கொடுப்பார்” என்றான் ரமணி.

“அடடே! அப்படியானால், எனக்கும் நிறையப் பரிசு கிடைக்கும். சரி, உடனே கிளம்பு. அவனைக் கண்டு பிடிக்காதவரை நான் உண்ணமாட்டேன்; உறங்கமாட்டேன்.—இது சத்...”

“டேய்! டேய்! என்னடா உளறுகிறாய்? ஒருவேளை உன்னால் பட்டினி கிடக்க முடியுமா? ஒரு நாள் உன்னால் தூங்காமல் இருக்க முடியுமா?”

“ஓஹோ! அந்தச் சினிமாவில் கேட்ட வசனத்தை அப்படியே சொல்லி விட்டேன் போலிருக்கிறது! சரி, இனிமேல் சினிமா வசனம் வேண்டாம். இதோ என் சொந்த வசனத்திலே கூறுகிறேன். ஆனந்தா, எப்படியும் நாம் அவனைத் தேடிக் கண்டுபிடித்து விடவேண்டும்” என்று ஆனந்தனிடம் உற்சாகமாகக் கூறினான் குண்டுமணி.

ஆனந்தனும், குண்டுமணியும் எப்போதுமே ஊர் சுற்றிகள்தான். அத

**கல்கி மொழி**

யௌவனப் பிராயத்தில் உண்மையாக உள்ளம் ஒன்றுபட்ட ஒரு நண்பன் கிடைத்தால் அதைக் காட்டிலும் ஒருவனைப் பரவசப்படுத்தக் கூடியது வேறு என்ன உண்டு? ஆம்; காதல் என்பது ஒன்று இருக்கத்தான் இருக்கிறது. ஆனால் காதலில் இன்பமும் குதூகலமும் எத்தனை உண்டோ அதைவிட அதிகமான துன்பமும் வேதனையும் உண்டு. யௌவனத்துச் சிநேகக் குதூகலத்திலோ துன்பத்தின் நிழல் கூட விழுவதில்லை. ஒரே ஆனந்த மயமான இதய பரவசந்தான்.

பொன்னியின் செல்வன்

னால், அவர்களுக்குத் திருச்சியும் சுற்றுப் புறங்களும் நன்றாகத் தெரியும். அது மட்டுமா? திருச்சியிலுள்ள பையன்களையும் அநேகமாகத் தெரிந்து வைத்திருந்தார்கள். இதனால், புதுப் பையனான ரமணியைக் கண்டு பிடிப்பது வெகு சுலபம்தான் என்று அவர்கள் நினைத்தார்கள்.

திருச்சியில் அவர்கள் சுற்றாத இடமில்லை; தேடாத தெருவில்லை; நுழையாத கோயில் இல்லை. தெருவிலே போவோர் வருவோரையெல்லாம் பைனாகுலர் வைத்துப் பார்க்க ஆரம்பித்து விட்டார்கள்! எதிரிலே—அருகிலே நிற்பவர்களைப் பார்ப்பதற்குக் கூட பைனாகுலரை உபயோகித்தார்கள். மாற்றி மாற்றி இருவரும் இப்படிச் செய்வதைச் சிலர் வேடிக்கையாகப் பார்த்தார்கள். சிலர், 'பையன்கள் இப்போதுதான் பைனாகுலர் வாங்கியிருக்கிறார்கள் போலிருக்கிறது!' என்று கேலி செய்தார்கள். இன்னும் சிலர், 'சுத்தப் பைத்தியங்கள்' என்று அவர்களைக் கிண்டல் செய்தார்கள்.

இரண்டு நாட்களாகக் கால் வலிக்கத் தேடியும், ரமணியைக் கண்டு பிடிக்க முடியவில்லை! இதற்குள் ஆனந்தன் சேர்த்து வைத்திருந்த பணத்தில் பாதியைக் காலி செய்து விட்டான் குண்டுமணி! அடிக்கடி பலகாரமும், காப்பியும், ஷர்பத்தும், பழமும் வாங்கி வாங்கிச் சாப்பிட்டால்—அதுவும் குண்டுமணி சாப்பிட்டுக் கொண்டேயிருந்தால், பணம் காலியாகாமல் பெருகிக் கொண்டு இருக்குமா என்ன?

மூன்றாவது நாள் காலை நேரம். ஆனந்தனும் குண்டுமணியும் திருச்சியிலுள்ள சைனா பஜார் வழியாகச் சென்று கொண்டிருந்தார்கள். மலைக் கோட்டை வாசலின் அருகே வந்ததும், "டேய் குண்டுமணி, எனக்கு ஒரு யோசனை தோன்றுகிறது. அதன்படி செய்தால் என்ன?" என்று ஆரம்பித்தான் ஆனந்தன்.

"யோசனையா? உம், உம். சொல்லு, சொல்லு" என்றான் குண்டுமணி.

"மலைக் கோட்டை வாசலில் இருக்கிறதே, அந்தப் பிள்ளையாருக்கு ஒரு தேங்காய் வாங்கி உடைத்தால், நிச்சயம் ரமணி கிடைத்துவிடுவான். வா, அந்தக் கடையிலே தேங்காய் வாங்கலாம்" என்று கூறிக் கொண்டே மலைக்கோட்டை வாசலில் இருந்த ஒரு கடையை நோக்கிச் சென்றான் ஆனந்தன். குண்டுமணியும் அவனைப் பின் தொடர்ந்தான்.

"இந்தத் தேங்காய் என்ன விலை?" என்று ஒரு தேங்காயை எடுத்துக் கடைக்காரரிடம் காட்டிக் கேட்டான் ஆனந்தன்.

அதே சமயம் குண்டுமணி, "ஆனந்தா, ஆனந்தா! அதோ பார்! ஒரு பையன் பிள்ளையாரைக் கும்பிட்டுக் கொண்டிருக்கிறான். ஒருவேளை அவன்தான்......" என்று இழுத்தான். உடனே ஆனந்தன் திரும்பினான். மலைக் கோட்டைக்கு ஏறிச் செல்லும் வழியிலுள்ள மாணிக்க விநாயகர் கோயில் பக்கம் பார்த்தான். சும்மா பார்க்கவில்லை; பைனாகுலரைக் கண்களில் வைத்துப் பார்த்தான். உடனே, "குண்டுமணி! உயரம், நிறம் எல்லாம் என்னைப் போலவேதான். ஊருக்கும் புதிதாயிருக்கிறான். அவன் ரமணியாகத்தான் இருக்க வேண்டும். வா, உடனே போவோம். அவனைக் கேட்டுப் பார்ப்போம்" என்று பரபரப்போடு சொன்னான் ஆனந்தன்.

குண்டுமணியும் பைனாகுலரை வாங்கி, அதன் உதவியால் அந்தப் பையனைக் கூர்ந்து பார்த்தான். பார்த்து விட்டு, "இருக்கும், இருக்கும். ரமணியாகத்தான் இருக்கும். ஆனாலும், நாம் உடனே அவனிடம் போய்க் கேட்கக் கூடாது. அவன் எங்கே போகிறான், என்ன செய்கிறான் என்று மெதுவாய்க் கவனிக்க வேண்டும்" என்றான்.

இப்படி அவர்கள் பேசிக் கொண்டிருக்கும் போதே, அந்தப் பையன் படிகளில் ஏறி மேலே போக ஆரம்பித்து விட்டான்.

(தொடரும்)



கலையை வளர்த்துக் காத்த பல்லவர்கள் காலத்தில் கலையையே தன் வாழ்க்கையாகக் கொண்டு வாழ்ந்தாள் ஆயனச் சிற்பியின் மகள் சிவகாமி. அவள் செய்த வீர சபதத்தைப் பின்னணியாகக் கொண்டு கல்கி அவர்கள் புனைந்த சரித்திரக் கற்பனை "சிவகாமியின் சபதம்". இந்தக் கதையில் வரும் கதாநாயகியையும், பல்லவர்கள் வளர்த்த சிற்பக் கலையையும் இந்தப் பக்கத்தில் காணலாம்.





# மயில் விழி மான்

பேராசிரியர் திரு ரா. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் தம் வாழ்நாளில் கடைசியாக எழுதிய ''மயில்விழி மான்'' என்ற சிறுகதையில் வரும் கதாபாத்திரங்கள்



மணியம்

# மதிப்பில் முதன்மையானது

**ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சை 'கோலினாஸ்'**
**. . . ஏனெனில் அது உங்கள் பற்களை சுத்தம்**
**செய்வது தவிர, மேற்கொண்டும் உதவுகிறது!**

நீங்கள் உபயோகிக்கும் டூத்பேஸ்டு பற்களை பளபளப்பாக்குவதுடன் நிற்காமல், மேற்கொண்டும் உதவக்கூடியதாக இருக்க வேண்டும். இதோ தற்கால விஞ்ஞானம் உங்களுக்கு அத்தகைய டூத்பேஸ்டு ஒன்று வழங்குகிறது—அதுவும் அதிகப்படி செலவு ஏதுமின்றி! ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த பச்சைக் 'கோலினாஸ்' உங்கள் பற்களை வெண்மையாக்குவதுடன், பல் சிதைவிற்குக் காரணமான கிருமிகளை ஒழித்து, ஈறுகளை திடமாகவும் ஆரோக்கியமாகவும் வைத்திருக்கிறது. இதன் இரகசியம் அற்புதமான 'கோலினாஸ்' நுரையில்தான் அடங்கியுள்ளது. அது ஆக்டிவ் க்ளோரோபிலை வாயின் ஒவ்வொரு மூலை முடுக்கிற்கும் எடுத்துச் செல்கிறது. உங்கள் சுவாசம் மணிக்கணக்கில் புதுமணத்துடன் விளங்குகிறது.

**'கோலினாஸ்' அதிக நாள் வருகிறது** ஈரமில்லாத பிரஷில் அரை அங்குல அளவே தேவை. ஆதலால்தான் ஆக்டிவ் க்ளோரோபில் சேர்ந்த 'கோலினாஸ்' எவ்வளவோ அதிக மதிப்புடையதாக விளங்குகிறது! இன்றே இந்த பச்சை டூத்பேஸ்டை உபயோகிக்கத் தொடங்குங்கள்.






CK. 1160




டி. எஸ். கே.

ஸம சீதோஷ்ண அறையில், சுழலும் நாற்காலியில் கம்பீரமாக அமர்ந்திருந்த திருவாளர் திருஞானத்தின் எதிரே கிடந்த பெரிய மேஜை மேல், அன்றைய தினம் வந்த கடிதக் குன்றும், அவருடைய கையெழுத்துக்காக ஏங்கித் தவம் புரியும் 'பைல்' மலைகளும் காட்சியளித்தன.

ஒவ்வொரு கடிதமாகப் பார்த்துத் தன் சுருக்கெழுத்தாளரிடம் பதில் சொல்லிக் கொண்டே வந்தார். கடிதங்களுக்கு மத்தியில் நீல நிறக் கவர் ஒன்று காட்சியளித்தது. அதைக் கண்டதும் அவர் முகம் மலர்ந்தது. உறையைக் கிழித்து உற்சாகத்துடன் கடிதத்தைப் படிக்கத் தொடங்கிய அவர், "சுந்தரேசன், நீர் போகலாம். வேண்டும்போது கூப்பிடுகிறேன்" என்று கூறிவிட்டு மறுபடியும் கடிதத்தில் ஆழ்ந்து விட்டார்.

அவருடைய மனைவி எழுதிய கடிதம் அது. பிறந்த வீட்டுக்கு அவள் சென்று ஒரு மாதம் ஆகப்போகிறது. அதற்குள் பத்துப் பன்னிரண்டு கடிதங்களுக்கு மேல் எழுதிவிட்டாள்!

திருஞானம் தமக்குள் சிரித்துக் கொண்டார். செண்பகத்துக்குத் தான் அவரிடம் எவ்வளவு அன்பு! அளவில்லாத அந்த அன்பை எப்படித் தான் அப்படி வார்த்தைகளில் புகுத்தி அனுப்பி வைக்கிறாளோ!

அவளுக்குப் பதில் எழுதும் முறையில் இதுவரை இரண்டு அல்லது மூன்று கடிதங்கள் தான் அவர் எழுதியிருப்பார். அதுவும், மிகுந்த பிரயாசையுடன் தான் எழுதினார். கடிதம் எழுத அவருக்கு ஓய்வு கிடைத்தால்தானே! கையெழுத்துப் போடப் போட வளர்ந்து கொண்டே போகும் 'பைல்' கட்டுகள், பதில் எழுத எழுத வற்றாமல் சுரந்து கொண்டே இருக்கும் கடிதங்கள், 'டிரிங்...டிரிங்...' என்று ஓயாது மணி அடித்துக் கொண்டே இருக்கும் டெலிபோன்கள், வெளியூர் அழைப்புகள், மணி தவறாது வந்தடையும் தந்திச் செய்திகள், பெரிய மனிதர்களின் பேட்டிகள், அலுவல் சம்பந்தமான சர்ச்சைகள், சிப்பந்திகளுக்கு லீவு, சீக்கு, சம்பளம்......

அப்பப்பா, தொல்லை! ஏகத் தொல்லை!

கடிதத்தில் இன்னொரு முறை கண்ணோட்டத்தைச் செலுத்தினார், திருஞானம். சில வரிகள் நெஞ்சில் புகுந்து கிளுகிளுத்தன.

"உங்களை விட்டுப் பிரிந்திருப்பது மிகவும் கஷ்டமாக இருக்கிறது. சில சமயங்களில் நினைத்துப் பார்த்தால், இறக்கை கட்டிக் கொண்டு உங்களிடம் பறந்து சென்று விட மாட்டோமா என்று கூடத் தோன்றுகிறது. நீங்களானால், அங்கே குஷாலாக இருக்கிறீர்கள்! 'செண்பகம் என்று ஒருத்தி இருக்கிறாள்' என்பதைக் கூட இன்னும் சில நாட்களில் மறந்து விடுவீர்களோ என்னவோ!"

திருஞானம் தமக்குள்ளே வருத்தப்பட்டுக் கொண்டார். அவளுடைய குற்றச்சாட்டு ஒரு விதத்தில் உண்மைதான். எவ்வளவு ஆர்வத்தோடு செண்பகம் கடிதம் எழுதுகிறாள்! ஆனால், நான்கு வரிகள் கிறுக்கிப் போடுவதற்குக் கூட அவருக்கு நேரம் இல்லையே!

"செண்பகம், நீ ஊருக்குப் புறப்படுவதற்காகப் பெட்டி, படுக்கைகள் தயார் செய்தாயல்லவா? அவைகளைச் சற்று நன்றாகத் தேடிப் பார். நீ சென்ற பின் இங்கே ஒரு பொருளைக் காண வில்லை. கட்டாயம் நீதான் எடுத்துச் சென்றிருக்கிறாய்!

"என்ன நகைக்கிறாய், செண்பகம்! உண்மையைச் சொல். இங்கேயிருந்து என்னுடைய இன்பத்தை யெல்லாம் நீ சூறையாடிச் செல்லவில்லையா?"—இந்தப் பாணியில் பதில் எழுத வேண்டும் என்று திருஞானம் எண்ணினார்.

"டிரிங்...டிரிங்...டிரிங்...டிரிங்."

டெலிபோன் மணியோசை, திருஞானத்தின் சிந்தனைத் தொடரை அறுத்தது. போனைக் கையில் எடுத்தார்.

வியாபார விஷயமாக ஒரு பழைய வாடிக்கைக்காரர் ஏதோ கேட்டார். பத்து நிமிஷத்துக்குப் பிறகு சம்பாஷணை முடிந்து டெலிபோனை வைத்த போது, அக்கவுண்டெண்ட் அழகிரிசாமி, "குட்மார்னிங், ஸார்" என்று கூறிக் கொண்டே உள்ளே நுழைந்தார்.

அழகிரிசாமியின் சந்தேகங்களுக்குப் பதில் கூறி விட்டு மேஜை மேல் கண்ணோட்டத்தைச் செலுத்தினார். செண்பகத்தின் கடிதம் கண்களைத் தாக்கியது.

திடீரென்று ஒரு எண்ணம். அப்போதே ஒரு கடிதம் எழுதிப் போட்டு விட்டால் என்ன! பாவம், எவ்வளவு ஆதங்கத்துடன் அவள் கடிதம் எழுதி யிருக்கிறாள்!

செண்பகத்தின் கடிதத்தில் எதையோ தேடி அவர் மனம் பரபரத்தது.

"உங்களுடைய கையெழுத்தை அடிக்கடி காணும் பாக்கியம் பெற்ற உங்கள் அலுவலகக் குமாஸ்தாக்களைக் கண்டு நான் ரொம்பவும் பொறாமைப்படுகிறேன்..."

செண்பகம் படித்த பெண். கதைப் புத்தகங்களைப் படிப்பதில் சிறிதும் அலுப்பே கொள்ளாதவள். அவளுடைய கடிதத்தில் சுவை இல்லாமற் போகுமா!

திருமணமான நாளிலிருந்து ஏறக்குறைய ஒரு மாதத்துக்கு முன்பு வரை அவர்கள் பிரிந்திருந்ததே இல்லை. சாதாரண சமயமாக இருந்தால் இப்போதும் அவளைப் பிரிந்திருக்க மாட்டார் அவர். ஆனால் பிரிந்திருக்க வேண்டிய அவசியம் ஏற்பட்ட பின் என்ன செய்வது! திருஞானத்தின் முகத்தில் புன்முறுவல் தானாகத் தோன்றி மறைந்தது.

இன்னும் இரண்டு மூன்று மாதங்களுக்குப் பின் செண்பகம் திரும்பி வரும் போது தனியாக வர மாட்டாள். கையில் ஒரு மணிப் பயலுடன்......!

டிராயரைத் திறந்து, 'கடிதத் தலைப்பை' எடுத்தார் அவர். இந்த நிலையில் இருக்கும் செண்பகத்துக்கு மன வருத்தம் ஏற்படும்படியாக நாம் நடந்து கொள்ளக் கூடாது என்ற



திடமான எண்ணம் அவருக்கு ஏற்பட்டது. உடனே அவரது பேனா காகிதத்தில் ஓடியது.

"அன்புள்ள செண்பகத்துக்கு,

உன் கடிதம் கிடைத்தது. ஆனால்..."

இப்படி எழுத ஆரம்பித்தார் அவர். அதற்குள் அறையின் 'ஸ்பிரிங்' கதவு கிறீச்சிட்டது. விற்பனைப் பிரிவின் மானேஜர் மாத்ருபூதம் உள்ளே நுழைந்தார்! இந்தச் சமயத்திலா அவர் வர வேண்டும்! அவர் வந்த வேலையைப் பார்த்துக் கொண்டு வெளியே சென்றதும் திருஞானம் மேலே எழுதலானார்.

"உன் கடிதம் கிடைத்தது. ஆனால் நேரம் கிடைக்காததால்தான் அடிக்கடி பதில் போட முடியவில்லை. நானும் எப்போதும் உன் நினைவாகவேதான்......"

"கிறீச்!" திருஞானம் தலை நிமிர்ந்தார். எதிரே, வருமான வரி அதிகாரி!

அவரை வரவேற்று அவருக்கு வேண்டிய கணக்குப் புத்தகங்களைக் காட்டி, அவருக்கு விடை கொடுத்து அனுப்பியபோது மணி பன்னிரண்டுக்கு மேலாகி விட்டது!

காலையிலிருந்து 'பைல்'களைப் பார்க்காததால் கட்டுகள் அதிகமாகிக் கொண்டேயிருந்தன. மனைவிக்கு எழுதத் தொடங்கியிருந்த கடிதத்தை அப்படியே டிராயரில் போட்டு விட்டு, 'பைல்'களைப் படிக்கத் தொடங்கினார். இடையிடையே டெலிபோன் சம்பாஷணைகள், தந்திகளுக்குப் பதில், நேரில் காண வந்தவர்களுக்குப் பேட்டி— இப்படி பலப் பல!

கடிகாரம் ஐந்து முறை அடித்து அடங்கியது. அவர் தன் மனைவி செண்பகத்துக்கு எழுதத் தொடங்கிய கடிதத்தில் ஒரு வரிகூட அதிகமாகியிருக்கவில்லை!

குமாஸ்தாக்கள் ஒவ்வொருவராகப் புறப்படத் தொடங்கினர். மதுரையில் உள்ள ஒருவருக்கு எழுத வேண்டிய அவசரமான கடிதம் ஒன்று மீதமிருப்பது திருஞானத்தின் ஞாபகத்துக்கு வந்தது. சுந்தரேசன் போய்விடப் போகிறானே என்று அவனை அழைக்க மேஜைமேல் இருந்த மணியை இருமுறை ஓங்கித் தட்டினார்.

சுந்தரேசன் வரவில்லை. ஆனால் முன் அறையில் அவன் 'டைப்' அடித்துக் கொண்டிருந்த சப்தம் மட்டும் கேட்டுக் கொண்டிருந்தது.

"டிங்......டிங்......"

டைப்ரைட்டரின் சப்தம் மட்டும் விடாமல் தொடர்ந்து கேட்டது.

"மிஸ்டர் சுந்தரேசன்!..."

பதில் வராததைக் கண்ட திருஞானம் கோபமாக இடத்தை விட்டு எழுந்தார். சுந்தரேசன் இருந்த இடத்தை அவர் அடைவதற்கும், அவன் டைப் செய்து முடிப்பதற்கும் சரியாக இருந்தது.

"சுந்தரேசன்..."

வார்த்தையின் உஷ்ணம் அவனைத் தூக்கி வாரிப் போட்டது!

"எத்தனை தட்வை, ஐயா, மணி அடிப்பது! கூப்பிட்டது காதில் விழவில்லை!"

"இ...இல்லை, ஸார்...கடிதம் டைப் அடித்துக் கொண்டிருந்தேன்..."

திருஞானம் அருகே வந்தார். "என்ன அது, அவ்வளவு அவசரமான கடிதம்!" என்று முறைப்புடன் கேட்டுக் கொண்டே டைப் மிஷினிலிருந்து காகிதத்தை எடுத்தார்.

"ஸார். ... அது ... வந்து ..."

"சும்மா இரும். நான் படித்துக் கொள்கிறேன்" — சுந்தரேசன் ஏதோ சொல்ல

# என்ன காரணத்தால்

# மார்ட்டன்

## மிட்டாய்கள் உயர்ந்தவை



பொறுக்கான சரக்குகள் ....

நூதன யந்திரங்கள் ....

ஏர்கண்டிஷனுன தொழிற்சாலை....

மிக்க சுத்தமான, சுகாதாரமான

அமைப்பு ....

அனுபவம் முதிர்ந்த

தொழிலாளிகள்....



## மார்ட்டன் மிட்டாய்கள் –
## ருசியிலும் ஒரு புதுமை

தயவு செய்து புதுடில்லி இந்தியத் தொழில் காட்சியில் எங்கள் B-71 ஸ்டாலுக்கு வாருங்கள், 1955 அக். 29 முதல் டிஸ. 15 வரை



ராஜாஜி அவர்கள் ஆரம்பித்து நடத்தி வந்த திருச்செங்கோடு காந்தி ஆசிரமத்தில் பேராசிரியர் கல்கி திரு ரா. கிருஷ்ணமூர்த்தி இருந்து தொண்டாற்றிவந்தபோது. பள்ளிக்கூடக் குழந்தைகளுடன் எடுத்துக் கொண்ட படம். மேலே ராஜாஜி அவர்கள் அமர்ந்திருப்பதையும் அவருக்கு நேர் எதிரில் திரு ரா. கி. அவர்கள் உட்கார்ந்திருப்பதையும் மேலே உள்ள படத்தில் காணலாம்.

---

முயன்றதை அவர் சிறிதும் காதில் வாங்கிக் கொள்ளவில்லை! மிருகத்த கருத்துடன் அந்தக் கடிதத்தைப் படிக்கத் தொடங்கினர்.

"என் அன்புக்குரியவளுக்கு,

அநேக ஆசீர்வாதம். உனது அன்பான கடிதம் கிடைத்தது. ஆயிரம் தடவைகள் படித்து விட்டேன். ஆனாலும், 'இன்னும் ஒரு முறை படிக்க மாட்டோமா!' என்று என் நெஞ்சம் ஏங்குகிறது!

எனக்கு மட்டும் உன்னைப் பிரிந்திருப்பதில் சந்தோஷம் என்று நினைக்கிருய்! இல்லவே இல்லை. இன்னும் சில நாட்கள்தானே! பொறுத்துக் கொண்டிருப்போம்.

ஆபீஸில் அதிக வேலை. அதனால் தான் அடிக்கடி கடிதம் எழுத முடிவதில்லை. என்னிடமிருந்து கடிதம் வரவில்லையே என்று ஏங்கி உன் உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே.

நான் சௌக்கியமாகவே இருக்கிறேன். மனம்தான் எப்போதும் உன்னைச் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருக்கிறது!

உன் உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள். அடிக்கடி தவருமல் கடிதம் எழுது.

உன் நினைவாகவே இருக்கும்,

........................."

கடுமை கொப்புளிக்கச் சுந்தரேசனை ஏறிட்டுப் பார்த்தார் திருஞானம்.

"...ஓ...ஒன்றுமில்லை, ஸார்! 'அவளுக்கு'க் கடிதம் எழுதி ஒரு வாரமாகிவிட்டது......"

"ஓஹோ......! பெண்டாட்டிக்குக் கடிதம் எழுத ஆபீஸ்தான் கிடைத்ததோ......!"

இந்த மாதிரியான வார்த்தைகளை அவரிடமிருந்து சுந்தரேசன் அன்று வரை கேட்டதே இல்லை. அதனால் பனிப் பிரதேசத்தில் இருப்பவனைப் போல அவனுடைய உடல் இலேசாக நடுநடுங்கியது.

சிந்தனையுடன் அடி மேல் அடி எடுத்து வைத்துத் தம் அறைக்குத் திரும்பினர் திருவாளர் திருஞானம். சுந்தரேசனின் மனம் பேய் அறைந்தாற்போலச் சூன்யமாகி விட்டிருந்தது.

இரண்டு நிமிஷங்கள் நகர்ந்தன.

"சுந்தரேசன்......"

"ஸார்!"—குரலில் அவலம் நிரம்பியிருந்தது. தலைவிதியே என்று அவர் அறைக்குள் வேகமாக நுழைந்தான்.

"இந்தாரும். ஆபீஸ் கடிதங்களோடு இந்தக் கடிதத்தையும் தபாலில் சேர்த்து விடச் சொல்லும்!"

கடிதத்தைப் பெற்றுக் கொண்டு குற்றவாளியைப் போல அடக்கமாக நின்ருன் அவன்.

"சுந்தரேசன், நீர் போகலாம். உமது மனைவிக்கு வேருெரு கடிதம் எழுதிக் கொள்ளும்" என்ருர்.

திகைப்புடன் அறையை விட்டு வெளியே வந்த சுந்தரேசன், திருவாளர் திருஞானம் கொடுத்த உறை மேலிருந்த விலாசத்தைப் பார்த்தான். "திருமதி செண்பகம் திருஞானம், 131, ராமபுரம், கோயமுத்தூர்!" என்று அந்த உறையின் மேல் எழுதி யிருந்தது!

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

லொக்
லொக்
லொக்
லொக்

அச்சூ!

லொக்
லொக்
லொக்

அச்சூ!

லொக்

# அதை நிறுத்துங்கள்!

பெர்டுஸின் டெஷ்னரை உட்கொண்டு அந்த இருமலை நிறுத்துங்கள். 60 வருஷகாலமாக பெர்டுஸின் இருமலுக்கு ஓர் கைகண்ட ஔஷதமாக விளங்கிவருகிறது. கக்குவான் இருமல் உள்பட எல்லாவித இருமல்களையும் யாதொரு கொடுதியுமின்றி நொடியில் நிறுத்துகிறது. இன்றே பெர்டுஸின் வாங்குங்கள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும்
கிடைக்கிறது

இடாபா லிமிடெட், ஷான், லீஷென்ஸ்டீன் ஸ்விஸ் கஸ்டம் அண்ட் இகனமிக் டெரிடெரி இவர்களின் அனுமதியின் பேரில் இன்பா லிமிடெட். தபால் பெட்டி 1041, பம்பாய்–1, இவர்களால் இந்தியாவில் தயாரிக்கப்பட்டது.

ILY-12-TAM

# பொன் உள்ளம்

கிருஷ்ணா

“வேலம்மா! முருகனை அழ விடாமல் பார்த்துக் கொள்! நான் பண்ணைக்குப் போய்விட்டு வருகிறேன். ஏதாவது பணம் கிடைத்தால் அவன் கேட்டதெல்லாம் வாங்கி வருகிறேன். இல்லையென்றால்...இல்லைதான்!” என்று தன் மனைவியிடம் கூறி விட்டுக் கொடியில் கிடந்த துண்டை எடுத்துத் தலையில் சுற்றிக் கொண்டு வீட்டை விட்டு வெளியேறினான் கந்தசாமி.

தன் தகப்பனையே பார்த்து விசித்துக் கொண்டு நின்ற முருகன், அவனது தலை மறைந்ததும் தன் அம்மாவைக் கட்டிக் கொண்டு ‘ஓ!’ வென்று சத்தமிட்டுப் பெரிதாக அழ ஆரம்பித்தான்.

* * *

அவனது வகுப்பில் அவனோடு படிக்கும் சீனு, கோபு, எல்லோரும் வரப்போகும் தீபாவளியைப் பற்றி எவ்வளவு உற்சாகத்துடன் பேசிக் கொண்டார்கள்! அவர்கள் விடப் போவதாகக் கூறிய வாணங்களும் வெடிகளும், உடுத்திக் கொள்ளப் போவதாகச் சொன்ன சட்டை நிஜார்களும், அம்மாவின் கையினால் தின்னப் போவதாகக் கூறிய விதம் விதமான பக்ஷணங்களும் முருகனின் நாக்கிலே நீரை வருவித்தன. கேட்பதற்கே இவ்வளவு இன்பமாக இருக்கும்பொழுது கிடைத்து விட்டால் எவ்வளவு கொண்டாட்டமாக இருக்கும்? இதை நினைத்துப் பார்த்தபொழுது அவனது பிஞ்சு நெஞ்சம் ஏங்கியது. வாயில் ஊறிய நீரை வெகு சிரமத்துடன் விழுங்கிக் கொண்டான்.

அன்று மாலை பள்ளியிலிருந்து வீட்டுக்கு வந்ததும், தன் தாயாரிடம் தனக்கும் தீபாவளிக்கு ‘எல்லாம்’ வேண்டுமென்று கூறிப் பிடிவாதம் செய்தான் முருகன்.

எல்லாம் செய்து தருவதாக வேலம்மா கூறிய பிறகுதான் அவன் சாப்பிட்டான்.

வேலம்மாவுக்குத் தன் நிலைமை தெரியும். தன் கணவனின் பதினைந்து ரூபாய் சம்பளம் போதாமல் அவள் வேறு நாலு இடங்களில் உழைத்துச் சம்பாதித்து வந்தாள். இல்லையென்றால் புருஷன், மனைவி, குழந்தை, வயதான ஒரு மாமியார்க் கிழவி இத்தனை பேரையும் வைத்துக் கொண்டு குடும்பத்தை எப்படிச் சமாளிக்க முடியும்? காலணா செலவழிப்பதென்றால் கூட ஒரு தடவைக்குப் பத்துத் தடவையாகச் சிந்தித்துப் பார்த்துச் செலவு செய்ய வேண்டிய தரித்திர தசையில் இருந்தது அந்தக் குடும்பம். அந்த நிலையில் முருகனின் ஆசையை எங்ஙனம் அவள் நிறைவேற்ற முடியும்?......

கந்தசாமியிடம் தன் செல்வ மகனின் விருப்பத்தை வேலம்மா தெரிவித்தபோது அவன் சீறி விழுந்தான். “கழுதை கெட்ட கேட்டுக்குத் தீபாவளி வேறு வேண்டுமா?” என்று அலுத்துக் கொண்டான். முருகன் சமாதானமடையாமல் முரண்டு பிடிக்கவே, இழுத்து நாலு அறை விட்டு, வேலம்மாவிடம் அவனைப் பார்த்துக் கொள்ளும்படி கூறிவிட்டுப் பேசாமல் பண்ணைக்கு வேகமாகப் புறப்பட்டான்.

முருகனைக் கோபித்துக் கொண்டு கந்தசாமி வீட்டை விட்டு வெளியேறினானேயொழிய, முருகனின் ஆசை நிறைந்த விழிகளை அவனால் மறக்கவே முடியவில்லை.

எசமானர் வீட்டுக்குச் சென்று கொடியில் உலர்த்தியிருந்த துணிகளை எடுத்து மடித்து வைக்கும் பொழுதும் மாடுகளுக்குத் தண்ணீர் காட்டும்பொழுதும் முருகன் அவன் மனக் கண்களெதிரிலேயே நின்றான். வீட்டு வேலைகளை முடித்துக் கொண்டு பிறகு தோட்டத்துக்குத் தண்ணீர் பாய்ச்ச ஆரம்பித்தான் கந்தசாமி.

அந்தச் சமயத்தில் அந்தப் பக்கமாக வந்த சிவசிதம்பரம் தமது மேல் சட்டையைக் கழற்றிப் பக்கத்துச் சுவரில் மாட்டிவிட்டுக் கிணற்றை ஒட்டினாற்போல் இருந்த வெந்நீர் அறைக்குள் நுழைந்தார். அவர் தினம் மாலையிலும் குளிப்பது உண்டு.

கிணற்றில் தண்ணீர் இறைத்துக் கொண்டிருந்த கந்தசாமியின் கண்கள் அகஸ்மாத்தாகச் சுவரில் தொங்கிக் கொண்டிருந்த பண்ணையாரின் சட்டையை நோக்கின. அதிலே பையில் நீட்டிக் கொண்டிருந்த மணிபர்ஸ் அவனது கவனத்தைக் கவர்ந்தது.

அவனும் அந்த வீட்டில் வேலைக்கு வந்து எத்தனையோ வருஷங்கள் ஆகிவிட்டன. ஒரு பண்டிகை பருவத்துக்காவது பண்ணையார் அவனைக் கூப்பிட்டு, “இந்தா, கந்தசாமி! இதை வைத்துக்கொள்!” என்று இரண்டோ மூன்றோ பணம் கொடுத்தது கிடையாது. அதைப் பற்றி அவனுக்குச் சிறிது வருத்தம்தான். இருந்தாலும் ஒரு முறைகூட அவன் வாய்விட்டுக் கேட்டது கிடையாது. ஆனால் ஏராளமாகப் பக்ஷணங்களும் பதார்த்தங்களும் துணி மணிகளும் அவனுக்குக் கிடைக்கும். கிடைப்பதைக் கொண்டு திருப்தியடையும் பொன்னான உள்ளம் படைத்தவன்தான் கந்தசாமி. வேலம்மாவும் அவனுக்கு ஏற்றவளாகவே வாய்த்திருந்தாள். ஆனால் இந்தத் தடவை குழந்தை முருகனின் ஆசையைக் கேட்ட பொழுது அவன் உள்ளத்திலும் ஒரு விபரீத ஆசை உதித்தது. குழந்தையின்

ஆசையைக் கெடுக்கக் கூடாது என்ற எண்ணம்தான் அதற்குக் காரணம்.

கந்தசாமியின் கண்கள் மணிபர்சிலே ஒரு முறை பதிந்தன. 'தனக்கும் கொஞ்சம் பணம் கிடைத்து விட்டால்......'என்று குதி போட்டது அவன் மனம். தலையணைக்குள் பஞ்சு திணிப்பதுபோல அதனுள் திணிக்கப்பட்டிருந்தன கற்றை கற்றையாக நோட்டுக்கள். ஒன்றை எடுத்துக் கொண்டால் தெரியவா போகிறது?

"எங்கள் கந்தசாமி பொன்னையும் ஓட்டையும் சரி சமமாகப் பாவிப்பவன். பிறர் பொருளைத் தொடமாட்டான்!'' என்று பண்ணையார் வாய்க்கு வாய் அவனை எத்தனையோ முறை புகழ்ந்து கூறி யிருக்கிறார். அது அவன் நினைவுக்கு வந்தது. அப்பேர்ப்பட்ட கந்தசாமியின் மனத்தில் இன்று தீய எண்ணம் எழுந்தது!

சுற்று முற்றும் பார்த்தான் கந்தசாமி. ஒரு ஈ காக்கைகூட இல்லை. அவனது எஜமானியம்மாளும் குழந்தைகளும் தீபாவளி துணிமணிகள் எடுப்பதற்காகச் சற்று முன்புதான் காரில் ஏறிக் கடைத்தெருவுக்குப் போனார்கள். 'இதுவே சரியான தருணம். சந்தர்ப்பத்தை நழுவ விடாதே!' என்று அவன் மனம் அவனுக்கு உபதேசித்தது. வாளியைக் கைப்பிடிச் சுவர்மேல் வைத்து விட்டுத் தனது ஈரம்படிந்த கால்களை நன்றாகத் துடைத்துக் கொண்டு, அடியடியாக முன்னேறினான் கந்தசாமி. பர்ஸை எடுத்தான்...திறந்தான்...கையில் முதலில் அகப்பட்ட ஒரே ஒரு நோட்டை மட்டும் உருவி இடுப்பில் சொருகிக் கொண்டான். மணி பர்ஸை முன்போலவே வைத்து விட்டுத் திரும்பினவன் திகைத்து விட்டான்.

தனது பெரிய விழிகளால் தகப்பன் செய்த காரியத்தையே வைத்த விழி வாங்காமல் பார்த்தவாறு நின்று கொண்டிருந்தான் முருகன்.

'வேலம்மாவின் காலில் தேன் கொட்டி விட்டது!' என்னும் செய்தியைத் தெரிவிப்பதற்காக வந்த சிறுவனுக்குத் தன் தகப்பன் செய்து கொண்டிருந்த காரியம், தனக்கே தேன் கொட்டுவதைக் காட்டிலும் அதிக அதிர்ச்சியைக் கொடுத்தது.

தகப்பனை ஒரு முறை ஏற இறங்கப் பார்த்த முருகன் அப்புறம் அங்கே நிற்கவில்லை. "நில், நில்! முருகா! என்ன விஷயம்?'' என்று கந்தசாமி கூவினான். அதற்குள் அவன் அங்கிருந்து சிட்டாகப் பறந்து போய் விட்டான்.

"என்ன, கந்தா! உன் பையன் வந்திருந்தானா?'' என்று கேட்டவாறே பண்ணையார் சிவசிதம்பரம் குளிக்கும் அறையிலிருந்து வெளியே வந்தார்.

கந்தசாமி திடுக்கிட்டுத் திரும்பினான். எஜமானரைக் கண்டதும் அவன் உடல் பூராவும் குப்பென்று வியர்த்து விட்டது. குற்றமுள்ள நெஞ்சு குறுகுறுத்தது. அவர் முன்னால் நிற்கவே அவன் உடல் கூசியது. தள்ளாடினான், தடுமாறினான்.

"என்ன, கந்தா! உனக்கு உடம்பு சரியில்லையா, என்ன? தள்ளாடுகிறாயே! உடம்பு சரியில்லை யென்றால் நீ இன்று வேலைக்கு வந்திருக்க வேண்டாமே! போ! பேசாமல் போய்ப் படுத்துத் தூங்கு!'' என்று பண்ணையார் விடை கொடுத்து அவனை வீட்டுக்கு அனுப்பினார்.

கந்தசாமிக்குக் காலே எழும்பவில்லை. என்ன காரியம் செய்துவிட்டான் அவன்! அன்று ஏன்தான் என்றும் இல்லாமல் அவனுக்கு அப்படிப் புத்தி போயிற்றோ?

கடை வீதி வழியாக நடந்து கொண்டிருந்த கந்தசாமியைப் பட்டாசுக் கடைகளும் ஜவுளிக் கடைகளும் கவர்ந்தன. இடுப்பிலிருந்த பத்து ரூபாய்நோட்டுடன் ஒரு ரெடிமேட் ஸ்டோருக்குள் புகுந்து முருகனின் அளவுக்கு



ஒரு டிரவுசரும், ஷர்ட்டும் வாங்கிக் கொண்டான். மீதிப் பணத்துக்குப் பட்டாசு மத்தாப்பு வகையறுக்கள் வாங்கிக்கொண்டு வீடு வந்து சேர்ந்தான்.

"வேலம்மா! இந்தா! உன் மகனுக்கு என்னவெல்லாம் வாங்கி வந்திருக்கிறேன், பார்! அந்தப் பயலைக் கூப்பிட்டு எடுத்துக் கொள்ளச் சொல்லு!" என்றான்.

தந்தையைக் கண்டதும் முருகன் பேசாமல் எழுந்து போய் விட்டான். அவர் தனக்காக வாங்கி வந்த ஜவுளியையும் மத்தாப்புக்களையும் அவன் தன் கையால் தொட்டுக்கூடப் பார்க்கவில்லை.

கந்தசாமியாக வலுவில் கூப்பிட்டு ஒரு மத்தாப்புப் பெட்டியை எடுத்துக் கொடுத்தும் கூட முருகன் அதை வாங்கிக் கொள்ள முடியாதென்று மறுத்து விட்டான்.

மறு நாள் பொழுது விடிந்தால் தீபாவளி. மாலை மூன்று மணிக்குப் பண்ணையார் வீட்டிலிருந்து ஒரு ஆள் வந்து முருகனையும் கந்தசாமியையும் கையோடு அழைத்து வரச் சொன்னதாகச் சொன்னான். கந்தசாமியின் நெஞ்சம் ஒரு முறை துணுக்குற்றது. குழந்தை முருகனை அழைத்துக் கொண்டு பண்ணையார் வீட்டை நோக்கிப் புறப்பட்டான்.

அவன் நடுங்கிக் கொண்டு போனபடி பண்ணையார் கோபம் கொண்டவராகக் காட்சி யளிக்கவில்லை. சிரித்த முகத்துடன் உட்கார்ந்திருந்தார்.

"வா, கந்தசாமி! இவன்தானே உன் பையன் முருகன்!" என்றார் பண்ணையார்.

"வா, முருகா!" என்று அவனையும் அன்போடு அழைத்தார்.

"நான் சில கேள்விகள் கேட்கிறேன். பதில் சொல்லுகிறாயா, முருகா?" என்று பரிவுடன் கேட்டார்.

'சரி' என்ற பாவனையில் தலையை அசைத்தான் முருகன்.

"நீ எத்தனாவது படிக்கிறாய்?"

"மூன்றாவது!"

"பிறர் பொருளை அவர் அறியாமல் எடுப்பதற்கு என்ன பெயர்?"

"திருட்டு!" என்றான் முருகன்.

"ரொம்ப சரி! முந்தாநாள் நீ இங்கே வந்திருந்தாயா?"

"ஆமாம்!"

"அப்பொழுது உன் அப்பன் என்ன செய்து கொண்டிருந்தான், பார்த்தாயா?"

"பார்த்தேன்!"

"அவன் என்ன செய்தான்? சொல்லு, பார்க்கலாம்!" என்றார் பண்ணையார். கந்தசாமியின் சப்த நாடியும் ஒடுங்கி விட்டது.

ஆனால் முருகன் சொன்ன பதில்?...

"நான் சொல்ல மாட்டேன்!" என்பது தான். முருகனின் கண்கள் கலங்கின.

"சரி! உனக்கு உன் அப்பன் தீபாவளிக்கு என்னென்ன வாங்கித் தந்தான்?"

"டிரவுசரும் பட்டாசும்!"

"அவைகளை நீ தீபாவளிக்கென்று வாங்கிப் பெட்டியில் பத்திரமாக வைத்திருக்கிறாய் அல்லவா?"

"இல்லை."

"ஏன்? உனக்கு வேண்டாமா?"

"எனக்கு வேண்டவே வேண்டாம்!"

முருகனின் கண்களில் நீர் சுரந்தது. பண்ணையார் இன்னுமொரு கேள்வி கேட்டால் அவன் 'ஓ!' வென்று வாய்விட்டு அழுதே இருப்பான்.

"கந்தசாமி! என்றார் பண்ணையார். அவரது குரலில் கண்டிப்பு மிகுந்திருந்தது.

"கந்தசாமி! உன்னை நான் நன்றாக அறிவேன். குற்றம் செய்யும் குணம் உன்னுடையதல்ல. அன்று நான் குளிக்கும் அறையில் இருக்கும் பொழுது கிணற்றில் ராட்டினம் உருளும் ஓசை கேட்டவுடனேயே கதவின் இடுக்கு வழியாகக் கவனித்தேன். நீ செய்த காரியம் எனக்குத் தெரிந்தது. ஆனால் அதைவிட நான் கண்டு அதிசயப்பட்டது, உன் பின்னால் நின்று கொண்டிருந்த உன் மகனின் முகபாவம் தான். ஏதோ அவசரமாக வந்தவனின் முகத்தில், அப்பொழுது தோன்றிய இகழ்ச்சியையும் வெறுப்பையும் கண்டதும் உண்மையாகவே நான் ஆச்சரியப்பட்டேன்.

"ஒரு சிறு குழந்தையிடம் கண்ட நேர்மையின் பிரதிபலிப்பு என்னை மிகவும் சந்தோஷப் படுத்தியது. உடனேயே உன்னை வீட்டுக்குப் போகச் சொல்லிவிட்டு, உன் காரியங்களைக் கவனிக்க ஒரு ஆளையும் நியமித்தேன்.

"கந்தசாமி! உன் பையனை இன்று வேண்டுமென்றே அழைத்துப் பேசக் கொடுத்தேன்! கிடைக்கமாட்டாத ரத்தினம் அவன். குழந்தைக்காக நீயும் ஏதோ பணத்தை எடுத்து விட்டாயே ஒழிய உன் மனம் பட்ட பாட்டையும் ஒருவாறு நான் அறிந்து கொண்டேன். அவனுடைய மனம் கோணாமல் நீ தீபாவளியைக் கொண்டாட வேண்டும். இது தான் என் விருப்பம்!

"முருகா! இந்தா, உன் நேர்மைக்காகவும் நல்ல குணத்துக்காகவும் நான் அளிக்கும் பரிசு!..." என்று கூறித் தம் மணிபர்ஸைத் திறந்து ஐந்து பத்து ரூபாய் நோட்டுக்களை எடுத்தார். மேஜைமேலிருந்த டிரவுசர், ஷர்ட், பட்டாசுக் கட்டுகள் அடங்கிய தட்டில் வைத்து அந்தத் தட்டை அப்படியே தூக்கிமுருகனிடம் கொடுத்தார்.

"எசமான்! என்னை மன்னிச்சுடுங்க!" என்றவாறே அவர் காலடியில் வேரற்ற மரம் போலச் சாய்ந்தான் கந்தசாமி. அவன் உள்ளமும் அப்பொழுது ஸ்புடம் போடப்பட்ட தங்கமெனத் திகழ்ந்தது.

# மனமாற்றம்

சி. பி. சுப்பிரமணியம்

சாமிநாத சர்மா தோட்டத்தில் பாத்திகளைச் சரிப்படுத்திக் கொண்டிருந்தார். அவர் மகன் வாசு தண்ணீரைக் கிணற்றிலிருந்து எடுத்துக் கொண்டு வந்து செடிகளுக்கு ஊற்றிக் கொண்டிருந்தான். அப்போது பாலு அங்கே வந்தான்.

"தாத்தா !" என்று கூப்பிட்டான் பாலு.

"என்னடா, பாலு ?" என்று சொல்லித் தம் வேலையை நிறுத்தித் தலை நிமிர்ந்தார் சாமிநாத சர்மா.

"நானும் பாத்தி கட்டித் தண்ணீர் பாய்ச்சுகிறேனே, தாத்தா !"

"உனக்கு எதற்கடா இந்த வேலை ?"

"எனக்கு ஆசையாக இருக்கிறது தாத்தா, தோட்ட வேலை செய்ய ! பட்டணத்திலே இருந்தால் எங்கே நான் இந்த வேலையெல்லாம் செய்ய முடியும் ?"

"அப்பா, அவனும்தான் கொஞ்சம் வேலை செய்யட்டுமே !" என்றான் வாசு.

"சரி !" என்று சம்மதித்தார் சாமிநாத சர்மா. வாசு தண்ணீரை இறைக்கப் பாலு தாத்தாவுடன் பாத்திகளை ஒழுங்கு செய்து தண்ணீர் போக வழி செய்யலானான். அப்பொழுது தோட்டத்துப் பக்கம் வந்த சாந்தா தன் மகன் பாலு வேலை செய்வதைக் கண்டதும் தீயை மிதித்தவன்போல் துள்ளிக் குதித்தான். "டேய், பாலு ! உன் உடம்பு என்னத்துக்கு ஆகும் ? இந்த வேலையெல்லாம் உன்னை யாரடா செய்யச் சொன்னார்கள் ?" என்று சீறினான்.

"நான் தோட்ட வேலை கற்றுக் கொள்கிறேன், அம்மா !" என்று சொல்ல அவன் வாய் எடுத்தான். ஆனால் தாயாரின் பயங்கரக் கோபத்தைக் கண்டு வாய்மூடி மௌனமாகி விட்டான்.

"சனியனே, உள்ளே வந்து குளி !" என்று சொல்லிப் பாலுவைத் தரதர வென்று கையைப் பிடித்து இழுத்துக் கொண்டு உள்ளே சென்றான் சாந்தா.

தந்தை மகளின் நிலையைப் பார்த்துப் பெருமூச்சு விட, பிள்ளை அக்காளின் கோபத்தைக் கண்டு உள்ளம் குமுறினான்.

சாந்தா பிறந்தகத்துக்குத் தன் பிள்ளை பாலுவுடனும், பெண் கமலாவுடனும் வந்து மூன்று நாட்கள் தான் ஆகியிருந்தன. அவள் பட்டண வாசத்தில் மோகித்துப் போயிருந்தாள். அவளுக்குக் கிராம வாழ்க்கை கசந்தது. அதனால்தான் அவள் அப்படி இளக்காரமாகப் பேசினாள்.

அன்று சாந்தாவின் தங்கை பானு, தன் தாயாரிடம் சென்று, "ஏன், அம்மா ! அக்கா எனக்குக் கண்ணாடி கொடுப்பாளா ? பட்டணத்திலிருந்து கொண்டு வந்திருக்கிறாள். பார்ப்பதற்கு வட்டமாக அழகாயிருக்கிறது !" என்றாள்.

"அதற்கென்ன ? சாந்தாவைப் போய்க் கேள், கொடுப்பாள் !" என்றாள் தாயார்.

"ஆகட்டும், அம்மா !" என்று மகிழ்ச்சியோடு கூறினாள் பானு.

எல்லாவற்றையும் மறைவாகக் கேட்ட சாந்தாவின் பெண் கமலா 'ஹூம்' என்று சொல்லிக் கூடத்துக்கு ஓடினாள். பானு தன் அக்காளைப் பார்த்துக் கண்ணாடியைக் கேட்பதற்காகக் கூடத்துப் பக்கம் வந்தாள். அவ்வேளை சாந்தா புறக்கடையில் முகம் கழுவச் சென்றிருந்தாள். வெளியே மேஜை



யின் மீது இருந்த வட்ட வடிவமான கண்ணாடியை எடுத்துக் கமலா பெட்டிக்குள் வைக்கத் தொடங்கினள். அவளுக்குக் கண்ணாடி போய் விடுமே என்ற கவலை.

"கமலா, அந்தக் கண்ணாடியை ஏன் உள்ளே வைக்கிறாய்?" என்றான் பாலு.

கமலா பதில் சொல்ல வில்லை. பாலு மறுபடியும் மறுபடியும், "கமலா, கண்ணாடியைக் கொஞ்சம் கொடேன், பார்க்க மிக நன்றாயிருக்கிறது!" என்று கெஞ்சினன். கமலா பெட்டியிலிருந்து கண்ணாடியை எடுத்தாள். 'பாவம் கொடுக்கலாம்' என்று தோன்றியது அவளுக்கு. அவளும் பாலுவைப் போல் ஒரு குழந்தைதானே?

கமலா கண்ணாடியைப் பாலுவிடம் கொடுக்கும் போது கண்ணாடி கை தவறிப் 'படீர்' என்ற ஓசையுடன் கீழே விழுந்து உடைந்தது. கண்ணாடி உடைந்ததற்காகத் தன்னை அம்மா அடிப்பாளே என்று பயந்த கமலா, "ஏண்டி என் கண்ணாடியை உடைத்தாய்?" என்று பழியைப் பாலுவின்மீது சுமத்தி உடனே அழ ஆரம்பித்து விட்டாள்.

அப்பொழுது உள்ளே வந்த சாந்தா கண்ணாடி உடைந் திருப்பதையும், தன் மகள் அழுவதையும் கண்டாள். தன் மகள் வாய் திறந்து சொல்வதற்கு முன்பாகவே, பாலுதான் உடைத்திருக்க வேண்டும் என்று எண்ணிப் பழியை அவன் மேல் சுமத்தினள். பட்டணத்து வாசிகளைப்போல் பட்டிக் காட்டுவாசிகளுக்குப் பொருள்களை வைத்துக் கொள்ளத் தெரிவதில்லை என்ற எண்ணம் அவள் உள்ளத்தில் ஊறிப் போயிருந்தது. இல்லா விட்டால் விஷயத்தைவிசாரித்தறியாமல் தங்கை பாலுவை ஏன் அப்படிக் கோபித்துக் கொள்ளப் போகிறாள்?

குற்றமறியாக் குழந்தையான பாலு விசித்து விசித்து அழுதான். சின்னக் காரியத்தைச் சாந்தா பெரிது படுத்துவது தாயார் தர்மாம்பாளுக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் இரு பெண்களுக்கிடையே என்ன பேசுவது என்று ஒன்றும் புரியாமல் தவித்தாள்.

அன்று மத்தியானம் மணி பன்னிரண்டாகியும் வாசுவும் பாலுவும் சாப்பிட வரவில்லை. எங்கேயோ சுற்றப் போய் விட்டார்கள். "வர வர இந்தப் பாலுவும் சோம்பேறிகளுடன் சேர்ந்து கழுதையாகி வருகிறான்" என்று சொல்லிக் கத்தினள் சாந்தா. தன்கூடப் பிறந்த தம்பியைச் சோம்பேறி என்று சொல்ல நகரத்தின் நாகரிகத்தில் திளைத்திருந்த சாந்தாவின் வாய் கூசவில்லை. சிறிது நேரத்துக்கெல்லாம் பாலுவும் வாசுவும் நனைந்த துணியுடன் உள்ளே நுழைந்தார்கள். "எங்கேயடா போயிருந்தாய், பாலு?" என்று கேட்டாள் சாந்தா.

"ஆற்றுக்குப் போயிருந்தோம், அக்கா! பாலு பயந்து சாகிறான், தண்ணீரில் இறங்க. இப்படியா பயப்படுவார்கள்?" என்றான் வாசு சிரித்துக் கொண்டே.




"ஆற்றில்விழுந்து என் பிராணனை வாங்க வா பட்டணத்திலிருந்து வந்தாய்?" என்று சொல்லிப் பளீர் பளீரென்று பாலுவின் முதுகில் பேயாக அறையத் தொடங்கி விட்டாள் சாந்தா.

"இனி மேல் போக வில்லை, அம்மா!" என்று கதறினன் பாலு. சாமிநாத சர்மா சமாதானம் சொல்லப் போய்த் தாம் பெற்ற பெண்ணிடமே தம்மதிப்பைக் குறைத்துக் கொள்ளும்படியாயிற்று.

ஒருகாலத்தில் தானும் கிராமத்துப் புழுதியிலே விளையாடியவள்தான் என்பதை மறந்து தகப்பனருக்கே நாகரிகம் போதிக்கத் தொடங்கி விட்டாள் சாந்தா. பட்டணத்துப் பிரதாபம் அவளை அப்படி ஆட்டிக் கொண்டிருந்தது.

மறுநாள் தனக்கு வந்த கடிதத்தைச் சாந்தா அவசரம் அவசரமாகப் பிரித்துப் படிக்கலானள்:

**செள. சாந்தாவுக்கு, உன் கடிதம் கிடைத்தது. குழந்தைகளைப் பத்திரமாகப் பார்த்துக் கொள். உனக்குத் தெரியாமல் பாலு**



கோவை பிரபல அட்வோகேட் ஸ்ரீ ஜீ. வி. ராமசந்திரய்யா அவர்களின் சகோதரரும் ப்ரூக் பாண்ட் டீ கம்பெனியின் சேர்மனுமான ஸ்ரீ ஜீ. வி. கே. மூர்த்தி அவர்களுடைய புதல்வி சௌ பத்மாவதிக்கும், பங்களூர் பேராசிரியர் டாக்டர் பி. நரசய்யா அவர்கள் புதல்வன் ஸ்ரீ பி. பத்மநாபா ஐ. ஆர். எஸ். அவர்களுக்கும் கோயமுத்தூரில் சென்ற அக்டோபர் 30உ வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது. மைசூர் ராஜ பிரமுகர், மத்ய பிரதேச கவர்னர் ஸ்ரீ பட்டாபி சீதாராமய்யா முதலிய தேசத்தின் பல பிரமுகர்களிடமிருந்து ஏராளமான வாழ்த்துக்களும் பரிசுகளும் வந்தன. இங்கிலாந்திலிருந்து ப்ரூக் பாண்ட் டைரக்டர் ஒருவரும் திருமணத்துக்கு வந்திருந்து சிறப்பித்தார். வாழ்க, மணமக்கள்!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

எனக்கு ஒரு கடிதம் எழுதி யிருக்கிறான். என்ன அழகா யிருக்கிறது, தெரியுமா? 'அப்பா! நம்மூர்ச் சாக்கடை நாற்றத்தைத் தாத்தாவின் கிராமத்தில் பார்க்க முடியாது. தெளிந்த தண்ணீர். இங்கே எல்லோரும் நல்லவர்கள்' என்றெல்லாம் எழுதி யிருக்கிறான். உண்மை தானே? பட்டணத்தில் வாழ்ந்து நாம் என்ன சுகத்தைக் கண்டோம்? கிராமத்தில் வாழ்வது எவ்வளவு உயர்ந்தது என்று முன்பே தெரிந்திருந்தும் கால மாறுபாட்டால் நகரத்தில் வாழ்கிறேன். தான் தோட்ட வேலை செய்ததைப் பற்றிப் பாலு பக்கம் பக்கமாக எழுதி யிருக்கிறான். படிக்கப் படிக்க இனிமையாக இருக்கிறது. கிராமத்துச் சூழ்நிலையில் அறிவும் நன்கு வளருகிறது என்று பாலுவின் அனுபவம் எனக்குச் சொல்கிறது.

கடைசியாக ஒரு சில வார்த்தைகள். எனக்கு விவசாய இலாக்காவில் வேலை மாற்றம் ஏற்பட்டிருக்கிறது. இனிமேல் நான் கிராமம் கிராமமாகச் சுற்ற வேண்டும். பட்டணத்து வாழ்வை விடக் கிராம வாழ்க்கையும் சேவையுமே சிறந்தது என்று எண்ணிக்கொண்டிருந்த என் ஆசை நிறைவேறுகிறது. எத்தனை சந்தோஷமாக இருக்கிறது, தெரியுமா?

கோபாலகிருஷ்ணன்.

கடிதத்தைப் படித்த சாந்தா திகைத்தாள். பட்டணவாசத்தின் பெருமையிலே பூரித்திருந்த அவளுக்குச் சிறிது நேரம் ஒன்றுமே ஓடவில்லை. கணவனின் கடிதத்தை மறுபடியும் கருத்தூன்றிப் படித்தாள். நகரத்து நாகரிகத்தைக் காட்டிலும் நாட்டுப்புறத்தின் நற்பண்புகள் மேலானவை தான் என்ற எண்ணம் அவள் இதயத்தில் இடம் பெற்றது.

பட்டணத்துப் பகட்டைக் காட்டிலும், அந்தரங்க சுத்தத்தோடு வாழும் நாட்டுப்புறம் எவ்வளவோ மேலானது தானே? பட்டணத்தார்கள் அடுத்த வீட்டு க்ஷேமலாபங்களைக் கூட அறியாமல் தன்னலமே குறிக்கோளாக வாழ்கிறார்கள். நாட்டுப்புறத்தார்களோ நாட்டு மக்கள் நகரத்து மக்கள் எல்லோருக்கும் நல்லது செய்து 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்னும் கொள்கையைப் பின்பற்றி வாழ்கிறார்கள்.- கணவனின் கடிதம் அவளை இவ்வளவு தூரம் சிந்திக்க வைத்ததோடு மட்டும் அல்லாமல், அவள் மனத்தையே மாற்றி விட்டது. அப்பொழுது அவளுக்குத் தன் மகன் பாலு தன்னைவிடச் சிறந்தவனாகக் காட்சியளித்தான். பெருமையினால் உள்ளம்பூரித்தாள். தான் நடந்து கொண்ட விதத்தை நினைத்து மனம் புழுங்கினாள்.

அதேசமயம், "அம்மா, நான் அம்மன் கோவிலுக்குப் போய் விட்டு வருகிறேன்!" என்று சொல்லிப் புறப்பட்டான் பாலு.

மனம் மாறிய சாந்தா, "பாலு! கமலாவையும் உன்னோடு அழைத்துக் கொண்டு போயேன்!" என்றாள்.

இத்தனை நாளும் இல்லாத திருநாளாகச் சாந்தா சொன்னதைக் கேட்டுத் தர்மாம்பாளும் பாலுவும் ஆச்சரியப்பட்டனர்.

"நீ திட்டுவாயோ என்று பயந்து நான் கமலாவைக் கூப்பிட வில்லை" என்றான் பாலு பயந்து கொண்டே.

"இனி மேல் நான் யாரையும் திட்ட மாட்டேன்!" என்றாள் சாந்தா.

அப்போது பாலு குளிக்கக்கிணற்றுப் பக்கம் போய்க் கொண்டிருந்தான். "ஏன்டா பாலு, வாசுவோடு ஆற்றுக்குக் குளிக்கப் போயேன்!" என்றாள் சாந்தா. இதைக் கேட்டுச் சாமிநாத சர்மா ஆச்சரியப்பட்டார். வாசு அதை விடப் பன்மடங்கு ஆச்சரியப்பட்டான். "அக்காவுக்கு என்ன, மனசு மாறிக்கொண்டே வருகிறாப் போலிருக்கிறதே?" என்று அவன் சொன்ன போது எல்லோரும் 'கொல்'லென நகைத்தார்கள். அவர்களோடு சேர்ந்து சாந்தாவும் தன் முத்துப் பற்கள் தெரியச் சிரித்தாள்.

# பாக் செய்யப்படாத வில்லைகளை வாங்குவதில் ஜாக்கிரதையாய் இருங்கள் !



பாக் செய்யப்படாத வில்லைகள் வயிற்றுக் கோளாறு செய்யும் அமிலப் பொருள்களை உண்டாக்கக்கூடியதால், புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளை ஆவியினின்றும் நீர்த்திவலைகளினின்றும் பாதுகாக்கும் பொருட்டுத் தனித்தனியாக சீல் செய்யப்பட்டிருக்கிறது. ஆகையால் புதிய 'ஆஸ்ப்ரோ' அபாயமில்லாதது. இது இருதயத்தையோ, வயிற்றையோ பாதிக்காது. துர்ப்பழக்கம் ஏற்படுத்தக் கூடிய மருந்துகள் இதில் கிடையாது.

நவீன முறையில் சிறப்பாகத் தயாரிக்கப்பட்ட புதிய 'ஆஸ்ப்ரோ' துரிதமாக வேலை செய்கிறது. அதனால் தலைவலி, உடம்புவலி, ஜலதோஷம், ஜுரம் முதலியவைகளினின்றும் நிவாரணமளிக்க, சாப்பிட்ட மூன்று விநாடிகளில், அதனுடைய வேலையைத் துரிதமாக ஆரம்பிக்கிறது.

**அபாயமில்லாத துரித நிவாரணம் உங்களுக்குக் கிடைக்கும் —**

**புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லை**




'ஆஸ்ப்ரோ' வில்லைடட் துண்டுகளையே வாங்குங்கள்.

★ வயிற்றுக் கோளாறு உண்டாக்கும் அமிலப் பொருள்களிலிருந்து காப்பாற்றும்.

★ எப்பொழுதும், எந்த சமயத்திலும், எந்த இடத்திலும் எளிதாக உபயோகிக்க கையில் எடுத்துச் செல்லக் கூடியது.

★ சுலபமான, ஆரோக்கியமுள்ள மூன்று வில்லைகளின் விலை இரண்டு அணாதான்.

278

கடைகளில் விற்கப்படும் எல்லா 'ஆஸ்ப்ரோ' வில்லைகளும் புதிய 'ஆஸ்ப்ரோ' வில்லைகளே.



"ஓ! எவ்வளவு விசனமடைந்த தாயாராயிருந்தாள் அவள்! அவளுடைய குழந்தை ஏன் வெளுத்துப் போய் பார்க்க நோயுற்றும் சதா அழுகையுமாயிருக்கிறதென்பதை அவள் தெரிந்து கொள்ளவில்லை.



அவள் சகோதரிக்கு அதன் காரணம் புரிந்தது. அவள் சொன்னாள் "நீ தவறான முறையில் ஆகாரம் கொடுத்தாய். விரைவில் அவனுக்கு 'க்ளாக்ஸோ' கொடுக்க ஆரம்பிக்கவும். எவ்வளவு விரைவில் அவன் குணமடைகிறானென்பதைக் கண்டு நீயே ஆச்சரியப்படுவாய்!



"லக்ஷக்கணக்கான தாய்மார்கள் தங்களுடைய குழந்தைகளின் திடமான வளர்ச்சிக்கு நம்பியிருப்பது புஷ்டியுள்ள பால் - உணவு, 'க்ளாக்ஸோ'. உறுதியான எலும்பும் பற்களும் வளருவதற்காக 'க்ளாக்ஸோ'வில் விடமின் 'டி'யும் ரத்தத்தை வளம் செய்ய இரும்பு சத்தும் சேர்க்கப்பட்டுள்ளன."




உணவளிப்பில ஒரு சில வாரங்களிலேயே அவன் ஒரு முற்றிலும் மாறிய குழந்தையாய் தோன்றினான். இதற்கு முன் என்றுமேயில்லாத ஆனந்தம்! அயர்ந்து தூங்கினான்! பின் வெகு விரைவில் குழந்தை வளர ஆரம்பித்து எடையும் அதிகரித்தது. 'க்ளாக்ஸோ'வுக்கு நன்றி

**Glaxo**

'க்ளாக்ஸோ' குழந்தைகளின் மிகச் சுத்தமான பால் உணவு

G-35

# ஆற்றங்கரையினிலே




பேராசிரியர், ரா. பி. சேதுப்பிள்ளை

## 47. திருக்கோவலூர்

இம்மாநிலத்தில் கள்ளர் இல்லாத நாடில்லை. கன்னக்கோல் கொண்டு களவு செய்வார் ஒரு வகையார். கண்ணீர் வடித்து வஞ்சிப்பார் மற்றொரு வகையார். கையெடுத்துக் கும்பிட்டுக் கரவாடுவார் இன்னொரு வகையார். நெஞ்சகத்தில் வஞ்சகத்தை வைத்து அழுகின்ற கள்ளரையும் தொழுகின்ற கள்ளரையும் திருக்குறள் குறிக்கின்றது.

"தொழுதகை யுள்ளும் படையொடுங்கும் ஒன்னார்
அழுத கண்ணீரும் அனைத்து"
(ஒன்னார் - பகைவர்)

என்று திருக்குறள் குறிக்கும் இருவகைக் கள்வரையும் தொழு கள்ளர் அழு கள்ளர் என்று அழைப்பர் பொதுமக்கள். இவர்களோடு வைத்து எண்ணத்தக்க இன்னொரு வகைக் கள்வரும் உண்டு. அன்னார் ஆசாரக் கள்ளர் எனப்படுவர். பாரத சமுதாயத்தின் தந்தையாகிய காந்தியடிகளின் உயிர் கவர்ந்தவன் ஓர் ஆசாரக் கள்ளன். பழங்காலத்தில் இத்தகைய கொடிய கள்ளன் ஒருவனைக் கண்டது திருக்கோவலூர் நகரம்.

தென் பெண்ணையாறு பாயும் திருநாட்டின் தலைநகராகத் திகழ்ந்தது அந்நகரம். மலையமான் என்னும் குறுநில மன்னர் குலத்தினரால் நெடுங்காலம் ஆளப்பட்டமையால் மலையமான் நாடு என்ற பெயரும் அந்நாட்டுக்கு அமைந்தது. மலாடு என்பது அப்பெயரின் குறுக்கம்.

முன்னாளில் அந்நாட்டை யாண்ட மன்னருள் தலைசிறந்து விளங்கினான் திருமுடிக்காரி. அவன் புலவர்க்குப் பேருபகாரி; போர்க்களத்தில் நிகரற்ற குதிரை வீரன். காரி என்னும் பெயர்பெற்ற குதிரையின் மீது அமர்ந்து, காற்றென விரைந்து, மாற்றாரை வென்று அடக்கிய மலையமான் திருமுடிக்காரியின் வீரத்தை வியந்து பாடினர் கபிலர் முதலாய விழுமிய தமிழ்க் கவிஞர்கள். படைத்திறமும் கொடைத்திறமும் ஒருங்கே வாய்ந்த காரியை வள்ளலாகிய பாரியின் வரிசையில் வைத்துப் பாமாலை சூட்டினர்.

"கறங்குவெள் அருவி
    கல்அலைத்து ஒழுகும்
பறம்பின் கோமான்
    பாரியும் பிறங்குமிசைக்
கொல்லி ஆண்ட
    வல்வில் ஓரியும்
காரி ஊர்ந்து
    பேரமர்க் கடந்த
மாரி ஈகை
    மறப்போர் மலையனும்"

(கறங்கு - ஒலிக்கின்ற; அலைத்து - உருட்டி; மிசை - உச்சி; காரி - காரி என்னும் பெயருடைய குதிரை; அமர் - போர்; கடந்த - வென்ற; மாரி ஈகை-மழைபோன்ற கொடை; மலையன் - திருமுடிக்காரி)

என்பது பழங் கவிஞர் ஒருவர் அணிந்த பாமாலை.

இத்தகைய சிறப்பு வாய்ந்த மலையமான் குலத்திலே தோன்றினர் ஒரு சிலர். அவர் பகைவர்க்குக் கொடியவர்; பக்தர்க்கு அடியவர். அவரை வென்று பெண்ணை நாட்

**கல்கி மொழி**

எந்தவித அடிமைத்தனமும் பொல்லாதுதான். ஆனால் பெண்ணடிமைத் தனத்தைப்போல் ஒருவனை மதி இழக்கச் செய்வது வேறொன்றுமில்லை.

பொன்னியின் செல்வன்

டைக் கவர்ந்து கொள்ள ஆசைப்பட்டான் முத்தநாதன் என்ற சிற்றரசன். பலமுறை படையெடுத்தான். ஆயினும் மலையமானை வெல்ல முடியவில்லை. நேர்முகமாக அடைய முடியாத வெற்றியை மறைமுகமாகப் பெறத் துணிந்தான். குறுநில மன்னனுக் குரிய கோலத்தைக் களைந்தான். மேனியில் வெண்ணீற்றை அணிந்தான். தலையிலே சடையை முடித்துக் கட்டினான். ஏட்டுச் சுவடி யொன்றை எடுத்து அதனிடையே கூரிய கத்தியைப் பதனமாய் மறைத்து வைத்தான். பட்டப் பகலில் ஆசாரக் கள்ள னாய் வெளிப்பட்டு மலையமான் மாளிகை யின் உள்ளே புகுந்தான்.

"மெய்யெலாம் நீறு பூசி
வேணிகள் முடித்துக் கட்டி
கையினில் படை கரந்த
புத்தகக் கவளி ஏந்தி
மைபொதி விளக்கே என்ன
மனத்தினுள் கறுப்பு வைத்து
பொய்தவ வேடம் கொண்டு
புகுந்தனன் முத்த நாதன்"

(மெய் - உடம்பு; நீறு - திருநீறு; வேணி - சடை; கவளி - பொதி; மை - இருட்டு)

என்று தவ வேடம் புனைந்து போந்த கள் வனைத் திருத்தொண்டர் புராணம் காட்டு கின்றது.

தவ வேடத்தின் பெருமையால் தடை யெல்லாம் கடந்து மலையமான் இருந்த இடம் போந்தான் முத்தநாதன். முழுநீறு பூசிய முனிவரைக் கண்டபோது இருக் கையை விட்டு எழுந்தான் மலையமான்; இரு கைகளையும் குவித்து வணங்கினான்; தக்கதோர் ஆசனத்தில் அமர்த்தினான்; பணிந்து ஒடுங்கி நின்றான்.

அப்போது முனிவன் அவனை நோக்கி "மன்னவா! மாதொரு பாகன் அருளிய ஆகம நூல் ஒன்று எனக்குக் கிடைத்தது. இந்நூல் வேறு எங்கும் இல்லை. அருமை யாகப் பெற்ற சுவடியை உன்னிடம் எடுத்து வந்துள்ளேன்" என்றான். சிவா கமம் என்ற சொல்லைக் கேட்டவுடன் மலையமான் மனம் மலர்ந்தது. முனிவரது அடியின் கீழ் அமர்ந்தார்; ஐம்புலன்களும் ஒடுங்கி "ஐயனே! இச் சிவாகமத்தை அடி யேனுக்குச் செவியறிவுறுத்த வேண்டும்" என்று இறைஞ்சினார்.

முனிவன் ஏட்டை அவிழ்த்தான்; கத் தியை எடுத்தான்; வெட்டெனக் குத்தினான். 'ஐயோ' என்று அலறினான் அரசன். அது கேட்டு ஓடி வந்தான் தத்தன் என்ற காவலன். முனிவன் மீது பாயலுற்றான். அப்போது துடித்துக் கொண்டிருந்த மன்னன் அவனைத் தடுத்தார். "தத்தா! இவர் நம்மவர்" என்று சொல்லித் தரை யில் விழுந்தார்.

அரசன் ஆணைக்கு அடங்கி நின்ற தத்தன் கண்ணீர் சொரிந்தான்; மடிந்து விழுந்த மன்னனைத் தாங்கி மடிமேல் வைத்து "என் ஐயனே! நான் என்ன செய்வேன்?" என்று கதறினான்.

தத்தன் அழுகுரல் கேட்ட காவலாளர் எல்லாம் அங்கே ஓடி வந்தனர். முனிவர் கோலத்தில் நின்ற கள்வன் மீது சாடினர். அது கண்ட அரசன் "தத்தா! இவர் எம் பிரான் அடியார். எவரும் இவர்க்குத் தீங்கு செய்யாமல் காத்து வெளியே கொண்டு போய் விடு" என்று பணித்தார். மன்னனது கருணைமொழி கேட்ட மாந்த ரெல்லாம் கரைந்து உருகினர்.

"இன்னாசெய் தாரை ஒறுத்தல் அவர்நாண
நன்னயம் செய்து விடல்"

(இன்னா - துன்பம்; ஒறுத்தல் - தண்டித்தல்)

என்று தமிழ் மறை விதித்தவாறு ஒழுகிய மன்னனை உச்சிமேற் கைகூப்பி வணங் கினர். அவன் ஆணைப்படி தத்தன் காவலில் அரண்மனையை விட்டகன்ற ஆசாரக் கள் ளனை அருவருப்புடன் பார்த்து நின்றனர்.

ஊறு செய்த கொடியோனை ஊருக்கு வெளியே விட்டு வேகமாகத் திரும்பினான் தத்தன். அவன் வரும் வரை அரசன் உயிர் ஊசலாடிக் கொண்டிருந்தது.

"சென்றுஅடி வணங்கி நின்று
செய்தவ வேடம் கொண்டு
வென்றவற்கு இடையூ(று) இன்றி
விட்டனன் என்று கூற
இன்று எனக்கு ஐயன் செய்தது
யார்செய்ய வல்லார் என்று
நின்றவன் தன்னை நோக்கி
நிறைபெருங் கருணை கூர்ந்தார்"

மரண வேதனையைப் பொறுத்திருந்த மன் னனை நோக்கி "அரசே! நின் ஆணைப்படி அவனைக் காத்து வெளியே கொண்டு விட் டேன்" என்று கூறினான் தத்தன். அப் போது மன்னன் மனம் மகிழ்ந்தது; அவன் திருமுகம் மலர்ந்தது. "இன்று என் ஐய னாகிய தத்தன் செய்த உதவியை வேறு யார் செய்ய வல்லார்" என்று புகழ்ந்தான்; ஆவி துறந்தான்.

கள்ள வேடம் புனைந்து கொலை புரிந்த பகைவனது தீமையைப் பொறுத்து அவ னுயிரைக் குறிக்கொண்டு காத்தருளிய மலையமான் "அருள் வள்ளல்" என்பதில் ஐயமுண்டோ?

(தொடரும்)

# ஓர் பரிபூரண சேவைத் திட்டம்




## பாண்டியன் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனி லிமிடெட்

## நெருப்பு - கப்பல் - விபத்து

ஆஸ்திகள் : ரூ. 1 கோடிக்கு மேல்

தலைமைக் காரியாலயம் : பாண்டியன் பில்டிங் : மதுரை

கிளைகள் : பம்பாய், கல்கத்தா, டெல்லி, சென்னை, நாகபுரி, ஷோலாப்பூர், பெங்களூர், திருவனந்தபுரம், கோயம்புத்தூர், கொச்சி

4



# அந்த இருமலை நிறுத்துக தொண்டை ரணத்தை சமனமூட்டி குணப்படுத்துக

பெப்ஸ் தொண்டை மற்றும் மார்பு வலி நிவாரண மாத்திரைகளில் சமனமூட்டி குணப்படுத்தும் ரசங்கள் அடங்கியுள்ளன. பெப்ஸை சுவைக்கும்போதே, இந்த ரசங்கள் ஆவியாக மாறி உங்கள் சுவாசத்துடன் தொண்டை சுவாசக் குழாய் மூலமாக சுவாசப்பைக்குச் செல்லும். ஆகவே கோளாறின் ஆரம்பஸ்தானத்திற்கே சென்று வேலைசெய்கின்றன. அதனால்தான் பெப்ஸ் கைகண்ட ஔஷதமாய் விளங்குகிறது. பெப்ஸ் இருமலை நிறுத்தி, தொண்டை ரணத்தை சமனமாக்கி, உங்கள் சுவாசப் பையை காப்பாற்றி, காந்தை உடைத்து, அடைப்பை நீக்குவதுடன் இன்ப்ளூயன்ஸா மற்றும் பிராங்கைடிஸ் சிகிச்சையில் இன்றியமையாததாயுமுள்ளது.



பெப்ஸ் சாப்பிடுங்கள்

# PEPS

உலக பிரசித்தி பெற்ற

தொண்டை, மார்புவலி நிவாரண மாத்திரைகள்.

எல்லா மருந்து வியாபாரிகளிடமும் கிடைக்கும்.

FPY. 28-TAM

மதராஸுக்கு ஸோல் ஏஜண்டுகள் : தாதா & கம்பெனி, பார்க் டவுன்



# குழந்தையின் முதல் நடைகள்

ஆம், குழந்தை தனியாக நடக்கக் கற்றுவருகிறான். பிஞ்சுக் கால்கள் தட்டுத்தடுமாற உங்களை நோக்கி நடந்துவரும் அவனை, பெருமிதம் தாங்காமல் நீங்கள் வாரியணைத்துக் கொள்கிறீர்கள்.

ஆனாலும் குழந்தையின் சகாயமற்ற நிலையில் நாம்தான் அவனுக்கு எல்லாம் செய்யவேண்டியிருக்கிறது. அவனது விஷயத்தில் அடிக்கடி கவனம் தேவை. முக்கியமாக அவனுடைய பூப்போன்ற சருமத்திற்கு விசேஷ பராமரிப்பு அவசியம். ஜான்ஸன்ஸ் பேபி பௌடர் அவனது சருமத்தை மிருதுவாகவும் மழமழப்பாகவும் வைத்திருப்பதுடன் எரிச்சலின்றி பாதுகாக்கவும் செய்யும்.

டாக்டர்கள் ஜான்ஸன்ஸ் பேபி பௌடரை 70 ஆண்டுகளுக்கு மேலாக சிபாரிசு செய்துவருகின்றனர். இன்றே ஒரு டின் வாங்குக.




**Johnson's BABY POWDER**

Regd. Trade Mark

**ஜான்ஸன்ஸ் பேபி பௌடர்**

**சருமத்திற்கு ஹிதமளிப்பதில் உலகிலேயே நிகரற்ற பௌடர்**

**இலவசம்** குழந்தை பராமரிப்புப் புத்தகத்தின் இலவச பிரதிக்கு எழுதுங்கள் — குழந்தைகளை சரியான முறையில் எப்படி பேணி வளர்ப்பது, பல் முளைக்கும்போது என்ன செய்ய வேண்டும், அவனை குளிப்பாட்டும் முறை, எப்படி நல்ல பழக்கவழக்கங்களை கற்றுக் கொடுப்பது முதலிய, பெற்றோருக்கு உபயோகமான, அநேக விஷயங்கள் இதில் அடங்கியிருக்கிறது. இவ்விலாசத்திற்கு எழுதவும்:

**ஜான்ஸன் & ஜான்ஸன் (கிரேட் பிரிட்டன்) லிட்.**

JB. 991 டிபார்ட்மெண்டு 21 (ஐ), த பெ. 1976, பம்பாய்



# ரவிசந்திரிகா

சோமு

## 34. ஒலியும் ஓசையும்

கோமாளிக் கூத்து நடைபெற்று வரும் போதே, நிகழ்ச்சிகளை வகைப்படுத்திக் கொண்டிருந்த இலஞ்சிச் சாமியார் அடிக்கடி கூட்டத்தை அப்படியும் இப்படியும் சுற்றிப் பார்த்து யாரையோ தேடிக் கொண்டிருந்தார். கோமாளிக் கூத்து நடப்பதைக் காண வருகிறேன் என்று சொல்லிப் போன டாக்டர் சுரேஷ் அதுவரை வந்து சேராதது சாமியாருக்குக் கவலை உண்டாக்கி யிருந்தது. எனவே கூட்டத்தில் பரபரப்பு ஏற்பட்டதும் ஒரு வேளை டாக்டர்தான் வந்து விட்டாரோ என்று அவர் முதலில் நினைத்தார். ஆனால் கோழி கூவுவதுபோல ஓசை வந்ததும் அவருக்குத் திகைப்பு உண்டாகி விட்டது.

தூபக் காலைப் பனிஞன் ஒருவனிடம் கொடுத்துவிட்டுச் சத்தம் வந்த திசையை நோக்கி ஓடினார். என்ன வியப்பு! ரவீந்திரன்தான் வந்து கொண்டிருந்தான்! ஆனால் அவனோடு வந்தது யார்? சாக்ஷாத் டாக்டர் சுரேஷ்தான்.

"என்ன சாமிகளே! திகைக்கிறீர்கள்! ஏதோ ஒரு ரஸமான கட்டத்திலேதான் ரவீந்திரனைக் கூட்டத்துக்குள்ளே அழைத்துப் போய்த் திரணையில் உட்கார்த்த வேண்டும் என்று நீங்கள் திட்டம் போட்டிருந்தீர்கள் போலிருக்கிறது. நான் அதைக் கெடுத்து விட்டேனே!"

இவ்வாறு குறும்பாகச் சொல்லிக் கொண்டே சாமியாருக்கு அருகிலே வந்து நின்றுகொண்டு டாக்டர் பேசினார்: "இப்பொழுது கோழி மாதிரிக் கூவியது யாரென்று நினைக்கிறீர்கள்? ரவீந்திரன் என்றுதானே? அதுதான் இல்லை. நான் தான் அந்தமாதிரிக் கூப்பிட்டேன். இன்னும் கொஞ்ச நேரத்தில் ரவீந்திரனும் அப்படி ஒரு ஓசையை உண்டாக்கினால் அவனுடைய வியாதி குணமாகி விட்டது என்று அர்த்தம்! கோழி கூவினால் விடியும் அல்லவா? அவனுடைய வியாதிக்கும் விடிவு காலம் வந்துவிடும், அவனும் கோழியைப்போல் கத்தினால்!"

இப்படி டாக்டர் சொல்லிக் கொண்டிருக்கும் போதே ரவீந்திரன், தூரத்தில் கோமாளிகள் கூத்தாடுவதை இமை கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த விதத்தை இருவரும் கவனித்தார்கள். அவனுடைய விழிகளைக் கவனித்தால், கோமாளியின் கூத்தும் பாட்டுமே அந்தக் கண்களின் வழியாக உள்ளே சென்று மனத்தைப் போய்த் தாக்கி நின்றனவோ என்று தோன்றியது. கொஞ்ச நேரத்தில் அந்தப் பாட்டும் ஆட்டமும் உச்ச நிலையை அடைந்தபோது ரவீந்திரனுடைய கால் விரல்கள் ஆடின. அந்த ஆட்டத்தைக் கூர்ந்து பார்த்தார் டாக்டர் சுரேஷ்.

"சாமிகளே! நான் ரவீந்திரனை இங்கே கொண்டு வந்து விட்டுப் போன பிறகு, இப்பொழுதுதான் பார்க்கிறேன். இந்த ஏழெட்டு நாட்களில் அதிசயமான மாறுதல் தெரிகிறது. உங்களுடைய சர்ப்பகந்தி அவனுடைய உடம்பின் ரத்தவேகத்தை எவ்வளவோ அடக்கி யிருக்கிறது. அதே சமயம் இந்த மலைக்காட்டுச் செடி கொடிகளின் குளுமையும், சம்பவச் சிக்கல்கள் இல்லாத இந்தச் சொக்கி குடியின் நிம்மதியான சூழ்நிலையும் ஒரு பெரும் அளவுக்கு அவனுடைய மன நிலையையும் அபிவிருத்தி செய்திருக்கின்றன. ஆனால் முழுதும் குணமாக வேண்டும் என்றால் அவனுடைய மனத்திலிருந்து எழுச்சி புறப்பட்டு அது ஓசையாக வெளிவர வேண்டும். ரவீந்திரன் ஒரு சங்கீதக் கலைஞன். அவனுடைய உள்ளத்தைத் தொடக்கூடிய ஒரே சக்தி, வேறு எந்த மருந்தையும் விட ஆற்றல் வாய்ந்த சக்தி, ஒலிதான். வெளியில் கேட்கிற ஒலியும் அவனுடைய உள்ளத்தின் ஒலியும் சுருதி சேர்ந்து ஒலிக்க ஆரம்பித்து விட்டால், ரவீந்திரன் பழைய ரவீந்திரன் ஆகி விடுவான். இதுதான் அவனுடைய மனத்தின் தத்துவம். நீங்கள் என்னோடு கொஞ்சம் தனியாக வாருங்கள். கல்யாணி அம்மாளின் துயர நிலையைப் பற்றிச் சில விவரங்கள் கேள்விப்பட்டேன். அதன் விளைவாக இரண்டொரு விஷயங்கள் முடிவு செய்திருக்கிறேன். நாம் இருவரும் அதைப் பற்றிப் பேசலாம். ரவீந்திரனைக் கொஞ்சம் தனியாக இந்தக் கூட்டத்தில் விட்டுவிட்டு அப்பால் செல்லுவோம். பணிஞர்கள் அவனைக் கவனித்துக் கொள்ளுவார்கள். அவன் இந்த வேடிக்கைக் கூத்துக்களைக் கொஞ்சம் பார்த்துக் கொண்டிருக்கட்டும்!"

இவ்வாறு சொல்லி டாக்டர் சுரேஷ் இலஞ்சிச் சாமியாரை அழைத்துக் கொண்டு நகர்ந்தார். கூத்துதொடர்ந்து நடந்து கொண்டிருந்தது.

* * *

ரவீந்திரனுடைய மனத்தைச் செம்மைப் படுத்துவதற்கான காரியங்கள்



மலைக்காட்டில் சொக்கி குடியிலே இத்தனை கவனத்தோடு நடைபெற்றது போலவே, பம்பாயிலும் நட்சத்திர கங்கை மயங்கி விழுந்த பிறகு அவளுடைய உள்ளத்தின் தன்மையை ஆராயும் முயற்சியும் அதைச் செம்மைப் படுத்துவதற்கான பிரயத்தனமும் தொடர்ந்து நடைபெற்றன.

சாவித்திரி அம்மாள் ஒவ்வொரு காரியத்திலும், பேசுகிற ஒவ்வொரு வார்த்தையிலும் இந்த நோக்கத்தை உள்ளடக்கி நடந்து கொண்டாள். உண்மையில் அவளுடைய மனத்தின் அந்தரங்கத்தில் வேறொரு புதிய ஆசையும் அரும்பி யிருந்தது.

"சந்திரிகா! நன்றாக ஆராய்ந்து பார்த்துச் சொல். இதுவரை நீ வாழ்ந்து வந்துள்ள விதமே உனக்குப் பூரண திருப்தி தருகிறதா? ரவீந்திரனிடம் நீ கொண்டுள்ள பாசத்தினாலேயே உன் இதயம் பூரணம் அடைந்து விட்டதா? அல்லது உன்னை அன்போடு அரவணைக்க, உன் கழுத்தைக் கோசத்தை வருட, உன் கன்னத்தைக் கிள்ளிவிட, உன் கூந்தலைப் பிடித்து இழுக்க, ஒரு கையை நாடுகிறதா உன் மனம்? உன்னோடு கொஞ்சும் மொழிகள் பேசுவதற்கும், உன்னைக் 'கண்ணே' என்று அழைத்து நேசம் புரிவதற்கும் ஓர் இன்பக் குரலுக்காக உன் செவி என்றுமே ஏங்கியதில்லையா? மனத்தை மறைக்காமல் என்னிடம் சொல்லம்மா!"

இவ்வாறு கேட்டாள் அல்லவா சாவித்திரி அம்மாள். இந்தக் கேள்விக்கு உடனே பதில் வந்துவிடும் என்றோ, அப்படி வர வேண்டும் என்றோ அவள் எதிர்பார்க்கவில்லை. பின் எதற்காகக் கேட்டாள் என்றால், சந்திரிகாவுக்கே அவளுடைய மனம் புரிந்திருக்கிறதா, இல்லையென்றால் அதை அவளே புரிந்து கொள்ள முயற்சிக்கட்டும், தன் உணர்ச்சிகளைத் தானே ஆராய்ந்து பார்க்கட்டும் என்று கருதியே சந்திரிகாவிடம் சாவித்திரி அம்மாள் அந்த மாதிரி ஒரு கேள்வியைப் போட்டாள். மெய்யாகப் பார்த்தால் சந்திரிகாவுக்கும் தானே தன்னுடைய இதயத்தைக் கேட்டுக் கொள்வது போல இருந்தது அந்தக் கேள்வி. மௌனமாக இருந்தாள்.

"சந்திரிகா! என்னுடைய கேள்விக்குப் பதில் சொல்ல வெட்கமாக இருக்கிறதா? அப்படியானால் அந்த வெட்கத்தை விட்டு விடம்மா! அல்லது, இந்தக் கேள்விக்கு யோசித்துப் பதில் சொல்ல வேண்டும் போல் தோன்றினால், பேஷாக யோசித்துச் சொல்!" என்றாள் சாவித்திரி.

"அம்மா! எனக்கே இதுவரை புரியாத ஒரு விஷயத்தை நீங்கள் இப்பொழுது கேட்கிறீர்கள். யோசித்துத்தான் பதில் சொல்ல வேண்டும். ஆனால் ஒன்று மட்டும் நிச்சயமாகச் சொல்ல முடியும். நீங்கள் குறிப்பிட்டது போன்ற முறையில் என்னோடு இதுவரை யாரும் பேசியதில்லை. யாரும் நீங்கள் சொன்னீர்களே அப்படிக் கொஞ்சியதில்லை. அவர் சம்பந்தப்பட்டவரை அவர் ஒரு மணமாகாத வாலிபராக இருந்து, நாங்கள் முதன் முதலாக அப்படிச் சந்தித்திருந்தால் ஒருவேளை அவர் அப்படியெல்லாம் என்னோடு பழகி யிருக்கக் கூடும். நானும் அதையே எதிர்பார்த்து ஏங்கி யிருப்பேன். ஆனால் இப்பொழுதோ






# டியூடர் ஆயிஸ்டர் பிரின்ஸ்

## சுறுசுறுப்பான ஆடவர் ஒவ்வொருவருக்கும் ஏற்ற கடியாரம்

இந்த சீர்திருத்தப்பட்ட புதிய டியூடர் செல்ப்-வைண்டிங் கடியாரத்திற்கு பிரத்யேக கவனம் சிறிதும் தேவையில்லை. உங்கள் கை மணிக்கட்டின் ஒவ்வொரு சிறு அசைவிலும் இதன் (ரோலெக்ஸ் பேடண்ட்) ரோட்டார் விசை சப்தமாக தானாகவே சாவி கொடுத்து கடியாரத்தை நேர்மையுடன் ஓடவைக்கிறது.

19-ஜுவல் யந்திரம்; காந்தத்தினால் பாதிக்கப்படாதது அதிர்ச்சி தாங்கக்கூடியது... ஜலம், தூசி, அழுக்கு, வியர்வைகூட புகாதபடி அழகிய ஆயிஸ்டர் கேஸின் பாதுகாப்புடையது.

**டியூடர் ஆயிஸ்டர்டேட்** கடியாரத்தைப் பார்க்கத் தவறாதீர்கள் — பின்னைப்போன்று அதே அழகிய அமைப்பு ஆனால் டயலில் தேதியும் காட்டும்.

**டியூடர்** ஜெனிவா ரோலெக்ஸாரால் பொறுப்பு ஏற்கப்பட்டது

தென்இந்தியாவில் ஏக விநியோகஸ்தர்கள்:

**மெஸர்ஸ் பி. ஆர் & ஸன்ஸ் லிட்.,**

மவுண்ட் ரோட், மதராஸ்

—அம்மா, எனக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. என் இதயத்தின் அந்தரங்கத்திலுள்ள ஏதோ ஆதாரத் தந்தியைச் சுண்டி விட்டீர்கள் நீங்கள். இப்பொழுது என்னால் எதுவும் பேச முடிய வில்லை. எனக்கு இந்தக் கேள்விக்குப் பதில் சொல்லத் தெரிய வில்லை.''

கார் பங்களா வாசலை அடைந்தது. இருவரும் இறங்கினார்கள்.

''சந்திரிகா! உன்னுடைய மூளையை அளவுக்கு மீறிக் குழப்பி விட்டேன் போலிருக்கிறது. நீ போய் நிம்மதியாகப் படுத்துக்கொள் அம்மா. நன்றாக யோசனை செய்து பார்த்து எனக்குப் பதில் சொல்லு. அவசரம் இல்லை!''

இவ்வாறு சொல்லிய சாவித்திரி அம்மாள் சந்திரிகாவை அவளுடைய அறைக்கு அனுப்பி விட்டு, தான் தன்னுடைய அறையிலே தனியாக இருந்து நீண்ட நேரம் யோசனை செய்தாள். அவளுடைய மனசில் முதன்முதல் சந்திரிகாவைப் பற்றிக் கேள்விப்பட்டதும் உதித்த எண்ணம், பிறகு ரவீந்திரனைப் பற்றியும் அவர்கள் வீட்டிலே ஏற்பட்ட குழப்பங்களைப் பற்றியும் கேட்டதும் உண்டான சந்தேகங்கள், பிறகு சந்திரிகா தனது உள்ளத்தின் அந்தரங்கத்தைச் சொல்ல ஆரம்பித்ததும் ஏற்பட்ட நிம்மதி, ரவீந்திரனுக்கும் சந்திரிகாவுக்கும் மத்தியில் இருந்த அந்த அதிசயமான பாசத்தைப் பற்றிய தெளிவு, இப்பொழுது அந்தத் தெளிவு காரணமாகத் தான் மேற் கொண்டும் சந்திரிகாவிடம் கேட்ட கேள்வி, அதற்கு அவள் என்ன பதில் சொல்லக்கூடும் என்ற சிந்தனை—இப்படியாகச் சாவித்திரி அம்மாள் ஒரு சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தவாறு பலமாக யோசனை செய்து கொண்டிருந்தாள்.

சந்திரிகா யோசித்தாள்: 'சாவித்திரி அம்மாள் கேட்ட கேள்வி முக்கியமான ஒரு கேள்வி. தன்னுடைய எதிர்காலத்தை நிர்ணயிக்கப் போகும் ஒரு கேள்வி அது. திருச்சியில் காவேரி நதியிலே விழப் போவது என்று தீர்மானித்துக் கொண்டு வீட்டை விட்டு நடந்து சென்றவள், ரவீந்திரனுடைய இசைப் பரம்பரை வழி வழியாகத் துலங்க வேண்டும் என்றும் அவனுடைய இலக்ஷியங்களும் கனவுகளும் ஈடேற வேண்டும் என்றும் கருதித்தானே, அந்த உயிரை இத்தனை பிரியத்தோடு காப்பாற்றி இந்த பம்பாய் நகரத்துக்குக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறாள். இனி மேல் அந்தத் திட்டம் நிறைவேறுவதற்கு வேண்டிய காரியங்களை நன்றாக யோசிக்க வேண்டியது மிகவும் அவசியம் அல்லவா. அப்படித் தன்னுடைய எதிர்காலத்தை நிர்ணயிக்க வேண்டுமானால், சாவித்திரி அம்மாள் கேட்ட அந்தக் கேள்விக்குத் தன்னுடைய மனசாட்சி என்ன விடை தருகிறது என்பதைத் தெளிவாக ஆராய்ந்து விட வேண்டியதுதான். உண்மையில் இந்தக் கேள்விக்குத் தான் காணுகிற விடையைப் பொறுத்துத்தான் தன்னுடைய எதிர்காலம் அமையப் போகிறது.'

இவ்வாறு எண்ணினாள் சந்திரிகா. உண்மையில் இதுவரை அவள் யோசித்துப் பார்த்திராத ஒரு புதிய விஷயத்தை இப்பொழுது அவள் யோசித்தாள். இதுவரை அவள் புகுந்து பார்த்திராத ஒரு புதிய சிந்தனை உலகிற்கு அவளை அழைத்துச் சென்றது சாவித்திரி அம்மாளின் கேள்வி.



வாழ்வில் தான் தன்னந் தனியாக ஒரு கன்னிகையாகவே வாழ்ந்து விட்டால் என்ன?—இப்படி ஒரு எண்ணம் சந்திரிகாவின் மனத்தில் உண்டாயிற்று.

'எத்தனை பெண்மணிகள் மரணம்வரை பரிசுத்தமான நிலையிலே கன்னிகையராகவே வாழ்ந்து கடைத்தேறி யிருக்கிறார்கள். தானும் அப்படி இருந்து விட்டால் என்ன?'

சந்திரிகா நினைத்தாள்: 'ஆனால் அப்படிப் பட்ட ஒரு பரிசுத்தமான வாழ்வு வாழுவதற்கு வேண்டிய மன உறுதி தனக்கு உண்டா? நிச்சயம் இதுவரை அந்த உறுதி இருந்து வந்திருக்கிறது. ஆனால் இனி?'

பாரமான கனத்த சிந்தனைகளைத் தாங்கிக் கொண்டு அவளுடைய மனம் ஒரு ரதத்தைப்

போல் சிந்தனைப் பாதையிலே நகர்ந்தது. அங்கங்கே சாவித்திரி அம்மாளின் கேள்வி மீண்டும் மீண்டும் நினைவுக்கு வரும். 'கொஞ்சும் மொழிகள் பேச ஒரு குரல்', 'அன்போடு அரவணைக்கக் கூடிய இரண்டு நேசக் கரங்கள்' — இந்த வினைப்பானது நகரும் ரதத்துக்குச் சருக்குப் போடுவார்களே, அதைப் போல அவளுடைய சிந்தனையைத் திடீர் திடீர் என்று நிறுத்தி வேறு பக்கமாகத் திருப்பும்.

'பெண்களுடைய வாழ்க்கை மேடுபள்ளங்கள் நிறைந்த இடைஞ்சலான பாதை. இந்த உலகில் கற்பு என்ற பாதை கரடு முரடான கடின மார்க்கம். ஆனால் அதில் நடந்து சென்று கடைத்தேறிவிட்டாலோ?'

தனக்குத் தெரிந்த, தான் கேள்விப்பட்ட பெண்களின் வாழ்க்கையையெல்லாம் ஒரு தரம் எண்ணிப் பார்த்தாள் சந்திரிகா. 'ஒழுக்கத்தோடு வாழ்வது, வாழ விரும்புவது, வாழ முற்படுவது, இதெல்லாம் அவரவர்களுடைய மனத்தின் திண்மையைப் பொறுத்த விஷயம். ஏதோ உலகில் பெண்கள் செய்கிற பாபம் என்று அழைக்கப்படுகிற காரியங்கள் எல்லாம், சந்தர்ப்பப் பிசகினாலும் வறுமையினாலும் ஏற்படுகின்றன என்று சொல்வது அறியாமை. எந்த வறுமையிலும், எத்தனை சந்தர்ப்பச் சிக்கலிலும் தங்களைக் காப்பாற்றிக்கொண்டு அறவாழ்க்கை நடத்துகிற பெண்கள் உலகில் இல்லையா? நிச்சயம் இருக்கிறார்கள். அதே சமயம் எத்தனை சௌகரியங்கள் இருந்தாலும், எத்தனை சந்தர்ப்ப வசதிகள் இருந்தாலும், கெட்டுப் போகிற பெண்களும் இருக்கவே இருக்கிறார்கள். அதிலும் சந்தேகம் இல்லை. அப்படியானால் ஒழுக்கம் என்பது என்ன? அது பிறவிலேயே அமைகிற குணமா? அல்லது விதி என்று சொல்கிறார்களே, பெண்களின் வாழ்க்கை என்பதும் அதைச் சேர்ந்த ஒரு தத்துவந்தானா?'

சந்திரிகாவின் இளம் மனத்தில் இப்படி ஏதேதோ பெரிய பெரிய கேள்விகள் எழுந்தன. தேர்த் திருவிழாக் காலங்களில் அதிர்வேட்டுப் போடுவதற்காக ஒரு சிறு மர வண்டியிருக்குமல்லவா? அதில் வெடி மருந்தைப் போடுவதற்குச் சில குழாய்கள் இருக்குமல்லவா? அப்படி அவளுடைய இதயத் தேரின் ஓட்டத்திற்கு மத்தியிலே புத்தியானது பல பல குழாய்களில் வெடித்துப் புகைகிற பெரிய பெரிய கேள்விகளை வெடி மருந்தாகப் போட்டு உள்ளத்தை அதிரச் செய்தது. உலகின் மகா ஞானிகள் எல்லாம் பதில் தெரியாமல் புகைகிற அடிப்படையான பெருங் கேள்விகள் மனத்தில் எழுந்து அந்தச் சிந்தனை வெடியின் ஓசையிலே அந்த இளம் மனம் சிதறுவதும் மறுபடி ஒன்று சேர்வதும், மீண்டும் சிதறுவதுமாக இரவுப் பொழுதெல்லாம் உறக்கமே இல்லாமல் நகர்ந்தது.



மறுநாள் சாவித்திரி அம்மாள் சந்திரிகாவோடு அதிக நேரம் தாமதிக்கவில்லை. அவளுடைய கணவர் இரண்டு வாரங்களாகக் காரியாலய வேலை நிமித்தம் எங்கேயோ சுற்றுப் பிரயாணம் சென்றிருந்தவர், அன்று காலை திரும்பினார். அவர் வந்து சேர்ந்த நிமிஷத்திலிருந்து அவரிடம் கலைத் திருவிழா நிகழ்ச்சிகளைப் பற்றிப் பேசுவதும், ஸேவா ஸதனத்தில் தான் இந்த இரண்டு வாரங்களில் செய்த ஏதேதோ காரியங்களைப் பற்றிச் சொல்வதுமாகச் சாவித்திரி அம்மாள் மிகவும் சுறுசுறுப்பாக இருந்தாள். அந்த வரைக்கும் சந்திரிகாவுக்குச் சௌகரியமாக இருந்தது. ஏனென்றால் அவளுக்கு இருந்த மன நிலையில் யாரும், சாவித்திரி அம்மாள் கூட, சந்திரிகாவின் ஏகாந்த சிந்தனையைக் கலைப்பதை அவள் விரும்பியிருக்க மாட்டாள்.

இதன் பிறகு இரண்டு மூன்று நாட்கள் அதிகப் பேச்சு ஒன்றும் இல்லாமல் கழிந்தது.

**நா**ன்காம் நாள். அன்று ஞாயிற்றுக்கிழமை. சாவித்திரி அம்மாளின் கணவர் மீண்டும் எங்கோ வெளியூருக்குப் புறப்பட்டார். அவரை அனுப்புகிற வரையில் சாவித்திரி அம்மாள் அவருக்கு வேண்டிய துணிமணிகளை எடுத்து வைப்பதும்,

'ஹோல்ட் ஆலை'க் கட்டுவதுமாக இருந்தான். உண்மையில் அவருக்குச் சாதம் கூடப் பிசைந்து கொடுத்தாள் சாவித்திரி அம்மாள். இதையெல்லாம் சந்திரிகா கவனித்தாள். புறப்படும்போது அவருக்குச் சாவித்திரி அம்மாளே 'டை' கட்டி விடுவதைக்கூட அசைப்பிலே பார்த்தாள் சந்திரிகா. காரில் ஏறும்போது சாவித்திரி அம்மாள் அவருக்கு அருகிலே போய் நின்றுகொண்டு 'உடம்பை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்ளுங்கள். தெரிந்ததா? பச்சைத் தண்ணீரில் குளிக்காதீர்கள். பிடிக்காது. குடிப்பதுகூட வெந்நீரே குடியுங்கள். நீங்கள் பாட்டுக்கு உங்களுடைய அசட்டுத் தைரியத்தில் கண்ட இடங்களிலே போய் எதையாவது சாப்பிட்டு வைக்காதீர்கள். உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது. புரிகிறதா?" என்றாள்.

இப்படிச் சாவித்திரி அம்மாள் கணவனைக் கண்டிப்போடு எச்சரிக்கும்போது, அவர் சிரித்தார். அந்தச் சிரிப்பைப் பார்த்ததும் சாவித்திரி அம்மாளுக்குக் கோபம் வந்தது.

"இந்தச் சிரிப்புத்தானே வேண்டாம் என்கிறேன். இது என்ன சிரிப்பு. 'அட அசடே' என்று என்னைக் கேலி பண்ணுகிற சிரிப்பல்லவா இது. 'நீ பாட்டுக்கு உனக்குத் தோன்றியதையெல்லாம் பைத்தியம் மாதிரிச் சொல்லிக் கொண்டிரு. நான்பாட்டுக்கு என்னுடைய காரியத்தை நடத்துகிறேன்' என்று சொல்லுகிறது அந்தத் திருட்டுச் சிரிப்பு. தெரிகிறதே. நான் ஒருத்தி இங்கே கரடியாகக் கத்துகிறேன். என்ன பிரயோஜனம்? பாருங்கள். பாருங்கள். இன்னும் சிரிக்கிறீர்களே!"

வராந்தாவில் நின்றுகொண்டு சந்திரிகா இதைக் கவனித்துக் கொண்டேயிருந்தாள். 'இல்லறம்' என்றும், 'குடும்ப வாழ்க்கை' என்றும் சொல்லுகிறார்களே, நிம்மதியான ஒரு குடும்பத்தில் அது இத்தனை ரஸமாகத்தான் இருக்கும் போலும். சாவித்திரி அம்மாள் புருஷனைக் கோபிக்கிறாளே, அந்தக் கோபத்திலே தான் எத்தனை வாஞ்சை தொனிக்கிறது! அவர்தான் சிரிக்கிறாரே, 'திருட்டுச் சிரிப்பு' என்றாளே சாவித்திரி அம்மாள், அந்தத் திருட்டுச் சிரிப்பிலே தான் எத்தனை பிரியம், எத்தனை சொந்தம் ஊடாடுகிறது! 'கொஞ்சும் மொழி பேசும் ஒரு குரல்' 'அரவணைக்கும் கைகள்' என்றெல்லாம் சாவித்திரி அம்மாள் தன்னிடம் சொன்னாளே, இவைகள் தானோ அவை?

"கவலைப்படாதே சாவித்திரி. இந்த உடம்பு எனக்குச் சொந்தமில்லை என்று எனக்கு நன்றாய்த் தெரியும். இந்த உடம்பின் சொந்தக்காரி நீ. இதை எப்படிப் பாதுகாக்க வேண்டும் என்று சொல்வதற்கு நீதானே அதிகாரி. அதைக் கேட்டு அதன்படி நடக்க வேண்டியது தானே என்னுடைய கடமை! தெரியாதா எனக்கு! அப்போ, நான் வரட்டுமா? டாட்டா... டாட்டா ... டா ஆ ஆட்டா! !"

காருக்கு வெளியே கையை நீட்டி 'டாட்டா' என்றார் அவர். சாவித்திரி அம்மாளும் "டாட்டா" என்று கையை நீட்டினாள். கார் அங்கிருந்து புறப்பட்டுக் கண் பார்வையிலிருந்து மறையும் வரை இரண்டு பேரும் "டாட்டா" சொல்லியவாறு கைகளை ஆட்டிக் கொண்டேயிருந்தார்கள்.



சந்திரிகாவுக்குப் புரியவில்லை. இது என்ன வார்த்தை "டாட்டா" என்று? திருச்சியில் எல்லாம் அவளுக்குத் தெரிந்தவரை, புருஷனும் கணவனும் இந்த மாதிரி விடைபெற்றுக் கொள்ளுவதை அவள் பார்த்ததேயில்லை. அதிலும் "டாட்டா" என்று குரலை ஏற்றியும் தாழ்த்தியும் சொல்லுகிற அந்த பாஷை அவளுக்கு முற்றிலும் புதுமையாக இருந்தது!

'டாட்டாமில்புடவை' என்றும் 'டாட்டா நகர்' என்றும் சொல்லக் கேட்டிருக்கிறாள். மற்றப்படி 'தாத்தா' என்ற தமிழ்

**கல்கி மொழி**

அவளுடைய மனக்கண் முன்னால் உலகமே ஒரு ஆனந்த நந்தவனமாகத் தோன்றியது. அந்த நந்தவனத்திலிருந்த மரங்களும் செடிகளும் பல வர்ணப் புஷ்பங்களுடன் குலுங்கின. அந்த நந்த வனத்தில் குயில்கள் பாடின; மயில்கள் ஆடின; மான்கள் துள்ளி ஓடின; கிளிகள் மழலை பேசின; புறாக்கள் கொஞ்சி முத்தமிட்டன; சந்தன மரங்களின் சுகந்தத்துடன் மந்தமாருதம் வீசியது. இத்தகைய ஆனந்த நந்த வனத்தில் சீதாவின் உள்ளம் சஞ்சரித்துக் கொண்டிருந்தபோது தூரத்தில் எங்கேயோ கடல் பொங்கி மலைபோல் அலைகள் கிளம்பி மோதி விழும் சத்தமும் கேட்டுக் கொண்டிருந்தது.

— அலை ஓசை

வார்த்தை அவளுக்குத் தெரியும். ஆனால் இது என்ன 'டாட்டா' வார்த்தை? ஒரு வேளை ஹிந்தியாக இருக்குமோ என்று நினைத்தாள். 'இராது. இவர்கள் எல்லாம் இங்கிலீஷ் முறையிலே நடப்பவர்கள் ஆயிற்றே. ஒரு வேளை இங்கிலீஷ்காரர்களின் பாஷையில் 'டாட்டா' என்றால் நமஸ்காரம் என்று இருக்கும். எதற்கும் சௌகரியமாக ஒரு நாள் சாவித்திரி அம்மாளிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்' என்று தீர்மானித்தாள் சந்திரிகா.

உள்ளே வரும்போதே சாவித்திரி அம்மாள் கேட்டாள்: "என்ன சந்திரிகா நான் அவரை இத்தனை கோபித்தேனே என்று பார்க்கிறாயா? ஆமாம் அம்மா. இந்தப் புருஷர்களே எப்பொழுதும் இப்படித்தான். வீட்டை விட்டு கிளம்பினதும் எல்லாம் மறந்து போய் விடும் அவர்களுக்கு. பச்சைத் தண்ணீரில் குளிப்பது, சனி புதனில் எண்ணெய் முழுகுவது இல்லை, கண்ட கண்ட சமயத்தில் எல்லாம் காப்பியைக் குடிப்பது - உடம்பைக் கெடுத்துக்கொண்டு வந்து நிற்பது. நம்முடைய பிராணனை எடுப்பது! நீதான் பாரேன், எப்படிச் சிரிக்கிறார் அவர் என்று! பைத்தியம் உளறுகிறது என்று என்னைப் பற்றி நினைப்பு!"

இப்படிச் சொல்லும் போது சாவித்திரி அம்மாளின் வார்த்தைகளிலேதான் எத்தனை கொஞ்சல்!

"சந்திரிகா! என் தம்பி இருக்கிறானே அவனும் இப்படியேதான்! அதிலும் வேலை என்று உட்கார்ந்து விட்டானே, ஒன்றுமே தெரியாது. பசி எடுக்காது. தாகம் இராது. விடிய விடியக் கண் முழித்து எழுதிக் கொண்டேயிருப்பான். சில நாட்களில் எனக்கே பொறுக்காமல் நான் போய் ஒரு 'டோஸ்' விட்டால்தான் எழுந்து சாப்பிட வருவான்! பாவம், டெல்லியில் எப்படியிருக்கிறானோ? எந்த ஹோட்டலில் என்ன சாப்பிடுகிறானோ? என்னவோ அம்மா, அவனுக்கு ஒரு கால்கட்டுப் போடுகிற வரையில் நமக்கு இந்தக் கவலை. பிறகு நமக்கு என்ன! அவன்பாடு அவன் பெண்டாட்டி பாடு என்று விட்டுவிட வேண்டியதுதான். அதன் பிறகு நாம் தலையிட்டாலும் 'நீயார் என் புருஷனைக் கேட்க?' என்று அந்த அம்மாள் சண்டைக்கு வந்தாலும் வந்து விடுவாள். அதுவும் நியாயந்தான் என்று வையேன்! கல்யாணம் ஆகிறவரை அக்காளுக்குத் தம்பி. கல்யாணம் ஆகிவிட்டதோ, பெண்டாட்டிக்குப் புருஷன்! நம் யாருக்கும் இல்லாத உரிமை அந்த அம்மணி அம்மாளுக்கு வந்துவிடும்! தம்பியோடு பேசக்கூடாது என்று அவள் நம்மைச் சொன்னாலுங் கூடக் கேட்க வேண்டியது தான்! என்ன, சந்திரிகா, நான் சொல்வது சரிதானே?"

சாவித்திரி அம்மாள் பொரிந்து தள்ளினாள். சந்திரிகா மௌனமாகக் கேட்டுக் கொண்டே அறைக்குள்ளே வந்து உட்கார்ந்தாள். "கொஞ்சும் மொழிகள்" "அரவணைக்கும் கைகள்" என்ற வார்த்தைகளுக்கு விளக்கம் செய்வது போல் இருந்தது அது. அன்றிரவும் அவளுக்கு உறக்கம் இல்லை!

மறு நாட் காலை சந்திரிகா படுக்கையிலிருந்து எழுந்திருப்பதற்கு முன்னால் சாவித்திரி அம்மாள் அவசரமாக உள்ளே வந்தாள், "சந்திரிகா! நான் கொஞ்சம் ஸ்டேஷன் வரை போய்விட்டு வருகிறேன். ஒரு முக்கியமான விருந்து வருகிறது!" என்று சொல்லிக் கொண்டே.

சந்திரிகா எழுந்து ஸ்நான பானங்களை முடித்துக் கொண்டு தலையைப் பின்னி நெற்றிக்குப் பொட்டு வைத்துக் கொண்டிருக்கும்போதே வெளியே கார் வந்து நின்ற ஓசை கேட்டது.

சந்திரிகா எட்டிப் பார்த்தாள். காரிலிருந்து சாவித்திரி அம்மாளோடு மேனாட்டுப் பாணியில் உடை அணிந்திருந்த ஒரு இளைஞர் இறங்கினார். சந்திரிகா கூர்ந்து பார்த்தாள். அவளுக்குத் தூக்கி வாரிப் போட்டது! சாவித்திரி அம்மாளோடு வந்தது வேறு யாருமில்லை. அவளுடைய தம்பி ராமநாதன்தான்! (தொடரும்)

Printed & Published by T. Sadasivam at the "Kalki" Press, No. 20, Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras - 10. Editor : Mi. Pa. Somasundaram

உண்மையாக அது
சுவைமிக்கதுதான்
ரொட்டியின் மேலே தடவி
உபயோகிப்பதற்கு




— ஆனால் புளு பாண்ட்
உபயோகித்து எப்பொழுதாகிலும் கேக் முதலியவைகளைச்
சுட்டிருக்கிறீர்களா?



நல்ல சுவைக்கும், புஷ்டியைத் தருவதற்கும், புளு பாண்ட் மார்கரீனை ரொட்டி, சப்பாத்திகளின் மேல் தடவுங்கள். குடும்பத்திலுள்ள எல்லோருமே மிகவும் விரும்புவார்கள்—புளு பாண்டிலுள்ள விடமின் 'ஏ'யும், 'டீ'யும் அவர்களுக்கு ஆரோக்யத்தைத் தரும். புளு பாண்டை உபயோகித்து கேக், பைன், பேஸ்டிரீஸ் முதலியவைகளை தயார் செய்வதற்குக்கூட உபயோகியுங்கள். நீங்களே தெரிந்துகொள்வீர்கள், அது எப்படி நீங்கள் சுட்ட எல்லா தின்பண்டங்களுடைய ருசியையும் பரிமளிக்கச் செய்கிறதென்று.

வெகு சுத்தமான தாவர எண்ணெய்களிலிருந்து புளு பாண்ட் தயாரிக்கப்படுகிறது.




# புளு பாண்ட் மார்கரீன்

— குறைந்த செலவு, ஆனால் மிகவும் நல்லது!

BB. 29-50 TM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon